உ

கணபதி துணை.



திருவாலவாயுடையார் திருமுகப்பாசுரம் முதலிய

பிரபந்தங்கள் அடங்கிய

# பதினோராந் திருமுறை.

இது

புத்தூர் இராமநாதச்செட்டியார் குமாரர்

வேங்கடாசலச் செட்டியார்

கேட்டுக்கொண்டபடி

நல்லூர்

ஆறுமுகநாவலரவர்கள்

பலபிரதிரூபங்களைக்கொண்டு ஒருவாறாராய்ந்து,

சிதம்பரசைவப்பிரகாசவித்தியாசாலைத் தருமபரிபாலகர்

பொன்னம்பலபிள்ளையால்

சென்னபட்டணம்

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

இரண்டாம் பதிப்பு.

பரிதாபி௵ மார்கழிமீ.

# சிறப்புப்பாயிரம்.



மதுரைத்திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளாதீனத்து

வித்துவான் குறுக்கை

## குமாரசுவாமிப்பிள்ளை

இயற்றியது.



உலகுதொழு திடுமதுரைச் சிவபெருமான் வாக்கா
லுரைத்தருளுந் திருமுகப்பா சுரமுதலாப் பொருந்திக்
குலவுதெருட் பதினொராந் திருமுறையைப் புத்தூர்க்
குணமருவு மிராமநா தச்செட்டி யார்பா
னிலவுசிவ பத்தியொடு தனதனெனத் தோன்றி
நேயநிறை வேங்கடா சலக்குரிசி லச்சி
னலகில்புக ழோயியற்றித் தருகவெனச் சோதித்
தாறுமுக நாவலனச் சிறப்பதிப்பித் தனனே.

தேவாரத்திற்போலவே பதினொராந்திருமுறைப் பிரபந்தங்களிற் சிலவற்றினும் சில செய்யுள்களும் அடிகளும் ர்களும் இறந்துபோயின. இறவாதுள்ளவைகளினும் பல கப பிறழ்ந்திருக்கின்றன. பலவிடங்களினின்றும் வருவிக்கப்பட்ட பிரதிரூபங்களெல்லாவற்றினும் இக்குறைவுபாடு ந்திருக்கின்றது. ஆதலாற் சிற்றறிவினையுடைய பசுவர்க்கத்துட்பட்ட சிறியேன் சிவாநுபூதிப் பெருவாழ்வுடையோர் திருவாக்கிலே இறந்தவற்றைப் பூர்த்திசெய்தற்கும், பிறழ்ந்தவற்றை வேறு பிரதிரூபங்காணாது திருத்திவிடுதற்கும் அதிகாரியல்லேன்.

உ

# சூசீபத்திரம்.



## ௧. திருவாலவாயுடையார்.



## ௨. காரைக்காலம்மையார்.



## ௩. ஐயடிகள்காடவர்கோனாயனார்.



## ௪. சேரமான்பெருமாணாயனார்.



## ௫. நக்கீரதேவர்.

## ௬. கல்லாடனார்.



## எ. கபிலதேவர்.



## அ. பரணதேவர்.



## ௯. இளம்பெருமானடிகள்.



## க0. அதிராவடிகள்.



## கக. பட்டணத்துப்பிள்ளையார்.



## கஉ. நம்பியாண்டார்நம்பி.

ஆ. பிரபந்தங்கள் ௪0.



உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# பதினோராந் திருமுறை.

திருவாலவாயுடையார்

அருளிச்செய்த

## திருமுகப்பாசுரம்.

மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவு பானிற வரிச்சிற
கன்னம் பயில்பொழி லால வாயின்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க
பண்பா லியாழ்பயில் பாண பத்திரன்
றன்போ லென்பா லன்பன் றன்பாற்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்.

காரைக்காலம்மையார்

அருளிச்செய்த

# திருவாலங்காட்டு மூத்ததிருப்பதிகம்.

பண் நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

கொங்கைதிரங்கிநரம்பெழுந்துகுண்டுகண்வெண்பற்குழிவயிற்றுப், பங்கிசிவந்திருபற்கணீண்டுபரடுயர்நீள்கணைக்காலோர் பெண்பேய், தங்கியலறியுலறுகாட்டிற்றாழ்சடையெட்டுத்திசையும்வீசி, யங்கங்குளிர்ந்தனலாடுமெங்களப்பனிடந்திருவாலங்காடே. (௧)

கள்ளிக்கவட்டிடைக்காலைநீட்டிக்கடைக்கொள்ளிவாங்கிமசித்துமையை, விள்ளவெழுதிவெடுவெடென்ன நக்குவெருண்டுவிலங்குபார்த்துத், துள்ளிச்சுடலைச்சுடுபிணத்தீச் சுட்டிடமுற்றுஞ்சுளிந்துபூழ்தி, யள்ளியவிக்கநின்றாடுமெங்க ளப்பனிடந்திருவாலங்காடே. (௨)

வாகைவிரிந்துவெண்ணெற்றொலிப்பமயங்கிருள்கூர் நடுநாளையாங்கே, கூகையொடாண்டலைபாடவாந்தை கோடதன்மேற்குதித்தோடவீசி,யீகைபடர்தொடர்கள்ளிநீழலீமமிடுசுடுகாட்டகத்தே. யாகங்குளிர்ந்தனலாடுமெங்க ளப்பனிடந்திருவாலங்காடே.(௩

குண்டிலோமக்குழிச்சோற்றைவாங்கிக் குறுநரிதின்னவதனைமுன்னே, கணடிலோமென்றுகனன்றுபேய்கள் கையடித்தோடிடுகாடரங்கா, மண்டலநின்றங்குளாளமிட்டுவாதித்துவீசியெடுத்தபாத, மண்டமுறநிமிர்ந்தாடுமெங்களப்பனிடந்திருவாலங்காடே.

விழுதுநிணத்தைவிழுங்கியிட்டுவெண்டலைமாலைவிரவப்பூட்டிக கழுதுதன்பிள்ளையைக்காளியென்றுபேரிட்டுச்சீருடைத்தாவளர்

த்துப், புழுதிதுடைத்து முலைகொடுத்துப்போயினதாயை வாங்கா
ளு, தழுதறங்கும்புறங்காட்டிலாடுமப்பனிடந்திருவாலங்காடே.

பட்டடிநெட்டுகிர்ப்பாறுகாற்பேயபருந்தொடுகூடைட
டையாந்தை, குட்டியிடமுட்டைகூகைபேய்கள் குறுநரிசெ
ணங்காடுகாட்டிற், பிட்டடித்துப்புறங்காட்டிலிட்ட பிணந்
பபேரப்புரட்டியாங்கே, யட்டமேபாயநின்றுடுமெங்க
டந்திருவாலங்காடே. (௪)

சுழலுமழல்விழிக்கொள்ளிவாய்ப்பேய் சூழ்ந்துதுணங்
ட்டோடியாடித், தழலுளெரியும்பிணத்தைவாங்கித் தான
ன்றணங்காடுகாட்டிற், கழலொலியோசைச்சிலம்பொலிய
லுயர்வட்டணையிட்டுநட்ட, மழலுமிழ்ந்தோரிகதிக்கவா
னிடந்திருவாலங்காடே. (௫)

காடுநகருந்திரிந்துசென்றுநன்னெறிநாடிநயந்தவரை
முடிமுதுபிணத்திட்டமாடேமுனனியபேயக்கணஞ்சூழ
காடுங்கடலுமலையுமண்ணும் விண்ணுஞ்சுழலவனல்கையேந்தி
யாடுமரவப்புயங்கனெங்க ளப்பனிடந்திருவாலங்காடே. (௬)

துத்தங்கைக்கிள்ளைவிளரிதார முழையினியோசைபண்கெழு
பபாடிச், சச்சரிகொக்கரைதக்கையோடு தகுணிதந்துந்துபிதா
ளவீணை, மத்தளங்கரடிகைவன்கைமென்றோற் றமருகங்குட
முழாமொந்தைவாசித், தத்தனைவிரவினோடாடுமெங்க ளப்பனிட
திருவாலங்காடே. (௭)

புந்திகலங்கிமதிமயங்கி யிறந்தவரைப்புறங்காட்டிலிட்டு
சந்தியில்வைத்துக்கடமைசெய்து தக்கவரிட்டசெந்தீவிளக்க
முந்தியமரர்முழவினோசை திசைகதுவச்சிலம்பார்க்கவார்க்க
வந்தியின்மாநடமாடுமெங்களப்பனிடந்திருவாலங்காடே. (௧௦)

ஒப்பினையில்லவன்பேய்கள்கூடி யொன்றினையொன்றடித்தொக
க்கலித்துப், பப்பினையிட்டுப்பகண்டைபாடப் பாடிருந்தநரி
முழைப்ப, வப்பனையணிதிருவாலங்காட்டு ளடிகளைச்செடிச்சே

காரைக்காற்பேய், செப்பியசெந்தமிழ்பத்தும்வல்லார்சிவகதிசேர்ந்தின்பமெய்துவாரே. (கக)

**திருச்சிற்றம்பலம்.**

—oo:o:oo—

## மூத்ததிருப்பதிகம் பண் இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

எட்டியிலவமீகைசூரைகாரைபடர்ந்தெங்குஞ்
சுட்டசுடலைசூழ்ந்தகள்ளிசோர்ந்தகுடர்கௌவப்
பட்டபிணங்கள்பரந்தகாட்டிற்பறைபோல்விழிகட்பேய்
கொட்டமுழவங்கூளிபாடக்குழகனாடுமே. (க)

நிணங்காணுருகிநிலந்தானனைப்பநெடும்பற்குழிகட்பேய்
துணங்கையெறிந்துசூழுநோக்கிச்சுடலைநவிழ்த்தெங்குங்
கணங்கள்கூடிப்பிணங்கண்மாந்திக்களித்தமனத்தவாய்
அணங்குகாட்டிலனல்கையேந்தியழகனாடுமே. (உ)

புட்கள்பொதுத்தபுலால்வெண்டலையைப்புறமேநரிகவ்வ
அட்டென்றழைப்பவாந்தைவீசவருகேசிறுகூகை
முட்டைகவிழ்க்கவூமன்வெருட்டவோரிகதித்தெங்கும்
சிட்டநட்டம்பேணுமிறைவன்பெயரும்பெருங்காடே. (ஙு)

செத்தபிணத்தைத்தெளியாதொருபேய்சென்றுவிரல்சுட்டிக்
கத்தியுறுமிக்கனல்விட்டெறிந்துகடக்கப்பாய்ந்துபோய்ப்
பத்தல்வயிற்றைப்பதைக்கமோதிப்பலபேயிரிந்தோடப்
பித்தவேடங்கொண்டுநட்டம்பெருமானாடுமே. (ச)

முள்ளிதீந்துமுளரிகருகிமூளைசொரிந்துக்குக்
கள்ளிவற்றிவெள்ளில்பிறங்குகடுவெங்காட்டுள்ளே
புள்ளியுழைமான்றோலொன்றுடுத்துப்புலித்தோல்பியற்கிட்டுப்
பள்ளியிடமுமதுவேயாகப்பரமனாடுமே. (ரு)

வாளைக்கிளரவளைவாளெயிற்றுவண்ணச்சிறுகூகை
மூளைத்தலையும்பிணமும்விழுங்கிமுரலுமுதுகாட்டிற்
றாளிப்பனையினிலைபோல்மயிர்க்கட்டழல்வாயழல்கட்பேய்
கூளிக்கணங்கள்குழலோடியம்பக்குழகனாடுமே. (௬)

நொந்திக்கிடந்தசுடலைதடவிநுகரும்புழுக்கின்றிச்
சிந்தித்திருந்தங்குறங்குஞ்சிறுபேய்சிரமப்படுகாட்டின்
முந்தியமரர்முழவினோசைமுறைமைவழுவாமே
யந்திநிருத்தமனல்கையேந்தியழகனாடுமே. (௭)

வேய்களோங்கிவெண்முத்துதிரவெடிகொள்சுடலையு
ளோயுமுருவிலுலறுகூந்தலலறுபகுவாய
பேய்கள்கூடிப்பிணங்கண்மாந்தியணங்கும்பெருங்காட்டின்
மாயனாடமலையான்மகளுமருண்டுநோக்குமே. (௮)

கடுவனுகளுங்கழைசூழ்பொதும்பிற்கழுதும்பேயுமா
யிடுவெண்டலையுமீமப்புகையுமெழுந்தபெருங்காட்டிற்
கொடுவெண்மழுவும்பிறையுந்ததும்பக்கொள்ளென்றிசைபாடப்
படுவெண்டுடியும்பறையுங்கறங்கப்பரமனாடுமே. (௯)

குண்டைவயிற்றுக்குறியசிறியநெடியபிறங்கற்பே
யிண்டுபடர்ந்தவிருள்சூழ்மயானத்தெரிவாயெயிற்றுப்பேய்
கொண்டுகுழவிதடவிவெருட்டிக்கொள்ளென்றிசைபாட
மிண்டிமிளிர்ந்தசடைகடாழவிமலனாடுமே. (௧௦)

சூடுமதியஞ்சடைமேலுடையார்சுழல்வார்திருநட்ட
மாடுமரவமரையிலார்த்தவடிகளருளாலே
காடுமலிந்தகனல்வாயெயிற்றுக்காரைக்காற்பேய்தன்
பாடல்பத்தும்பாடியாடப்பாவநாசமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்.

காரைக்காலம்மையார்

அருளிச்செய்த

# திருவிரட்டைமணிமாலை.



கிளர்ந்துந்துவெந்துயர்வந்தடும்போதஞ்சிநெஞ்சமென்பாய்
தளர்ந்திங்கிருத்தறவிர்திகண்டாய்தளராதுவந்தி
வளர்ந்துந்துகங்கையும்வானத்திடைவளர்கோட்டுவெள்ளை
யிளந்திங்களும்மெருக்கும்மிருக்குஞ்சென்னியீசனுக்கே. (க)

ஈசனவனல்லாதில்லையெனநினைந்து
கூசிமனத்தகத்துக்கொண்டிருந்து—பேசி
மறவாதுவாழ்வாரைமண்ணுலகத்தென்றும்
பிறவாமைக்காக்கும்பிரான். (உ)

பிரானென்றுதன்னைப் பன்னாள்பரவித் தொழுவாரிடர்கண்
டிரானென்னநிற்கின்றவீசன்கண்டீரினவண்டுகிண்டிப் [ரைவா
பொராநின்றகொன்றைப் பொதும்பர்க்கிடந்து பொம்மென்று
யராநின்றிரைக்குஞ்சடைச்செம்பொனீண்முடியந்தணனே. (௩)

அந்தணனைத்தஞ்சமென்றாட்பட்டாராழாமே
வந்தணைந்துகாத்தளிக்கும்வல்லாளன்—கொந்தணைந்த
பொன்கண்டாற்பூணாதேகோணாகம்பூண்டானே
யென்கண்டாய்நெஞ்சேயினி. (௪)

இனிவார்சடையினிற்கங்கையென்பாளையங்கத்திருந்த
கனிவாய்மலைமங்கைகாணிலென்செய்திகையிற்சிலையால்
முனியார்திரிபுரமூன்றும்வெந்தன்றுசெந்தீயின்மூழ்கத்
தனிவார்கணையொன்றினான்மிகக்கோத்தவெஞ்சங்கரனே. (௫)

சங்கரனைத்தாழ்ந்தசடையானையச்சடைமேற்
பொங்கரவம்வைத்துகந்தபுண்ணியனை—யங்கொருநா
ளாவாவென்றுழாமைக்காப்பானையெப்பொழுது
மோவாதுநெஞ்சேயுரை. (௬)

உரைக்கப்படுவதுமொன்றுண்டுகேட்கிற்செவ்வான்றொடை மேல், விரைக்கின்றபாம்பினையென்றுந்தொடேலிழிந்தோட்டத் தெங்குந், திரைக்கின்றகங்கையுந்தேனின்றகொன்றையுஞ்செஞ் சடைமேல், விரைக்கின்றவன்னியுஞ்சென்னித்தலைவைத்தவேதி யனே. (எ)

வேதியனைவேதப்பொருளானைவேதத்துக்
காதியனையாதிரைநன்னாளானைச்—சோதிப்பான்
வல்லேனமாய்ப்புக்குமாலவனுமாட்டாது
இல்லேனமாவென்றான்கிழ். (அ)

கீழாயினதுன்பவெள்ளக்கடற்றள்ளியுள்ளுறப்போய்
வீழாதிருந்தின்பம்வேண்டுமென்பீர்விரவார்புரங்கள்
பாழாயிடக்கண்டகண்டனெண்டோளன்பைம்பொற்கழலே
தாழாதிறைஞ்சிப்பணிந்துபன்னாளுந்தலைநின்மினே. (கூ)

தலையாயவைந்தினையுஞ்சாதித்துத்தாழ்ந்து
தலையாயினவுணர்ந்தோர்காண்பர்—தலையாய
வண்டத்தானாதிரையானாலாலமுண்டிருண்ட
கண்டத்தான்செம்பொற்கழல். (௧௦)

கழற்கொண்டசேவடிகாணலுற்றார்தம்மைப்பேணலுற்றார்
நிழற்கண்டபோழ்தத்துநில்லாவினைநிகரேதுமின்றித் [ய்த்
தழற்கொண்டசோதிச்செம்மேனியெம்மானைக்கைம்மாமலர்தூ
தொழக்கண்டுநிற்கிற்குமோதுன்னிநம்மடுந்தொல்வினையே. ()

தொல்லைவினைவந்துசூழாமுன்றொழாமே
யொல்லைவணங்கியுமையென்னு—மெல்லியலோர்
கூற்றானைக்கூற்றுருவங்காய்ந்தானைவாய்ந்திலங்கு
நீற்றானைநெஞ்சேநினை. (௧௨)

நினையாதொழுதிகண்டாய்நெஞ்சமேயிங்கோர்நஞ்சமென்று
மனையாளையுமக்கடம்மையுந்தேறியோராறுபுக்கு

நணையாச்சடைமுடிநம்பனந்தாதைநொந்தாதசெந்தீ
யணையானமரர்பிரானண்டவாணனடித்தலமே. (கங)

அடித்தலத்தினன்றரக்கனைந்நான்குதோளு
முடித்தலமுநீமுரித்தவாறென்—முடித்தலத்தி
லாறுடியாறுவனலாடியவ்வனலி
னீறுடிநெய்யாடிநீ. (கச)

நீநின்றுதானவர்மாமதின்மூன்றுநிரந்துடனே
தீநின்றுவேவச்சிலைதொட்டவாறென்றிரங்குவல்வாய்ப்
பேய்நின்றுபாடப்பெருங்காடரங்காப்பெயர்ந்துநட்டம்
போய்நின்றுபூதந்தொழச்செய்யுமொய்கழற்புண்ணியனே. ()

புண்ணியங்கள்செய்தனவும்பொய்நெறிக்கட்சாராமே
யெண்ணியோரைந்துமிசைந்தனவாற்—றிண்ணிய
கைம்மாவினீருரிவைமூவுருவும்போர்த்துகந்த
வம்மானுக்காட்பட்டவன்பு. (கசு)

அன்பாலடைவதெவ்வாறுகொன்மேலதோராடரவந்
தன்பாலொருவரைச்சாரவொட்டாததுவேயுமன்றி
முன்பாயினதலையோடுகள்கோத்தவைபார்த்துவெள்ளை
யென்பாயினவுமணிந்தங்கோரேறுகந்தேறுவதே. (கஎ)

ஏறலாலேறமற்றில்லையேயெம்பெருமா
னாறெலாம்பாயுமவிர்சடையார்—வேறோர்
படங்குலவுநாகமுமிழ்பண்டமரர்சூழ்ந்த
தடங்கடனஞ்சுண்டார்தமக்கு. (கஅ)

தமக்கென்றுமின்பணிசெய்திருப்பேமுக்குத்தாமொருநா
ளெமக்கொன்றுசொன்னாலருளுங்கொலாமிணையாதுமின்றிச்
சுமக்கின்றபிள்ளைவெள்ளேறொப்பதொன்றுதொண்டைக்கனிவா
யுமைக்கென்றுதேடிப்பெறாதுடனேகொண்டவுத்தமரே. (கக)

உத்தமராய்வாழ்வாருலந்தக்கானுற்றார்கள்
செத்தமரமடுக்கித்தீயாமு—னுத்தமனைய
நீளாழிநஞ்சுண்டனெய்யாடிதன்றிறமே
கேளாழிநெஞ்சேகிளர்ந்து. (உ0)

திருச்சிற்றம்பலம்.

காரைக்காலம்மையார்

அருளிச்செய்த

# அற்புதத்திருவந்தாதி.

பிறந்துமொழிபயின்றபின்னெல்லாங்காதல்
சிறந்துநின்சேவடியேசேர்ந்தே—னிறந்திகழு
மைஞ்ஞான்றகண்டத்துவானோர்பெருமானே
யெஞ்ஞான்றுதீர்ப்பதிடர். (க)

இடர்களையாரேனுமெமக்கிரங்காரேனும்
படருநெறிபணியாரேனுஞ்—சுடருருவி
லென்பறாக்கோலத்தெரியாடுமெம்மானார்க்
கன்பறாதென்னெஞ்சவர்க்கு. (உ)

அவர்க்கேயெழுபிறப்புமாளாவோமென்று
மவர்க்கேநாமன்பாவதல்லாற்—பவர்ச்சடைமேற்
பாகாப்போழ்சூடுமவர்க்கல்லான்மற்றொருவர்க்
காகாப்போமெஞ்ஞான்றுமாள். (ங)

ஆளானோமல்லலறியமுறையிட்டாற்
கேளாததென்கொலோகேளாமை—நீளாகஞ்
செம்மையாலுகித்திருமிடறுமற்றொன்று
மெம்மையாட்கொண்டவிறை. (ச)

இறைவனேயெவ்வுயிருந்தோற்றுவிப்பான்றோற்றி
யிறைவனேயீண்டிறக்கஞ்செய்வா—னிறைவனே

யெந்தாயெனவிரங்குமெங்கண்மேல்வெந்துயரம்
வந்தாலதுமாற்றுவான். (௫)

வானத்தானென்பாருமென்கமற்றும்பர்கோன்
றானத்தானென்பாருந்தாமென்க—ஞானத்தான்
முன்னஞ்சத்தாலிருண்டமொய்யொளிசேர்கண்டத்தா
னென்னெஞ்சத்தானென்பன்யான். (௬)

யானே தவமுடையேனென்னெஞ்சேநன்னெஞ்சம்
யானேபிறப்பறுப்பானெண்ணினேன்—யானேயக்
கைம்மாவுரிபோர்த்தகண்ணுதலான்வெண்ணீற்ற
வம்மானுக்காளாயினேன். (௭)

ஆயினேனாள்வானுக்கன்றேபெறற்கரிய
னாயினேனஃதன்றேயாமாறு—தூய
புனற்கங்கையேற்றானோர்பொன்வரையேபோல்வா
னனற்கங்கையேற்றானருள். (௮)

அருளேயுலகெலாமாள்விப்பதீச
னருளேபிறப்பறுப்பதானு—மருளாலே
மெய்ப்பொருளைநோக்கும்விதியுடையேனஞ்ஞான்று
மெப்பொருளுமாவதெனக்கு. (௯)

எனக்கினியவெம்மானையீசனையானென்று
மனக்கினியவைப்பாகவைத்தே—னெனக்கவனைக்
கொண்டேன்பிரானாகக்கொள்வதுமேயின்புற்றே
னுண்டேயெனக்கரியதொன்று. (௧௦)

ஒன்றேநினைந்திருந்தேனொன்றேதுணிந்தொழிந்தே
னொன்றேயென்னுள்ளத்தினுள்ளடைத்தே—னொன்றேகாண்
கங்கையான்றிங்கட்கதிர்முடியான்பொங்கொளிசே
ரங்கையாற்காளாமது. (௧௧)

அதுவேபிரானாமாறாட்கொள்ளுமாறு
மதுவேயினியறிந்தோமானா—லதுவே
பனிக்கணங்குகண்ணியாரொண்ணுதலின்மேலோர்
தனிக்கணங்குவைத்தார்தகவு. (கஉ)

தகவுடையார்தாமுளரேற்றாரதலஞ்சாரப்
புகவிடுதல்பொல்லாதுகண்டீர்—மிகவடர
வூர்ந்திடுமாநாகமொருநாண்மலைமகளைச்
சார்ந்திடுமேலேபாவந்தான். (கங)

தானேதனிநெஞ்சந்தன்னையுயக்கொள்வான்
றானேபெருஞ்சேமஞ்செய்யுமாற்—றானேயோர்
பூணாகத்தாற்பொலிந்துபொங்கழல்சேர்நஞ்சுமிழு
நீணாகத்தானைநினைந்து. (கச)

நினைந்திருந்துவானவர்கணீண்மலராற்பாதம்
புனைந்துமடிபொருந்தமாட்டார்—நினைந்திருந்து
மின்செய்வான்செஞ்சடையாய்வேதியனேயென்கின்றேற்
கென்செய்வான்கொல்லோவினி. (கரு)

இனியோநாமுய்ந்தோமிறைவன்றாள்சேர்ந்தோ
மினியோரிடரில்லோநெஞ்சே—யினியோர்
வினைக்கடலையாக்குவிக்குமீளாப்பிறவிக்
கனைக்கடலைநீந்தினோங்காண். (கசு)

காண்பார்க்குங்காணலாந்தன்மையனேகைதொழுது
காண்பார்க்குங்காணலாங்காதலாற்—காண்பார்க்குச்
சோதியாய்ச்சிந்தையுளேதோன்றுமேதொல்லுலகுக்
காதியாய்நின்றவரன். (கஎ)

அரனென்கோநான்முகனென்கோவரிய
பரனென்கோபண்புணரமாட்டேன்—முரணழியத்
தானவனைப்பாதத்தனிவிரலாற்செற்றானை
யானவனையெம்மானையின்று. (கஅ)

இன்றுநமக்கெளிதேமாலுக்குநான்முகறகு
மன்றுமளபபரியனானை—யெனறுமோா
மூவாமதியானைமூவேழுலகங்க
ளாவானைக்காணுமறிவு. (௧௯)

அறிவானுந்தானேயறிவிப்பான்றானே
யறிவாயறிகினறானறானே—யறிகினற
மெயபபொருளுநதானேவிரிசுடாபாராகாச
மபபொருளுநதானேயவன. (௨௦)

அவனேயிருசுடர்தீயாகாசமாவா
னவனேபுவிபுனலகாறறாவா—னவனே
யியமானனாயட்டமூாததியுமாயஞான
மயனாகிநினறானுமவநது. (௨௧)

வநதிதனைக்கொள்வதேயொக்குமிவவாளரவின
சிநதையதுதெரிநதுகாணமினறோ—வநதோ
ரிரர்நீரிருண்டனையகணடததெஙகள
பிரானீருஞ்சென்னிபபிறை. (௨௨)

பிறையும்புனலுமனலரவுஞ்சூடு
மிறைவரெமக்கிரஙகாரேனுங—கறைமிடறற
வெநதையாாககாடடபட்டேமெனறெனறிருககுமே
யெநதையாவுளளமிது. (௨௩)

இதுவனறேயீசன்றிருவுருவமாமா
றிதுவனறேயென்றனககோாசேம—மிதுவனறே
மின்னுஞ்சுடருருவாயமீணடாயெனசிநதனைக்கே
யினனுஞ்சுழலகினறதிங்கு. (௨௪)

இங்கிருந்துசொல்லுவதெனெம்பெருமானெண்ணாதே
யெங்குமபலிதிரியுமெத்திறமும—பொங்கிரவி

லீமவனத்தாடுவதுமென்னுக்கென்றுராய்வோ
நாமவனைக்காணலுற்றஞான்று. (உரு)

ஞான்றகுழற்சடைகள்பொன்வரைபோன்மின்னுவன
போன்றகறைமிடற்றான்பொன்மார்பின்—ஞான்றெங்கு
மிக்கயலேதோன்றவிளங்கிமிளிருமே
யக்கயலேவைத்தவரவு. (உசு)

அரவமொன்றாகத்துநீயந்துபூணேல்
பரவித்தொழுதிரந்தோம்பன்னாண்—முரணழிய
வொன்றாதார்மூவெயிலுமோரம்பாலெய்தானே
பொன்றாரமற்றொன்றுபூண். (உஎ)

பூணாகவொன்றுபுனைந்தொன்றுபொங்கதளி
னாணாகமேன்மிளிரநன்கமைத்துக்—கோணாகம்
பொன்முடிமேற்சூடுவதுமெல்லாம்பொறியிலியேற்
கென்முடிவதாகவிவர். (உஅ)

இவரைப்பொருளுணரமாட்டாதாரெல்லா
மிவரையிகழ்வதேகண்டீ—ரிவர்தமது
பூக்கோலமேனிப்பொடிபூசியென்பணிந்த
பேயக்கோலங்கண்டார்பிறர். (உகூ)

பிறரறியலாகாப்பெருமையருந்தாமே
பிறரறியும்பேருணர்வுந்தாமே—பிறருடைய
வென்பேயணிந்திரவிற்றீயாடுமெம்மானா
வன்பேயுந்தாமுமகிழ்ந்து. (கூ0)

மகிழ்திமடநெஞ்சேமானுடரினீயுந்
திகழ்திபெருஞ்சேமஞ்சேர்ந்தா—யிசழாதே
யாரென்பேயேனுமணிந்துழல்வார்க்காட்பட்ட
பேரன்பேயின்னும்பெருக்கு. (கூக)

பெருகொளியசெஞ்சடைமேற்பிள்ளைப்பிறையி
னொருகதிரேபோற்றொழுகிற்றொக்குந்—தெரியின்
முதற்கண்ணான்முப்புரங்களன்றெரித்தான்மூவா
நுதற்கண்ணான்றன்மார்பினூல். (௩௨)

நூலறிவுபேசிநுழைவிலாதார்திரிக
நீலமணிமிடற்றானீர்மையே—மேலுலந்த
தெக்கோலத்தெவ்வுருவாயெத்தவங்கள்செய்வார்க்கு
மக்கோலத்தவ்வுருவேயாம். (௩௩)

ஆமாறறியாவேவல்வினைகளந்தரத்தே
நாமாளென்றேத்தார்நகர்மூன்றும்—வேமா
றொருகணையாற்செற்றானையுள்ளத்தாலுள்ளி
யருகணையாதாரையடும். (௩௪)

அடுங்கண்டாய்வெண்மதியென்றஞ்சியிருள்போந்
திடங்கொண்டிருக்கின்றதொக்கும்—படங்கொ
ளணிமிடற்றபேழ்வாயரவசைத்தான்கோல
மணிமிடற்றினுள்ளமறு. (௩௫)

மறுவுடையகண்டத்தீர்வார்சடைமேனாகந்
தெறுமென்றுதேய்ந்துழலுமாவா—வுறுவான்
றளரமீதோடுமேற்றானதனையஞ்சி
வளருமோபிள்ளைமதி. (௩௬)

மதியாவடலவுணர்மாமதின்மூன்றட்ட
மதியார்வளர்சடையினானை—மதியாலே

லென்பாக்கையாய்ப்பிறவாரீண்டு. (௩௭)

லைவாளரவந்
தீண்டச்சிறுகியதேபோலாதே—பூண்டதோர்

தாரேறுபாம்புடையான் மார்பிற்றழைந்திலங்கு
கூரேறுகாரேனக்கொம்பு. (௩௮)

கொம்பினையோர்பாகத்துக்கொண்டகுழகன்ற
னம்பவளமேனியதுமுன்னஞ்—செம்பொ
னணிவரையேபோலும்பொடியணிந்தால்வெள்ளி
மணிவரையேபோலுமறித்து. (௩௯)

மறித்துமடநெஞ்சேவாயாலுஞ்சொல்லிக்
குறித்துத்தொழுதொண்டர்பாதங்—குறித்தொருவர்
கொள்ளாதகிங்கட்குறுங்கண்ணிகொண்டார்மாட்
டுள்ளாதார்கூட்டமொருவு. (௪0)

ஒருபாலுலகளந்தமாலவனாமற்றை
யொருபாலுமையவளாமென்று—மிருபாலு
நின்னுருவமாகநிறந்தெரியமாட்டோமா
னின்னுருவோமின்னுருவோநேர்ந்து. (௪௧)

நேர்ந்தரவங்கொள்ளச்சிறுகிற்றேநீயத்னை
யீர்ந்தளவேகொண்டிசையவைத்தாயோ—பேர்ந்து
வளங்குழவித்தாய்வளரமாட்டாதோவென்றோ
விளங்குழவித்திங்களிது. (௪௨)

திங்களிதுசூடிச்சில்பலிக்கென்றூர்திரியே
லெங்கள்பெருமானேயென்றிரந்து—பொங்கொளிய
வானோர்விலக்காரேல்யாம்விலக்கவல்லமே
தானேயறிவான்றனக்கு. (௪௩)

தனக்கேயடியனாய்த்தன்னடைந்துவாழு
மெனக்கேயருளாவாறென்கொன்—மனக்கினிய
சீராளன்கங்கைமணவாளன்செம்மேனிப்
பேராளன்வானோர்பிரான். (௪௪)

பிரானவனைநோக்கும்பெருநெறியேபேணிப்
பிரானவன்றன்பேரருளேவேண்டிப்—பிரானவனை
யெங்குற்றானென்பீர்களென்போல்வார்சிந்தையினு
மிங்குற்றான்காண்பார்க்கெளிது. (சரு)

எளியதிதுவன்றேயேழைகாள்யாது
மளியீரறிவிலீராவா—வொளிகொண்மிடற்
றெந்தையராப்பூண்டுழலுமெம்மானையுண்ணினைந்த
சிந்தையராய்வாழுந்திறம். (சசு)

திறத்தான்மடநெஞ்சேசென்றடைவதல்லாற்
பெறத்தானுமாதியோபேதாய்—நிறத்த
விருவடிக்கணேழைக்கொருபாகமீந்தான்
றிருவடிக்கட்சேருந்திரு. (சஎ)

திருமார்பிலேனச்செழுமருப்பைப்பார்க்கும்
பெருமான்பிறைக்கொழுந்தைநோக்கு—மொருநா
ளிதுமதியென்றொன்றாகவின்றளவுந்தேரா
ததுமதியொன்றில்லாவரா. (சஅ)

அராவிவளைத்தனையவங்குழவித்திங்கள்
விராவுகதிர்விரியவோடி—விராவுதலாற்
பொன்றோடுவெள்ளிப்புரிபுரிந்தாற்போலாவே
தன்றோடேயெப்பான்சடை. (சகூ)

சடைமேலக்கொன்றைதருகனிகள்போந்து
புடைமேவித்தாழ்ந்தனவேபோலு—முடிமேல்
வலப்பாலக்கோலமதிவைத்தான்றன்பங்கின்
குலப்பாவைநீலக்குழல். (ருo)

குழலார்சிறுபுறத்துக்கோல்வளையைப்பாகத்
தெழிலாகவைத்தேகவேண்டா—கழலார்ப்பப்

பேரிரவிலீமப்பெருங்காட்டிற்பேயோடு
மாரழல்வாய்நீயாடுமங்கு. (௫௧)

அங்கண்முழுமதியஞ்செக்கரகல்வானத்
தெங்குமினிதெழுந்தாலொவ்வாதே—செங்கட்
டிருமாலைப்பங்குடையான்செஞ்சடைமேல்வைத்த
சிரமாலைதோன்றுவதோர்சீர். (௫௨)

சீரார்ந்தகொன்றைமலர்தழைப்பச்சேணுலவி
நீரார்ந்தபேரியாறுநீத்தமாய்ப்—போரார்ந்த
நாண்பாம்புகொண்டசைத்தநம்மீசன்பொன்முடிதான்
காண்பார்க்குச்செவ்வேயோர்கார். (௫௩)

காருருவக்கண்டத்தெங்கண்ணுதலேயெங்கொளித்தா
யோருருவாய்நின்னோடுழிதருவா—னீருருவ
மேகத்தாற்செய்தனையமேனியானின்னுடைய
பாகத்தான்காணுமேபண்டு. (௫௪)

பண்டமரரஞ்சப்படுகடலினஞ்சுண்டு
கண்டங்கறுத்ததுவுமன்றியே—யுண்டு
பணிபுறுவார்செஞ்சடைமேற்பான்மதியினுள்ளே
மணிமறுவாய்த்தோன்றும்வடு. (௫௫)

வடுவன்றெனக்கருதிநீமதித்தியாயிற்
சுடுவெண்பொடிநிறத்தாய்சொல்லாய்—படுவெண்
புலாற்றலையினுள்ளூண்புறம்பேசக்கேட்டோ
நிலாத்தலையிற்சூடுவாய்நீ. (௫௬)

நீயுலகமெல்லாமிரப்பினுநின்னுடைய
தீயவரவொழியச்செல்கண்டாய்—தூய
மடவரலார்வந்துபலியிடாரஞ்சி
விடவரவமேலாடமிக்கு. (௫௭)

மிக்கமுழங்கெரியும்வீங்கியபொங்கிருளு
மொக்கவுடனிருந்தாலொவ்வாதே—செக்கர்போ
லாகத்தான்செஞ்சடையுமாங்கவன்றன்பொன்னுருவிற்
பாகத்தாள்பூங்குழலும்பண்பு. (௫அ)

பண்புணரமாட்டேனானீயேபணித்துக்காண்
கண்புணருநெற்றிக்கறைக்கண்டா—பெண்புணரு
மவ்வுருவோமாலுருவோவானேற்றாயநீறணிவ
தெவ்வுருவோநின்னுருவமேல். (௫௯)

மேலாயமேகங்கள்கூடியோர்பொன்விலங்கல்
போலாமொளிபுதைத்தாலொவ்வாதே—மாலாய
ங்கம்மாமதக்களிற்றுக்காருரிவைபோர்த்தபோ
தம்மான்திருமேனியன்று. (௬0)

அன்றுந்திருவுருவங்காணாதேயாட்பட்டே
னின்றுந்திருவுருவங்காண்கிலே—னென்றுந்தா
னெவ்வுருவோனும்பிரானென்பார்கட்கென்னுரைக்கே
னெவ்வுருவோநின்னுருவமேது. (௬௧)

ஏதொக்குமேதொவ்வாதேதாகுமேதாகா
தேதொக்குமென்பதனையாரறிவார்—பூதப்பால்
வில்வேடனாகிவிசயனோடேற்றநாள்
வல்வேடனானவடிவு. (௬௨)

வடிவுடையசெங்கதிர்க்குமாறாய்ப்பகலே
நெடிதுலவிநின்றெறிக்குங்கொல்லோ—கடியுலவு
சொன்முடிவொன்றில்லாதசோதியாய்சொல்லாயர்
ணின்முடிமேற்றிங்கணிலா. (௬௩)

நிலாவிலங்குவெண்மதியைநேடிக்கொள்வான்போ
லுலாவியுழிதருமாகொல்லோ—நிலாவிருந்த

செக்கரவ்வானமேயொக்குந்திருமுடிக்கே
புக்கரவங்காலையேபோன்று. (சுச)

காலையேபோன்றிலங்குமேனிகடும்பகலின்
வேலையேபோன்றிலங்கும்வெண்ணீறு—மாலையின்
றாங்குருவேபோலுஞ்சடைக்கற்றைமற்றவற்கு
வீங்கிருளேபோலுமிடறு. (சுரு)

மிடற்றில்விடமுடையீரும்மிடற்றைநக்கி
மிடற்றில்விடங்கொண்டவாறே—மிடற்றகத்து
மைத்தாமிருள்போலும்வண்ணங்கரிதாலோ
பைத்தாடுநும்மார்பிற்பாம்பு. (சுசு)

பாம்புமதியுமடமானும்பாய்புலியுந்
தாம்பயின்றுதாளருவிதூங்குதலா—லாம்பொ
னுருவடிவிலோங்கொலிசேர்கண்ணுதலான்கோலத்
திருவடியின்மேயசிலம்பு. (சுஎ)

சிலம்படியாளூடலைத்தான்றவிர்ப்பான்வேண்டிச்
சிலம்படிமேற்செவ்வரத்தஞ்சேர்த்தி—நலம்பெற்
றெதிராயசெக்கரினுமிக்கோலஞ்செய்தான்
முதிராமதியான்முடி. (சுஅ)

முடிமேற்கொடுமதியான்முக்கணானல்ல
வடிமேற்கொடுமதியோங்கூற்றைப்—படிமேற்
குனியவலமாமடிமைகொண்டாடப்பெற்றே
மினியவலமுண்டோவெமக்கு. (சுகூ)

எமக்கிதுவோபேராசையென்றுந்தவிரா
தெமக்கொருநாள்காட்டுதியோவெந்தா—யமைக்கவே
போந்தெரிபாய்ந்தன்னபுரிசடையாய்பொங்கிரவி
லேந்தெரிபாய்ந்தாடுமிடம். (எ0)

இடப்பாலவானத்தெழுமதியைநீயோர்
மடப்பாவைதன்னருகேவைத்தா—லிடப்பாகங்
கொண்டாண்மலைப்பாவைகூறென்றுங்கண்டிலங்காண்
கண்டாயேமுக்கண்ணாய்கண். (எக)

கண்டெந்தையென்றிறைஞ்சிக்கைப்பணியான்செய்யேனே
லண்டம்பெறினுமதுவேண்டேன்—றுண்டஞ்சேர்
விண்ணாருந்திங்களாய்மிக்குலகமேழினுக்குங்
கண்ணாளாவீதென்கருத்து. (எஉ)

கருத்தினானீகருதிற்றெல்லாமுடனே
திருத்தலாஞ்சிக்கெனநான்சொன்னேன்—பருத்தரங்க
வெள்ளநீரேற்றானடிக்கமலநீவிரும்பி
யுள்ளமேயெப்போதுமோது. (எ௩)

ஓதநெடுங்கடல்களெத்தனையுமுய்த்தட்ட
வேதுநிறைந்தில்லையென்பராற்—பேதையர்க
ளெண்ணாதிடும்பலியாலென்னோநிறைந்தவா
கண்ணார்கபாலக்கலம். (எ௪)

கலங்குபுனற்கங்கையூடாலலாலு
மிலங்குமதியியங்கலாலு—நலங்கொள்
பரிசுடையானீண்முடிமேற்பாம்பியங்கலாலும்
விரிசடையாங்காணில்விசும்பு. (எ௫)

விசும்பில்விதியுடையவிண்ணோர்பணிந்து
பசும்பொன்மணிமகுடந்தேய்ப்ப—முசிந்தெங்கு
மெந்தாய்தழும்பேறியேபாவம்பொல்லாவா
மந்தாமரைபோலடி. (எ௬)

அடிபேரிற்பாதாளம்பேருமடிகண்
முடிபேரின்மாமுகடுபேருங்—கடக

மறிந்தாடுகைபேரில்வான்றிசைகள்பேரு
மறிந்தாடுமாற்றுதரங்கு. (எஎ)

அரங்கமாப்பேய்க்காட்டிலாடுவான்வாளா
விரங்குமோவெவ்வுயிர்க்குமேழா—யிரங்குமே
லென்ணுகவையான்றுனெவ்வுலகமீந்தளியான்
பன்ணுளிரந்தாற்பணிந்து. (எஅ)

பணிந்தும்படர்சடையான்பாதங்கள்போதா
லணிந்துமணிந்தவரையேத்தத்—துணிந்தென்று
மெந்தையார்க்காட்செய்யப்பெற்றவிதுகொலோ
சிந்தையார்க்குள்ளசெருக்கு. (எகு)

செருக்கினுல்வெற்பெடுத்தவெத்தனையோதிண்டோ
ளரக்கனையுமுன்னின்றடர்த்த—திருத்தக்க
மாலயனுங்காணுதரற்றிமகிழ்ந்தேத்தக்
காலனையும்வென்றுதைத்தகால். (அ0)

காலனையும்வென்றேங்கடுநரகங்கைகழன்றே
மேலைவிருவினையும்வேரறுத்தோங்—கோல
வரணுரவிந்தழியவெந்தீயம்பெய்தான்
சரணுரவிந்தங்கள்சார்ந்து. (அக)

சார்ந்தார்க்குப்பொற்கொழுந்தேயொத்திலங்கிச்சாராது
பேர்ந்தார்க்குத்தீக்கொடியின்பெற்றியவா—நேர்ந்துணரிற்
றழ்சுடரோன்செங்கதிருஞ்சாயுந்தழல்வண்ணன்
வீழ்சடையேயென்றுரைக்குமின். (அஉ)

மின்போலுஞ்செஞ்சடையான்மாலோடுமீண்டிசைந்தா
லென்போலுங்காண்பார்கட்கென்றிரேற்—றன்போலும்
பொற்குன்றுநீலமணிக்குன்றுந்தாமுடனே
நிற்கின்றபோலுநெடிது. (அங)

நெடிதாயபொங்கெரியுந்தண்மதியுநேரே
கடிதாககடுஞ்சுடரும்போலுங்—கொடிதாக
விண்டாரகண்மும்மதிலும்வெந்தீயினிலழியக்
கண்டாலுமுக்கணுங்கண். (௮௪)

கண்ணாரக்கண்டுமென்கையாரக்கூப்பியு
மெண்ணாரவெண்ணத்தாலெண்ணியும்—விண்ணோ
னெரியாடியென்றென்றுமின்புறுவனகொலோ
பெரியானைக்காணப்பெறின். (௮௫)

பெறினும்பிறிதியாதும்வேண்டேநமக்கீ
துறினுமுறுதொழியுமேனுஞ்—சிறிதுணர்த்தி
மற்றொருகணெற்றிமேல்வைத்தான்றன்பேயாய
நற்கணத்திலொன்றாயநாம். (௮௬)

நாமாலைசூடியுநம்மீசன்பொன்னடிக்கே
பூமாலைகொண்டுபுனைந்தன்பாய—நாமோ
ரறிவினையேபற்றினலெற்றேதடுமே
யெறிவினையேயென்னுமிருள். (௮௭)

இருளின்னுருவென்கோமாமேகமென்கோ
மருளின்மணிநீலமென்கோ—வருளெமக்கு
நன்றுடையாயசெஞ்சடைமேனக்கிலங்குவெண்பிறைய
மொன்றுடையாயகண்டத்தொளி. (௮௮)

ஒளிவிலிவன்மகனையொண்பொடியாநோக்கித்
தெளிவுள்ளசிந்தையினிற்சேர்வா—யொளிநஞ்ச
முண்டவாயஃதிருப்பவுன்னுடையகண்டமிருள
கொண்டவாறென்னிதனைக்கூறு. (௮௯)

கூறெமக்கீதெந்தாய்குளிர்சடையைமீதழித்திட்
டேறமிகப்பெருகினென்செய்தி—சீறி

விழித்தூரும்வாளரவும்வெண்மதியுமீர்த்துத்
தெழித்தோடுங்கங்கைத்திரை. (௧௦)

திரைமருவுசெஞ்சடையான்சேவடிக்கேயாளா
யுரைமருவியாமுணர்ந்தோங்கண்டீர்—தெரிமினோ
விம்மைக்குமம்மைக்குமெல்லாமமைந்தோமே
யெம்மைப்புறனுரைப்பதென். (௧௧)

என்னையுடையானுமேகமாய்நின்றானுந்
தன்னையறியாததன்மையனும்—பொன்னைச்
சுருளாகச்செயதனையதூச்சடையான்வானோர்க்
கருளாகவைத்தவவன். (௧௨)

அவன்கண்டாயவானோர்பிரானாவானென்று
மவன்கண்டாயம்பவளவண்ண—னவன்கண்டாய்
மைத்தமர்ந்தகண்டத்தான்மற்றவன்பானன்னெஞ்சே
மெய்த்தமர்ந்தன்பாயநீவிரும்பு. (௧௩)

விருப்பினனீபிரியகில்லாயோவேறு
விருப்பிடமற்றில்லையோவென்னே—பொருப்பன்மகண
மஞ்சுபோன்மால்விடையாய்நிற்பிரிந்துவேறிருக்க
வஞ்சுமோசொல்லாயவள். (௧௪)

அவளோர்குலமங்கைபாகத்தகலா
ளிவளோர்சலமகளுமீதே—தவளநீ
றென்பணிவீரென்றும்பிரிந்தறியீரீங்கிவரு
ளன்பணியார்சொல்லுமினிங்கார். (௧௫)

ஆர்வல்லார்காணவரனவனையன்பென்னும்
போர்வையதனாலேபோர்த்தமைத்துச்—சீர்வல்ல
தாயத்தானாமுந்தனிநெஞ்சினுள்ளடைத்து
மாயத்தால்வைத்தோமறைத்து. (௧௬)

மறைத்துலகமேழினும்வைத்தாயோவன்றே
லுறைப்போடுமுன்கைக்கொண்டாயோ—நிறைத்திட்
டுளர்ந்தெழுந்துநீயெரிப்பமூவுலகுமுள்புக்
களர்ந்தெழுந்தசெந்தீயழல். (௯௭)

அழலாடவங்கைசிவந்ததோவங்கை
யழகாலழல்சிவந்தவாறோ—கழலாடப்
பேயாடுகானிற்பிறங்கவனலேந்தித்
தீயாடுவாயிதனைச்செப்பு. (௯௮)

செப்பேந்திளமுலையாள்காணவோதீப்படுகாட்
டப்பேய்க்கணமவைதாங்காணவோ—செப்பெனக்கொன்
றாகத்தானங்காந்தனலுமிழுமைவாய
நாகத்தாயாடுன்னடம். (௯௯)

நடக்கிற்படிநடுங்குநோக்கிற்றிசைவே
மிடிக்கினுலகனைத்துமேங்கு—மடுக்கற்
பொருமேறேவானேறேபொன்னொப்பாய்நின்னே
றுருமேறேவொன்றுவுரை. (௧00)

உரையினிம்மாலையந்தாதிவெண்பாக்
கரைவினாற்காரைக்காற்பேயசொற்—பரவுவா
ராராதவன்பினோடண்ணலைச்சென்றேத்துவார்
பேராதகாதல்பிறந்து. (௧0௧)

திருச்சிற்றம்பலம்.



உ

திருச்சிற்றம்பலம்.

ஐயடிகள்காடவர்கோனாயனார்

அருளிச்செய்த

# க்ஷேத்திரத்திருவெண்பா.



ஓடுகின்றநீர்மையொழிதலுமேயுற்றாருங்
கோடுகின்றார்மூப்புங்குறுகிற்று—நாடுகின்ற
நல்லச்சிற்றம்பலமேநண்ணாமுனன்னெஞ்சே
தில்லைச்சிற்றம்பலமேசேர். (௧)

கடுவடுத்தநீர்கொடுவாகாடிதாவென்று
நடுநடுத்துநாவடங்காமுன்னம்—பொடியடுத்த
பாழ்க்கோட்டஞ்சேராமுன்பன்மாடத்தென்குடந்தைக்
கீழ்க்கோட்டஞ்செப்பிக்கிட. (௨)

குந்திநடந்துகுனிந்தொருகைகோலூன்றி
நொந்திருமியேங்கிநுரைத்தேறி—வந்துந்தி
யையாறுவாயாறுபாயாமுனெஞ்சமே
யையாறுவாயாலழை. (௩)

காளைவடிவொழிந்துகையுறவோடையுறவாய்
நாளுமணுகிநலியாமுன்—பாளை
யவிழ்கமுகம்பூஞ்சோலையாரூரற்காளாய்க்
கவிழ்கமுகங்கூம்புகவென்கை. (௪)

வஞ்சியனாருண்ணிலடையார்வாட்டடங்கணீர்சோரக்
குஞ்சிகுறங்கின்மேற்கொண்டிருந்து—கஞ்சி
யருத்தொருத்திகொண்டுவாவென்னாமுனெஞ்சே
திருத்துருத்தியான்பாதஞ்சேர். (௫)

காலைக்கரையிழைபாற்கட்டித்தாங்கையார்த்து
மாலைதலைக்கணிந்துமைமெழுதி—மேலோர்
பருக்கோடிமூடிப்பலரழாமுன்னந்
திருக்கோடிகாவடைநீசென்று. (௬)

மாண்டுவாயங்காவாமுன்னமடநெஞ்சே
வேண்டுவாயாகிவிரைந்தொல்லைப்—பாண்டவாய்த்
தென்னிடைவாய்மேயசிவனார்திருநாம
நின்னிடைவாய்வைத்துநினை. (௭)

தொட்டுத்தடவித்துடிப்பொன்றுங்காணாது
பெட்டப்பிணமென்றுபேரிட்டுக்—கட்டி
யெடுங்களத்தாவென்னாமுன்னேமைழமடநெஞ்சே
நெடுங்களத்தான்பாதநினை. (௮)

அழுகுதிரிகுரம்பையாங்கதுவிட்டாவி
யொழுகும்பொழுதறியவொண்ணா—கழுகு
கழித்துண்டலையாமுன்காவிரியின்றென்பாற்
குழித்தண்டலையானைக்கூறு. (௯)

படிமுழுதும்வெண்குடைக்கீழ்ப்பாரெலாமாண்ட
முடியரசர்செல்வத்துமும்மை—கடியிலங்கு
தோடேந்துகொன்றையந்தார்ச்சோதிக்குத்தொண்டுபட்
டோடேந்தியுண்பதுறும். (௧௦)

குழீஇயிருந்தசுற்றங்குணங்கள்பாராட்ட
வழீஇயிருந்தவங்கங்களெல்லாந்—தழீஇயிருந்து
மென்னானைக்காவாவிதுதகாவென்னாமுன்
றென்னானைக்காவடைநீசென்று. (௧௧)

குயிலொத்திருள்குஞ்சிகொக்கொத்திருமல்
பயிலப்புகாமுன்னநெஞ்சே—மயிலைத்

திருப்புன்னையங்கானல்சிந்தியாயாகி
லிருப்பின்னையங்காந்திளைத்து. (௧௨)

காளையர்களிளையர்களாகிக்கருமயிரும்
பூளையெனப்பொங்கிப்பொலிவழிந்து—கூளையர்க
ளோகாளஞ்செயயாமுனெஞ்சமேயுஞ்சேனை
மாகாளங்கைதொழுதுவாழ்த்து. (௧௩)

இல்லும்பொருளுமிருந்தமனையளவே
சொல்லுமயலார்துடிப்பளவே—நல்ல
கிளைகுளத்துநீரளவேகிற்றியேநெஞ்சே
வளைகுளத்துளீசனையேவாழ்த்து. (௧௪)

அஞ்சனஞ்சேர்கண்ணாரருவருக்குமப்பதமாயக்
குஞ்சிவெளுத்துடலங்கோடாமுன்—னெஞ்சமே
போயக்காடுகூடப்புலம்பாதுபூம்புகார்ச்
சாயக்காடுகைதொழுநீசார்ந்து. (௧௫)

இட்டகுடிநீரிருநாழியோருழக்காச்
சட்டவொருமுட்டைநெய்தான்கலந்—தட்ட
வருவாச்சாரொன்றங்கழாமுன்னம்பாச்சிற
திருவாச்சிராமமேசேர். (௧௬)

சழிந்ததுநன்னெற்றுக்கட்டுவிட்டுநாறி
யொழிந்ததுடனிராவண்ண—மழிந்த
திராமலையாகொண்டுபோவென்னுமுன்னெஞ்சே
சிராமலையான்பாதமேசேர். (௧௭)

இழவாடிச்சுற்றத்தாரெல்லாருங்கூடி
விழவாடியாவிவிடாமுன்ன—மழபாடி
யாண்டானையாரமுதையன்றயன்மால்காணாமை
நீண்டானைநெஞ்சேநினை. (௧௮)

உள்ளிடத்தான்வல்லையேநெஞ்சமேயூழ்வினைகள்
கள்ளிடத்தான்வந்துகலவாமுன்—கொள்ளிடத்தின்
றென்றிருவாப்பாடியான்றெய்வமறைநான்கனையுந்
தன்றிருவாய்ப்பாடியான்றாள். (க௯)

என்னெஞ்சேயுன்னையிரந்துமுரைக்கின்றேன்
கன்னெஞ்செய்வாயாகிற்காலத்தால்—வன்னெஞ்சேய
மாகம்பத்தானையுரித்தானைவண்கச்சி
யேகம்பத்தானையிறைஞ்சு. (உ0)

கரமூன்றிக்கண்ணிடுங்கிக்கால்குலையமற்றோர்
மரமூன்றிவாய்குதட்டாமுன்னம்—புரமூன்றுந்
தீச்சரத்தாற்செற்றான்றிருப்பனந்தாட்டாடகைய
வீச்சரத்தான்பாதமேயேத்து. (உக)

தஞ்சாகமூவுலகுமாண்டுதலையளித்திட்
டெஞ்சாமைபெற்றிடினும்யான்வேண்டே—னஞ்சங்
கரந்துண்டகண்டர்தம்மொற்றியூர்பற்றி
யிரந்துண்டிருக்கப்பெறின். (உஉ)

நூற்றனைத்தோர்பல்லூழிநுண்வயிரவெண்குடைக்கீழ்
வீற்றிருந்தசெல்வம்விழையாதே—கூற்றுதைத்தா
னாடரவங்கச்சாவரைக்கசைத்தவம்மான்றன்
பாடரவங்கேட்டபகல். (உ௩)

உய்யுமருந்திதனையுண்மினெனவுற்றார்
கையைப்பிடித்தெதிரேகாட்டியக்கால்—பைய
வெழுந்திருமியான்வேண்டேனென்னுமுனெஞ்சே
செழுந்திருமயானமேசேர். (உ௪)

திருச்சிற்றம்பலம்.



உ

## திருச்சிற்றம்பலம்.

சேரமான்பெருமாணாயனார்

அருளிச்செய்த

# பொன்வண்ணத்தந்தாதி.



பொன்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணமேனிபொலிந்திலங்கு, மி
ன்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணம்வீழ்சடைவெள்ளிக்குன்றந்
தன்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணமால்விடைதன்னைக்கண்ட
வென்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணமாகியவீசனுக்கே. (௧)

ஈசனைக்காணப்பலிகொடுசெல்லவெற்றேயிவளோர்
பேயனைக்காமுறுபிச்சிகொலாமென்றுபேதையர்முன்
றாயெனையீர்ப்பத்தமியேன்றளரவத்தாழ்சடையோன்
வாவெனைப்புல்லென்றணிமைமிண்டனவாட்கண்களே. (௨)

கண்களங்கஞ்செய்யக்கைவளைசோரக்கலையுஞ்செல்ல [ப்
வொண்களங்கண்ணுதல்வேர்ப்ப வொண்கொன்றையந்தாருருவ
பெண்களங்கம்மிவள்பேதுறுமென்பதோர்பேதைநெஞ்சம்
பண்களங்கம்மிசைபாடநின்றாடும்பரமனையே. (௩)

பரமனையேபலிதேர்ந்துநஞ்சுண்டதுபன்மலர்சேர்
பிரமனையேசிரங்கொண்டுங்கொடுப்பதுபேரருளாஞ்
சரமனையேயுடம்பட்டுமுடம்பொடுமாதிடமாம்
வரமனையேகிளையாகுமுக்கண்ணுடைமாதவனே. (௪)

தவனேயுலகுக்குத்தானேமுதறான்படைத்தவெல்லாஞ்
சிவனேமுழுதுமென்பார்சிவலோகம்பெறுவர்செய்ய
வவனேயடல்விடையூர்திகடலிடைநஞ்சமுண்ட
பவனேயெனச்சொல்லுவாரும்பெறுவரிப்பாரிடமே. (௫)

இடமால்வலந்தானிடப்பாறுழாய்வலப்பாலொண்கொன்றை
வடமாலிடந்துகிறோல்வலமாழியிடம்வலமா
னிடமால்கரிதால்வலஞ்சேதிவனுக்கெழினலஞ்சேர்
குடமாலிடம்வலங்கொக்கரையாமெங்கள்கூத்தனுக்கே. (௬)

கூத்துக்கொலாமிவராடித்திரிவதுகோல்வளைகள்
பாத்துக்கொலாம்பலிதேர்வதுமேனியவளங்கொலா
மேத்துக்கொலாமிவராதரிக்கின்றதிமையவர்த
மோத்துக்கொலாமிவர்கண்டதிண்டைச்சடையுத்தமரே. (௭)

உத்தமராயடியாருலகாளததமக்குரிய
மத்தமராமதிமாடம்பதிநலஞ்சீர்மைகுன்று
வெத்தமராயும்பணிகொள்ளவல்லவிறைவர்வந்தென்
சித்தமராயகலாதுடனாடித்திரிதவரே. (௮)

திரிதவர்கண்ணுள்ளுமுள்ளத்தினுள்ளுந்திரிதரினு
மரிதவர்தன்மையறிவிப்பதாயினுமாழிநஞ்சேய்
கரிதவர்கண்டம்வெளிதவர்சாந்தங்கண்மூன்றொடொன்றும்
பரிதவர்தாமேயருள்செய்துகொள்வர்தம்பல்பணியே. (௯)

பணிபதம்பாடிசையாடிசையாகப்பணிமலரா
லணிபதங்கன்பற்கொளப்பணையத்தவர்கேயடிமை
துணிபதங்காமுறுதோலொடுநீறுடறார்த்துநல்ல
தணிபதங்காட்டிடுஞ்சஞ்சலநீயென்றணிநெஞ்சமே. (௧௦)

நெஞ்சந்தளிர்விடக்கண்ணீர்ததும்பமுகமலர
வஞ்செங்கரதலங்கூம்பவட்டாங்கமடிபணிந்து
தஞ்சொன்மலராலணியவல்லோர்கட்குத்தாழசடையான்
வஞ்சங்கடிந்துதிருத்திவைத்தான்பெருவானகமே. (௧௧)

வானகமாண்டுமந்தாகினியாடிநந்தாவனஞ்சூழ்
தேனகமாமலர்சூடிச்செல்வோருஞ்சிதவல்சுற்றிக்

கானகந்தேயத்திரிந்திரப்போருங்கனகவண்ணப்
பானிறநீற்றற்கடியருமல்லாப்படிறருமே. (௧௨)

படிறுயினசொல்லிப்பாழுடலோம்பிப்பலகடைச்சென்
றிடறுதொழிதுமெழுநெஞ்சமேயெரியாடியெம்மான்
கடறுயினநஞ்சமுண்டபிரான்கழல்சேர்தல்கண்டா
யுடறுனுளபயனுவசொன்னேனிவ்வுலகினுள்ளே. (௧௩)

உலகாளுறுவீர்தொழுமின்விண்ணுள்வீர்பணிமினித்தம்
பலகாமுறுவீர்நினைமின்பரமனொடொன்றலுற்றீர்
நலகாமலராலருச்சிமினுணரகத்துநிற்கு
மலகாமுறுவீரனடியாரையலைமின்களே. (௧௪)

அலையார்புனலனன்ஞாயிறவனிமதியம்விண்கா
ஞெலையாவுயிருடம்பாகியசோதியைத்தொக்குமினே
தலையாற்சுமந்துந்தடித்துங்கொடித்தேரரக்கனென்னே
கலையாளொருவிரற்றுங்கிலொவிட்டகாரணமே. (௧௫)

காரணன்காமரம்பாடவோர்காமரம்பூநிறத்தன்
ருரணங்காகத்தளர்கின்றதையலைத்தாங்குவர்யார்
போரணிவேற்கண்புனற்படம்போர்த்தனபூஞ்சுணங்கா
ரேரணிகொங்கையும்பொற்படமூடியிருந்தனவே. (௧௬)

இருந்தனமெய்தியுநின்றுந்திரிந்துங்கிடந்தலைந்தும்
வருந்தியவாழ்க்கைதவிர்த்திடுபோகநெஞ்சேமடவாள்
பொருந்தியபாகத்துப்புண்ணியன்புண்ணியல்சூலத்தெம்மான்
றிருந்தியபோதவன்றனேகனையுநந்தீவினையே. (௧௭)

தீவினையேனைநின்றைவரிராப்பகற்செத்தித்தின்ன
மேவினவாழ்க்கைவெறுத்தேன்வெறுத்துவிட்டேன்வினையு
மோவினதுள்ளந்தெளிந்ததுகள்ளங்கடிந்தடைந்தேன்
யாவின்செஞ்சடைமுக்கணனாரணன்பாதங்களே. (௧௮)

பாதம்புவனிசுடர்நயனம்பவனம்முயிர்ப்போங்
கோதமுடிக்கையுயர்வான்முடிவிசும்பேயுடம்பு
வேதமுகந்திசைதோண்மிகுபன்மொழிகீதமென்ன
போதமிவற்கோர்மணிநிறந்தோற்பதுபூங்கொடியே. (௧௯)

கொடிமேலிடபமுங்கோவணக்கீளுமோர்கொக்கிறகு
மடிமேற்கழலுமகலத்தினீறுமைவாயரவு
முடிமேன்மதியுமுருகலர்கொன்றையுமுவிலைய
வடிவேல்வடிவுமென்கண்ணுளெப்போதும்வருகின்றவே. (௨௦)

வருகின்றமூப்பொழிதீப்பிணிக்கூற்றம்வைகற்குவைகல்
பொருகின்றபோர்க்கொன்றுமாற்றகில்லேன்பொடிபூசிவந்துன்
னருகொன்றிநிற்கவருளுகண்டாயழல்வாயரவம்
வெருகொன்றவெண்மதிசெஞ்சடைமேல்வைத்தவேதியனே. ( )

வேதியன்பாதம்பணிந்தேன்பணிந்துமெய்ஞ்ஞானமென்னுஞ்
சோதியென்பால்கொள்ளவுற்றுநின்றேற்கின்றுதொட்டிதுதா
னீதியென்றுன்செல்வமாவதென்றேன்மேனினைப்புவண்டே
ரோதிநின்போல்வகைத்தேயிருபாலுமொழித்ததுவே. (௨௨)

ஒழித்தேன்பிறவியையூர்ந்தேனுவகையையோங்கிற்றுள்ள
மிழித்தேனுடம்பினையேலேன்பிறரிடையிம்மையும்
பழித்தேன்பழியேவிளைக்கும்பஞ்சேந்தியக்குஞ்சரமுந்
தெழித்தேன்சிவனடிசேர்ந்தேனினிமிகத்தெள்ளியனே. (௨௩)

தெள்ளியமாந்தரைச்சேர்ந்திலன்றீங்கவிபாடலுற்றே
னொள்ளியசொல்லும்பொருளும்பெறேனுரைத்தாருரைத்த
ளெள்ளியபுக்காற்கவிகளொட்டார்கடனஞ்சயின்றுய்
கொள்ளியவல்லகண்டாய்புன்சொலாயினுங்கொண்டருளே. ( )

அருளால்வருநஞ்சமுண்டுநின்றுணையமரர்குழாம்
பொருளார்கவிசொல்லயாலும்புன்சொற்கள்புணர்க்கலுற்றே

ளிருளாசறவெழின் மாமதிதோன் றவுமேன் றதென்ன
வெருளாதெதிர்சென் றுமின்மினிதானும்விரிகின்றதே. (உரு)

விரிகின்றஞாயிறுபோன்றதுமேனியஞ்ஞாயிறுசூழ்ந்
தெரிகின்றவெங்கதிரொத்ததுசெஞ்சடையச்சடைக்கீழ்ச்
சரிகின்றகாரிருள்போன்றதுகண்டமக்காரிருட்கீழ்ப்
புரிகின்றவெண்முகில்போன்றுளதாலெந்தையொண்பொடியே.

பொடிக்கின்றிலமுலைபோந்திலபற்சொற்பொருடெரியா
முடிக்கின்றிலகுழலாயினுங்கேண்மின் கண்மூரிவெள்ளங்
குடிக்கொண்டசெஞ்சடைக் கொண்டலங்கண்டன் மெய்க்கொண்
டணிந்த,கடிக்கொன்றைநாறுகின் றாளறியேன்பிறர்கட்டுரையே.

உரைவளர்நான் மறையோதியுலகமெலாந்திரியும்
விரைவளர்கொன்றைமருவியமார்பன்விரிசடைமேற்
றிரைவளர்கங்கைநுரைவளர்தீர்த்தஞ்செறியச்செய்த
கரைவளர்வொத்துளதாற்சிரமாலையெங்கண்டனுக்கே. (உஅ)

சண்டங்கரியன்கரியீருரியன்விரிதருசீ
ரண்டங்கடந்தபெருமான்சிறுமான்றரித்தபிரான்
பண்டன்பரமசிவனோர்பிரமன்சிரமரிந்த
புண்டங்கமிலன்பயிலாரமார்பனெம்புண்ணியனே. (உகூ)

புண்ணியன்புண்ணியல்வேலையன்வேலையநஞ்சனங்கக்
கண்ணியன்கண்ணியனெற்றியன்காரணன்காரியங்கும்
விண்ணியன்விண்ணியல்பாணியன்பாணிகொளவுமையாள்
பண்ணியன்பண்ணியல்பாடலுடைப்பசுபதியே. (௩0)

பதியார்பலிக்கென்றுவந்தாரொருவர்க்குப்பாவைநல்லீர்
கதியார்விடையுண்டுகண்மூன் றுளகறைக்கண்டமுண்டு
கொதியார்மழுவுண்டுகொக்கரையுண்டிறைகூத்துமுண்டு
மதியார்சடையுளமாலுளாதிவதுமங்கையர்க்கே. (௩க)

மங்கைகொங்கைத்தடத்திங்குமக்குங்குமப்பங்கநுங்கி
யங்கமெங்குந்நெகச்சங்கமங்கைத்தலத்துங்கவர்வான்
கங்கைநங்கைத்திரைப்பொங்குசெங்கண்ணரவங்கள்பொங்கிப்
பங்கிதங்கும்மலர்த்திங்கடங்கும்முடிப்பண்டங்கனே. (௩௨)

பண்டங்கன்வந்துபலிதாவென்முன்பகலோற்கிடென்றே
னண்டங்கடந்தவனன்னமென்முனயனூர்தியென்றேன்
கொண்டிங்குனையம்பெய்யென்முன்கொடித்தேரநங்கனென்றே
னுண்டிங்கமைந்ததென்றுற்கதுசொல்லவுணர்வுற்றதே. (௩௩)

உற்றடியாருலகாளவோரூணுமுறக்குமின்றிப்
பெற்றமதாவதென்றேறும்பிரான்பெருவேனெடுங்கட்
சிற்றடியாய்வெண்பற்செவ்வாயிவள்சிரமாலைக்கென்று
மிற்றிடையாம்படியாகவென்னுக்குமெலிக்கின்றதே. (௩௪)

மெலிக்கின்றவெந்தீவெயில்வாயிழுதழல்வாய்மெழுகு
தலிக்கின்றகாமங்கரதலமெல்லிதுறக்கம்வெங்கூற்
றொலிக்கின்றநீருறுதீயொளியார்முக்கணத்தர்மிக்க
பலிக்கென்றுவந்தார்கடிக்கொன்றைசூடியபல்லுயிரே. (௩௫)

பல்லுயிர்பாகமுடறலைதோல்பகலோன்மறல்பெண்
வில்லியோர்வேதியன்வேழந்திரையேபறித்துதைத்துப்
புல்லியுஞ்சுட்டுமறுத்துமுரித்துங்கொண்டான்புகழே
சொல்லியும்பாடியுமேத்தக்கெடுநங்கள்சூழ்துயரே. (௩௬)

துயருந்தொழுமழுஞ்சோருந்துகிலுங்கலையுஞ்செல்லப்
பெயரும்பிதற்றுநகும்வெய்துயிர்க்கும்பெரும்பிணிகூர்ந்
தயருமமர்விக்குமூரிமிர்க்குமந்தோவிங்ஙனே
மயருமறைக்காட்டிறைக்காட்டகப்பட்டவாணுதலே. (௩௭)

வாணுதற்கெண்ணநன்றன்றுவளர்சடையெந்தைவந்தா
ஞணுதற்கெண்ணுள்பலிகொடுசென்றுநகுயர்ந்து

பேணுதற்கெண்ணும்பிரமன்றிருமாலவர்க்கரிய
தாணுவுக்கென்னுேவிராப்பகலேந்திவடாழ்கின்றதே. (௩௮)

தாழுஞ்சடைசடைமேலதுகங்கையக்கங்கைநங்கை
வாழுஞ்சடைசடைமேலதுதிங்களத்திங்கட்பிள்ளை
போழுஞ்சடைசடைமேலதுபொங்கரவவ்வரவம்
வாழுஞ்சடைசடைமேலதுகொன்றையெம்மாமுனிக்கே. (௩௯)

முனியேமுருகலர்கொன்றையினுயென்னைமூப்பொழித்த
கனியேகழலடியல்லாற்களைகண்மற்றுென்றுமிலே
னினியேலிருந்தவஞ்செய்யேன்றிருந்தவஞ்சேர்நினைந்து
தனியேன்படுகின்றசங்கடமார்க்கினிச்சாற்றுவனே. (௪0)

சாற்றுவன்கோயிற்றலையுமனமுந்தவமிவற்று
லாற்றுவனன்பெனுநெய்சொரிந்தார்த்தியஞ்சொன்மலரா
லேற்றுவனீசன்வந்தென்மனத்தானென்றெழுந்தலரே
தூற்றுவன்றேத்திரமாயினவேயினிச்சொல்லுவனே. (௪௧)

சொல்லாதனகொழுநாவல்லசோதியுட்சோதிதன்பேர்
செல்லாச்செவிமரந்தேறித்தொழாதகைமண்டிணிந்த
கல்லாநினையாமனம்வணங்காத்தலையும்பொறையா
மல்லாவவயவந்தானுமனிதர்க்கசேதனமே. (௪௨)

தனக்குன்றமாவையஞ்சங்கரன்றன்னருளன்றிப்பெற்றுன்
மனக்கென்றுநஞ்சிற்கடையாநினைவன்மதுவிரியும்
புனக்கொன்றையானருளாற்புழுவாகிப்பிறந்திடினு [னே.
மெனக்கென்றும்வானவர்பொன்னுலகோடொக்க வெண்ணுவ

எண்ணமிறையேபிழைக்குங்கொலாமிமையோரிறைஞ்சுந்
தண்ணம்பிறைச்சடைச்சங்கரன்சங்கக்குழையன்வந்தெ
னுண்ணன்குறைவதறிந்துமொளிமாநிறங்கவர்வான்
கண்ணுமுறங்காதிராப்பகலெய்கின்றகாமனுக்கே. (௪௪)

காமனை முன் செற்றதென் ருளவளிவள் காலனென்னுங்
காமநன் மார்பனை முன்செற்றதென் றுதன்கையெறிந்தா
ளூமுனஞ்செற்றதன் ருரையென்றேற்கிருவர்க்குமஞ்சி
யாமெனக்கிற்றிலரன்றெனக்கிற்றிலரந்தணரே. (சரு)

அந்தணராமிவராருருறைவதென்றேனதுவே
சந்தனை தோளியென்ருர்தலையாயசலவரென்றேன்
பந்தணைகையாயதுவுமுண்டென்ருருமையறியக்
கொந்தணைதாரீருரைமினென்றேன்றுடிகொட்டினரே. (சசு)

கொட்டுஞ்சிலபலசூழநின்ருர்க்குங்குப்புற்றெழுந்து
நட்டமறியுங்கிரீடிக்கும்பாடுநகும்வெருட்டும்
வட்டம்வருமருஞ்சாரணைசெல்லுமலர்தயங்கும்
மட்டங்கிரும்பொழில்சூழ்மறைக்காட்டரன்பூதங்களே. (சஎ)

பூதப்படையுடைப்புண்ணியரேபுறஞ்சொற்கணும்மே
லேதப்படவெழுகின்றனவாலிலையாளொடும்மைக்
காதற்படுப்பான்கணைதொட்டகாமனைக்கண்மலராற்
சேதப்படுத்திட்டகாரணநீரிறைசெப்புமினே. (சஅ)

செப்பனகொங்கைக்குத்தேமலர்க்கொன்றைநிறம்பணித்தான்
மைப்புரைகண்ணுக்குவார்புனற்கங்கைவைத்தான்மனத்துக்
கொப்பனவில்லாவொளிகிளருன்மத்தமுமமைத்தா
னப்பனையம்மனைநீயென்பெருதுநின்ருர்க்கின்றதே. (சகூ)

ஆர்க்கின்றநீருமனலுமதியுமைவாயரவு
மோர்க்கின்றயோகுமுமையுமுருவுமருவும்வென்றி
பார்க்கின்றவேங்கையுமானும்பகலுமிரவுமெல்லாங்
கார்க்கொன்றைமாலையினூர்க்குடனுகிக்கலந்தனவே. (ருo)

கலந்தனக்கென்பலர்கட்டவிழ்வார்கொன்றைகட்டரவார்
சலந்தனக்கண்ணியகானகமரடியோர்சாணகமு

நிலந்தனக்கில்லாவகதியனாகியநீலகண்டத்
தலந்தலைக்கென்னேயலந்தலையாகியழிகின்றதே. (௫௧)

அழிகின்றதாருயிராகின்றதாகுலமேறிடுமா
விழிகின்றசங்கமிருந்தமுலைமேற்கிடந்தனபீர்
பொழிகின்றகண்ணீர்புலர்ந்ததுவாய்கலைபோனவந்தார்
மொழிகின்றதென்னினிநான்மறைமுக்கண்முறைவனுக்கே. ()

முறைவனைமுப்புக்குநான்மறைக்கும்முதலேழ்கடலந்
துறைவனைச்சூழ்கயிலாயச்சிலம்பனைத்தொன்மைகுன்று
விறைவனையெண்குணத்தீசனையேத்தினர்சித்தந்தம்பா
லுறைவனைப்பாம்பனையாம்பின்னையென்சொல்லியோதுவதே. ()

ஓதவனுமமுரையவன்பல்குணமுன்னைவிட்டேன்
போதவன்பின்னேபொருந்தவன்வாழ்க்கைதிருந்தச்சென்று
மாதவமாகிடுமாதவமாவளர்புன்சடையான்
யாதவன்சொன்னானதுகொண்டொழியினியாரணங்கே. (௫௪)

ஆரணங்கின்முகமைங்கணையானகமவ்வகத்திற்
றேரணந்தோளவன்றேரகலல்குறென்மைக்கண்வந்த
பூரணகும்பமுலையிவைகாணப்புரிசடையெங்
காரணன்றொடொழுமன்போபகையோகருதியதே. (௫௫)

கருதியதொன்றில்லையாயினுங்கேண்மின்கள்காரிகையா
ளொருதினமும்முளளாகவொட்டாதொடுங்காரொடுங்கப்
பொருதநன்மால்விடைப்புண்ணியன்பொங்கிளங் கொன்றையி
தருதிர்நன்றுயிடுந்தாராவிடிற்கொல்லுந்தாழிருளே. [ன்னே

இருளார்மிடற்றுவிராப்பகறன்னால்வரைமரையாற்
பொருளார்கமழ்கொன்றையான்முல்லைபுற்றரவாடுதலாற்
றெருளார்மதிவிசும்பாற்பௌவந்தெண்புனறுங்குதலா
லருளாற்பலபலவண்ணமுமாலரனாயினனே. (௫௭)

ஆயினவந்தணர்வாய்மையரைக்கலைகைவளைகள்
போயினவாணிகர்கண்ணுறுமைந்நீர்முலையிடையே
பாயினவேள்கைக்கரபத்திரத்துக்குச்சூத்திரம்போ
லாயினபல்சடையார்க்கன்புபட்டவெம்மாயிழைக்கே. (ருஅ)

இழையார்வனமுலைவீங்கியிடையிறுகின்றதிற்றுற்
பிழையாணமக்கிவைகட்டுண்கவென்பதுபேச்சுக்கொலாங்
கழையார்கழுக்குன்றவாணனைக்கண்டனைக்காதலித்தாள்
குழையார்செவியொடுகோலக்கயற்கண்கள்கூடியதே. (ருகூ)

கூடியதன்னிடத்தானுமையாளிடத்தானையயா
றிடியபல்சடைமேற்றெரிவண்ணமெனப்பணிமின்
பாடியநான்மறைபாய்ந்ததுகூற்றைப்படர்புரஞ்சுட்
டாடியநீறுசெஞ்சாந்திவையாமெம்மயனெனவே. (சு0)

அயமேபலியிங்குமாடுளதாணுவோர்க்கிக்கிடப்
பயமேமொழியும்பசுபதியேறெம்மைப்பாய்ந்திடுமாற்
புயமேய்குழலியர்புண்ணியர்போமினிரத்தல்பொல்லா
நயமேமொழியினுநக்காமமாவும்மைநாணுதுமே. (சுக)

நாணுநடக்கநலத்தார்க்கிடையில்லைநாமெழுக
வேணுரிருந்தமிழான்மறவேனுந்நினைமினென்றும்
பூணார்முலையீர்நிருத்தன்புரிசடையெந்தைவந்தாற்
காணுவிடேன்கண்டிரவாதொழியேன்கடிமலரே. (சுஉ)

கடிமலர்க்கொன்றைதரினும்புல்லேன்கலைசாரவொட்டேன்
முடிமலர்தீண்டின்முனிவன்முலைதொடுமேற்கெடுவ
னடிமலர்வானவரேத்தநின்றுய்க்கழகல்லவென்பன்
றெடிமலர்த்தோடொடுமேற்றிருவாணைதொடங்குவனே. (சுஙா)

தொடங்கியவாழ்க்கையைவாளாதுறப்பர்துறந்தவரே
யடங்கியவேட்கையரன்பாலிலராகுகாற்பறவை

முடங்கியசெஞ்சடைமுக்கணனார்க்கன்றியிங்குமன்றிக்
கிடங்கினிற்பட்டகராவனையார்பலகேவலரே. (௬௪)

வலந்தான்கழலிடம்பாடகம்பாம்புவலமிடமே
கலந்தான்வலநீறிடஞ்சாந்தெரிவலம்பந்திடமென்
பலந்தார்வலமிடமாடகம்வேல்வலமாழியிடஞ்
சலந்தாழ்சடைவலந்தண்ணங்குழலிடஞ்சங்கரற்கே. (௬௫)

சங்கரன்சங்கக்குழையன்சரணரவிந்தந்தன்னை
யங்கரங்கூப்பித்தொழுதாட்படுமின்றொண்டீர்நமனார்
கிங்கரர்தாஞ்செய்யுங்கிழாயினமிறைகேட்டலுமே
யிங்கரமாயிரமீரவென்னெஞ்சமெரிகின்றதே. (௬௬)

எரிகின்றதீயொத்துளசடையீசற்கத்திக்கிமையோர்
சொரிகின்றபாற்கடல்போன்றதுசூழ்புனலப்புனலிற்
சரிகின்றதிங்களோர்தோணியொக்கின்றதத் தோணியுய்ப்பான்
றெரிகின்றதிண்கழைபோன்றுளதாலத்திறலரவே. (௬௭)

அரவமுயிர்ப்பவழலுமங்கங்கைகவளாய்க்குளிருங்
குரவங்குழலுமையூடற்குறைந்துருகும்மடைந்தோர்
பரவும்புகழண்ணறீண்டலும்பார்வானவைவிளக்கும்
விரவுமிடரின்பமெம்பிறைசூடியவெண்பிறையே. (௬௮)

பிறைத்துண்டஞ்சூடலுற்றேபிச்சைகொண்டனலாடலுற்றே
மறைக்கண்டம்பாடலுற்றேவெண்புநீறுமருவலுற்றே
கறைக்கண்டம்புல்லலுற்றேகடுவாயரவாடலுற்றே
குறைக்கொண்டிவளரன்பின்செல்வதென்னுக்குக்கூறுமினே. ()

கூறுமினீசனைச்செய்ம்மின்குற்றேவல்குளிர்மின்கண்க
ளூறுமின்சித்தந்தெளிமின்சிவனைச்செறுமின்செற்ற
மாறுமின்வேட்கையறுமினவலமிவைநெறியா
லேறுமின்வானத்திருமின்விருந்தாயிமையவர்க்கே. (௭௦)

இமையோர் கோணார்க்கிங் கிழித்திடனீர்மைகெட் டேந்தல்பின்
னமையாநெறிச்சென்றோராழ்ந்தசலமகளாயனைந்தே [போ
யெமையாளுடையான்றலைமகளுவங்கிருப்பவென்னே
யுமையாளவள்கீழுறைவிடம்பெற்றேவுறைகின்றதே. (எக)

உறைகின்றனரைவரோன்பதுவாயிலோர்மூன்றுளதான்
மறைகின்றவென்புநரம்போடிறைச்சியுதிரமச்சை
பறைகின்றதோல்போர்குரம்பைபயனில்லைபோயடைமி [கே.
னறைகின்றதெண்புனல் செஞ்சடைக்கொண்டோன் மலரடிக்

அடிக்கண்ணிலைதொழுதார்க்ககன்ஞாலங்கொடுத்தடிநாய்
வடிக்கண்ணிநின்னைத் தொழவளைகொண்டனைவண்டுண்கொன்
கடிக்கண்ணியாயெமக்கோருரிரண்டகங்காட்டினையாற் [றைக்
கொடிக்கண்ணிமேனல்லகொல்லேறுயர்த்தகுணக்குன்றமே. ()

குன்றெடுத்தான்செவிகண்வாய்சிரங்கணெரிந்தலற
வன்றடர்த்தற்றுகச்செற்றவனற்றவர்க்கற்றசிவன்
மன்றிடைத்தோன்றியநெல்லிக்கனிநிற்பமானுடர்பொய்
யொன்றெடுத்தோதிப்புகுவர்நரகத்துறுகுழியே. (எச)

குழிகட்கொடுநடைக்கூன்பற்கவட்டடிநெட்டிடையூ
றுழுவைத்தழைசெவித்தோன்முலைச்சூறைமயிர்ப்பகுவாய்த்
தெழிகட்டிரைகுரற்றேம்பல்வயிற்றுத்திரக்குவிரற்
கழுதுக்குறைவிடம்போல்கண்டனுடங்கடியரங்கே. (எரு)

அரங்காமணியன்றிறென்றலோர்கூற்றமதியமந்தீச்
சரங்காமனெய்யஞ்சுசந்துட்பகையாலிவடளர்ந்தா
ளிரங்காமனத்தவரில்லையிரங்கானிமையவர்தஞ்
சிரங்காமுறுவானெலும்புகொள்வானென்றன்றேமொழிக்கே.

மொழியக்கண்டான்பழிமூளக்கண்டான்பிணிமுன்னைச்சங்க
மழியக்கண்டானன்றிலீரக்கண்டான்றென்றலென்னுயிர்மேற்

சுழியக்கண்டான்றுயர்கூரக்கண்டான்றுகில்சூழ்கலையுங்
கழியக்கண்டான்றில்லைக்கண்ணுதலான்கண்டகள்ளங்களே. ( )

கள்ளவளாகங்கடிந்தடிமைப்படக்கற்றவர்த
முள்ளவளாகத்துறுகின்றவுத்தமனீண்முடிமேல்
வெள்ளவளாகத்துவெண்ணுரைசூடிவியன்பிறையைக்
கொள்ளவளாய்கின்றபாம்பொன்றுளதுகுறிக்கொண்மினே. ( )

குறிக்கொண்டிவள்பெய்தகோல்வளையேவந்துகோளிழைத்திர்
வெறிக்கொண்டவெள்ளிலம்போதோவெலும்போவிரிசடைமே
லுறைக்கொன்றையோ வுடைத்தோலோ பொடியோவுடைகலை
கறைக்கண்டரேநுமக்கென்றேசிறுமிகடவியதே. [ஞோ

கடவியதொன்றில்லையாயினுங்கேண்மின்கள்காரிகையாண்
மடவியவாறுகண்டாம்பிறைவார்சடையெந்தைவந்தாற்
கிடவியநெஞ்சமிடங்கொடுத்தாட்கவலங்கொடுத்தான்
றடவியகொம்பதன்றண்மேலிருந்துதறிக்குறுமே. (அ௦)

தறித்தாயயன்றலைசாய்த்தாய்சலந்தரனைத்தழலாப்
பொறித்தாயநங்கனைச்சுட்டாயடபுரம்புனலுஞ்சடைமேற்
செறித்தாயக்கிவைபுகழாகின்றகண்டிவள்சில்வளையும்
பறித்தாய்க்கிதுபழியாகுங்கொலாமென்றுபாவிப்பனே. (அக)

பாவிக்கும்பண்டையளல்லள்பரிசறியாள்சிறுமி
யாவிக்குங்குற்குலுநாறுமகநெகவங்கமெங்குங்
காவிக்கண்சோரும்பொச்சாப்புங்கறைமிடற்றனைக்கண்ணிற்
றவிக்கும்வெண்ணகையாளம்மெல்லோதிக்குச்சந்தித்தவே. ( )

சந்தித்தகூற்றுக்குக்கூற்றாம்பிணிக்குத்தனிமருந்தாஞ்
சிந்திக்கிற்சிந்தாமணியாகித்தித்தித்தமுதமுமாம்
வந்திக்கில்வந்தென்னைமால்செய்யும்வானோர்வணங்கநின்ற
வந்திக்கண்ணுடியினனடியார்களுக்காவனவே. (அ௩)

ஆவனயாரேயழிக்கவல்லாரமையாவுலகிற்
போவனயாரேபொதியகிற்பார்புரமூன்றெரித்த
தேவனைத்தில்லைச்சிவனைத்திருந்தடிகைதொழுது
தீவினையேனிழந்தேன்கலையோடுசெறிவளையே. (௮௪)

செறிவளையாய்நீவிரையல்குலநலங்கல்விமெய்யா
மிறையவன்றாமரைச்சேவடிப்போதென்றெல்லோருமேத்து
நிறையுடைநெஞ்சிதுவேண்டிற்றுவேண்டியநீசர்தம்பாற்
கறைவளர்கண்டனைக்காணப்பெரிதுங்கலங்கியதே. (௮௫)

கலங்கினமால்கடல்வீழ்ந்தனகார்வரையாழ்ந்ததுமண்
மலங்கினநாகமருண்டனபல்கணம்வானங்கைபோ
யிலங்கினமின்னொடுநீண்டசடையிமையோர்வியந்தா
ரலங்கனன்மாநடமார்க்கினியாடுவதெம்மிறையே. (௮௬)

எம்மிறைவன்னிமையோர்தலைவன்னுமையாள்கணவன்
மும்முறையாலும்வணங்கப்படுகின்றமுக்கணக்கற்
கெம்முறையாளிவளென்பிழைத்தாட்கிறையென்பிழைத்தா
னிம்முறையாலேகவரக்கருதிற்றெழிற்கலையே. (௮௭)

கலைதலைசூலமழுக்கனல்கண்ணுடைகட்டங்கங்கொடி
சிலையிவையேந்தியவெண்டோட்சிவற்குமனஞ்சொற்செய்கை
நிலைபிழையாதுகுற்றேவல்செய்தார்நின்றமேருவென்னு
மலைபிழையாரென்பராலறிந்தோர்களிம்மாநிலத்தே. (௮௮)

மாநிலத்தோர்கட்குத்தேவரனையவத்தேவரெல்லா
மானலத்தாற்றொழுமஞ்சடையீசனவன்பெருமை
தேனலர்த்தாமரையோன்றிருமாலவர்தேர்ந்துணராற்
பானலத்தாற்கவியாமெங்ஙனேயினிப்பாடுவதே. (௮௯)

பாடியவண்டுறைகொன்றையினான்படப்பாம்புயிர்ப்ப
வோடியதீயாலுருகியதிங்களினூறலொத்த

தாடியநீறதுகங்கையுந்தெண்ணீர்யமுனையுமே
கூடியகோப்பொத்ததாலுமைபாகமெங்கொற்றவற்கே. (௯௦)

கொற்றவனேயென்றுங்கோவணத்தாயென்றுமாவணத்தா
னற்றவனேயென்றுநஞ்சுண்டியேயென்றுமஞ்சமைக்கப்
பெற்றவனேயென்றும்பிஞ்ஞகனேயென்றுமன்மதனைச்
செற்றவனேயென்றுநாளும்பரவுமென்சிந்தனையே. (௯௧)

சிந்தனைசெய்யமனமமைத்தேன்செப்பநாவமைத்தேன்
வந்தனைசெய்யத்தலையமைத்தேன்கைதொழவமைத்தேன்
பந்தனைசெய்வதற்கன்பமைத்தேன்மெய்யரும்பவைத்தேன்
வெந்தவெண்ணீறணியீசற்கிவையான்விதித்தனவே. (௯௨)

விதித்தனவாழ்நாள்பெரும்பிணிவிச்சைகள்கொண்டுபண்டே
கொதிப்பினிலொன்றுங்குறைவில்லைகுங்குமக்குன்றனைய
பதித்தனங்கண்டனங்குன்றம்வெண்சந்தனம்பட்டனைய
மதித்தனங்கண்டனநெஞ்சினியென்செய்யும்வஞ்சனையே. (௯௩)

வஞ்சனையாலேவரிவளைகொண்டுள்ளமால்பனிப்பத்
துஞ்சும்பொழுதுமுறத்தொழுதேன்சொரிமாலருவி
யஞ்சனமால்வரைவெண்பிறைகவ்வியண்ணுந்தனைய
வெஞ்சினவானையினீருரிமூடியவீரனையே. (௯௪)

வீரனயனரிவெற்பலர்நீரெரிபொன்னெழிலார்
காரொண்கடுக்கைகமலந்துழாய்விடைதோல்பறவை
பேரொண்பதிநிறந்தாரிவரூர்திவெவ்வேறென்பரால்
யாருமறியாவகையெங்களீசர்பரிசுகளே. (௯௫)

பரியாதனவந்தபாவமும்பற்றுமற்றும்பணிந்தார்க்
குரியானெனச்சொல்லியுன்னுடனுவனெனவடியார்க்
கரியானிவனென்றுகாட்டுவனென்றென்றிவையிவையே
பிரியாதுறையுஞ்சடையானடிக்கென்றும்பேசுதுமே. (௯௬)

பேசுவதெல்லாமரன்றிருநாமமப்பேதைநல்லாள்
காய்சினவேட்கையரன்பாலதுவறுகாற்பறவை
மூசினகொன்றைமுடிமேலதுமுலேமேன்முயங்கப்
பூசினசாந்தந்தொழுமாலிவையொன்றும்பொய்யலவே. (கூள)

பொய்யாநரகம்புகினுந்துறக்கினும்போந்துபுக்கிங்
குய்யாவுடம்பினொடோர்வநடப்பபறப்பவென்று
நையாவிளியினுநானிலமாளினுநான்மறைசேர்
மையார்மிடற்றனடிமறவாவரம்வேண்டுவனே. (கூஅ)

வேண்டியநாள்களிற்பாதியுங்கங்குன்மிகவவற்று
ளீண்டியவெந்நோய்முதலதுபிள்ளைமைமேலதுமூப்
பாண்டினவச்சம்வெகுளியவாவழுக்காறிங்ஙனே
மாண்டனசேர்தும்வளர்புன்சடைமுக்கண்மாயனையே. (கூகூ)

மாயனன்மாமணிகண்டன்வளர்சடையாற்கடிமை
யினதொண்டர்துறக்கம்பெறுவதுசொல்லுடைத்தே
காய்சினவானைவளருங்கனகமலேயருகே
போயினகாக்கையுமன்றேபடைத்ததுபொன்வண்ணமே. (௪00)

ஆக்கியோன்பெயர்.

அன்றுவெள்ளானையின்மீதிமையோர்சுற்றனுகுறச்செல்
வன்றெண்டர்பின்பரிமேற்கொண்டுவெள்ளிமலேயரன்முன்
சென்றெழிலாதியுலாவரங்கேற்றியசேரர்பிரான்
மன்றிடையோதுபொன்வண்ணத்தந்தாதிவழங்கிதுவே.

திருச்சிற்றம்பலம்.

—oo—

திருச்சிற்றம்பலம்.

சேரமான்பெருமாணாயனார்

அருளிச்செய்த

# திருவாரூர்மும்மணிக்கோவை.



## அகவல்.

விரிகடல்பருகியளறுபட்டன்ன
கருநிறமேகங்கன்முகடேறி
நுண்டுளிபொழியநோக்கியொண்டொடி
பொலங்குழைமின்னப்புருவவில்லிட்
டிலங்கெழிற்செவ்வாய்கோபமூர்தரக்
கைத்தலமென்னுங்காந்தண்மலர
முத்திலங்கெயிறெனுமுல்லையரும்பக்
குழலுஞ்சுணங்குங்கொன்றைகாட்ட
வெழிலுடைச்சாயலிளமயில்படைப்ப
வுண்ணிறையுயிர்ப்பெனுமூதையூர்தரக்
கண்ணீர்ப்பெருமழைபொழிதலினுண்ணிறத்
தஞ்சனக்கொழுஞ்சேறலம்பியெஞ்சா
மணியும்பொன்னுமாசறுவயிரமு
மணிகிளரகிலுமாரமுமுரிஞ்சிக்
கொங்கையென்னுங்குவட்டிடையிழிதரப்
பொங்குபுயல்காட்டியோளேகங்கை
வருவிசைதவிர்த்தவார்சடைக்கடவு
ளரிவைபாகத்தண்ணலாரூ
ரெல்லையிலிரும்பலிசொரியுங்
கல்லோசென்றகாதலர்மனமே. (௧)

## வெண்பா.

மனமாலுருதேமற்றென்செய்யும்வாய்ந்த
கனமால்விடையுடையோன் கண்டத்—தினமாகித்
தோன்றினகார்தோன்றிலதேர்சோர்ந்தனசங்கூர்ந்தனபீர்
கான்றனநீரேந்திழையாள்கண். (உ)

## கட்டளைக்கலித்துறை.

கண்ணார்நுதலெந்தைகாமருகண்டமெனவிருண்ட
விண்ணாலுருமொடுமேலதுகீழதுகொண்டல்விண்ட
மண்ணார்மலைமேலிளமயிலான்மடமானனைய
பெண்ணாமிவளினியென்னாய்க்கழியும்பிரிந்துறைவே. (௩)

## அகவல்.

உறைகழியொள்வாண்மின்னியுருமெனு
மறைகுரன்முரசமார்ப்பக்கைபோய
வெஞ்சிலைகோலிவிரிதுளியென்னு
மின்சரந்துரந்ததுவானேநிலனே
கடியவாகியகளவநன்மலரொடு
கொடியவாகியதளவமுமந்தண்
குலைமேம்பட்டகோடலுங்கோபமோ
டலைமேம்பட்டகாந்தளுமிவற்றொடு
காயாவெந்துயர்தருமேலவரே
பொங்கிரும்புரிசைபோக்கறவளைஇக்
கங்குலும்பகலுங்காவன்மேவி
மாசறுவேந்தன்பாசறையோரே
யானேயின்னே
யலகிலாற்றலருச்சுனற்கஞ்ஞான்
றுலவாநல்வரமருளியவுத்தம
னந்தணரூர்சிந்தித்துமகிழா

மயரியமாக்களைப்போலத்
துயருழந்தழியக்கண்டுயிலாவே. (ச)

## வெண்பா.

துயிலாநோயாந்தோன்றத்தோன்றித்தீத்தோன்ற
மயிலாலவந்ததான்மாதோ—வய்லாய
வண்டத்துக்கப்பாலானந்திங்கட்கண்ணியான்
கண்டத்துக்கொப்பாயகார். (ரு)

## கட்டளைக்கலித்துறை.

காருமுழக்கொடுமின்னொடுவந்ததுகாதலர்தந்
தேருந்தெருவுஞ்சிலம்பப்புகுந்ததுசில்வளைகள்
சோருஞ்சிலைபலவங்கேநெரிந்தனதுன்னருநஞ்
சாருமிடற்றண்ணலாரூரனையவணங்கினுக்கே. (சு)

## அகவல்.

அணங்குறைநெடுவரையருமைபேணாது
மணங்கமழ்தெரியல்சூடிவைகலும்
விடுசுடர்நெடுவேன்முன்னடிவிளக்காக்
கடுவிசைக்கான்யாற்றுநெடுநீர்நீந்தி
யொருதனிபெயரும்பொழுதிற்புரிகுழல்
வானரமகளிர்நின்மல்வழங்ககலத்
தானுக்காதலாகுவரென்று
புலவியுள்ளமொடுபொருந்தாக்கண்ணள்
கலைபிணைதிரியக்கையறவெய்தி
மெல்விரனெரித்துவிம்மிவெய்துயிர்த்
தல்லியங்கோதையழலுற்றூஅங்
கெல்லையிலிருந்துயரெய்தினள்புல்லார்
திரிபுரமெரியவொருகணைதெரிந்த
வரிவையாகத்தண்ணலாரூர்

வளமலிகமலவாண்முகத்
திளமயிற்சாயலேர்திழைதானே. (எ)

## வெண்பா.

இழையார்வனமுலையீரீர்ந்தண்புனத்தி
னுழையாகப்போந்ததொன்றுண்டே—பிழையாச்சீ
ரம்மானனலாடியாரூர்க்கோனன்றுரித்த
கைம்மாளேரன்னகளிறு. (அ)

## கட்டளைக்கலித்துறை.

களிறுவழங்கவழங்காவதர்கதிர்வேறுணையா
வெளிறுவிரவவருதிகண்டாய்விண்ணினின்றிழிந்த
பிளிறுகுரற்கங்கைதாங்கியபிஞ்ஞகன்பூங்கழன்மாட்
டொளிறுமணிக்கொடும்பூணிமையோர்செல்லுமோங்கிருளே.

## அகவல்.

இருள்புரிகூந்தலுமெழினலஞ்சிதைந்தது
மருள்புரிவண்டறைமாலையும்பரிந்தது
வொண்ணுதற்றிலகமுமழிந்ததுகண்ணு
மைந்நிறமொழிந்துசெந்நிறமெய்தி
யுள்ளறிகொடுமையுரைப்பபோன்றன
சேதகம்பரந்ததுசெவ்வாய்மேதகு
குழைகெழுதிருமுகம்வியப்புள்ளுறுத்தி
யிழைகெழுகொங்கையுமின்சாந்தழிஇக்
கலையுந்துகிலுநிலையிற்கலங்கி
யென்னிதுவிளைந்தவாறெனமற்றி
தன்னதுமறிகிலமியாமேசெறிபொழி
லருகுடையாரூரமர்ந்துறையமுதன்
முருகுவிரிதெரியன்முக்கண்மூர்த்தி
மராமரச்சோலைச்சிராமலைச்சாரற்

சுரும்பிவர்நறும்போதுகொய்யப்
பெருஞ்செறுவனத்தில்யான்பிரிந்ததிப்பொழுதே. (௧௭)

## வெண்பா.

பொழுதுகழிந்தாலும்பூம்புனங்காத்தெள்கி
யெழுதுகொடியிடையாயேகான்—றொழுதமரர்
முன்னஞ்சேர்மொய்கழலான்முக்கணானன்மறையான்
மன்னுஞ்சேய்போலொருவன்வந்து. (௧௮)

## கட்டளைக்கலித்துறை.

வந்தாரெதிர்சென்றுநின்றேன்கிடந்தவண்டார்தழைக
டந்தாரவையொன்றுமாற்றகில்லேன்றக்கன்வேள்விசெற்ற
செந்தாமரைவண்ணன்றீர்த்தச்சடையன்சிராமலைவாய்க்
கொந்தார்பொழிலணிநந்தாவனஞ்சூழ்குளிர்புனத்தே. (௧௯)

## அகவல்.

புனமயிற்சாயற்பூங்குழன்மடந்தை
மனைமலிசெல்வமகிழ்தாளாகி
யேதிலனொருவன்காதலனாக
விடுசுடர்நடுவுநின்றுடுதலினிழலு
மடியகத்தொளிக்குமாரழற்கானத்து
வெவ்வினைவேடர்துடிக்குரல்வெரீஇ
மெய்விதிரெறியுஞ்செவ்விததாகி
முள்ளிலையீந்துமுளிதாளிலவமும்
வெள்ளிலும்பரந்தவெள்ளிடைமருங்கிற்
கடுங்குரற்கதநாய்நெடுங்தொடர்பிணித்துப்
பாசந்தின்றதேய்காலும்பர்
மரையதண்மெய்ந்தவுயிர்ப்புன்குரம்பை
விரிநரைக்கூந்தல்வெள்வாய்மறத்தியர்
விருந்தாயினள்கொல்லோனிருந்தாத்

கூற்றெனப்பெயரியகொடுந்தொழிலொருவ
னூற்றஞ்செற்றவண்ணலாரூர்ச்
செய்வளர்கமலச்சீறடிக்
கொவ்வைச்செவ்வாயக்குயின்மொழிக்கொடியே. (௪௩)

## வெண்பா.

கொடியேர்நுடங்கிடையாள்கொய்தாரான்பின்னே
யடியானடைந்தானாக—பொடியாக
நன்றுணரூர்முன்றெரித்தநாகஞ்சேர்திண்சிலையான்
றன்றுணருர்சூழ்ந்ததடம். (௪௪)

## கட்டளைக்கலித்துறை.

தடப்பாற்புனற்சடைச்சங்கரன்றண்மதிபோன்முகத்த
மடப்பான்மடர்கைதமலரணைச்சேக்கையிற்பாசம்பற்று
விடப்பாற்றிரியில்வெருவுமிருஞ்சுரஞ்சென்றனளாம்
படப்பாலனவல்லவாற்றமியேன்செய்பட்டனவே. (௪௫)

## அகவல்.

பட்டோர்பெயருமாற்றலுமெழுதி
நட்டகல்லுமூதூர்நத்தமும்
பரன்முரம்பதருமல்லதுபடுமழை
வரன்முறையறியாவல்வெயிற்கானத்துத்
தேனிவர்கோதைசெல்லமானினை
மஞ்சிலோதிநோக்கிநகழிந்து
நெஞ்செரிவுடைமையின்விலக்காதுவிடுக
கொங்கைக்கழிந்துகுன்றிடையடைந்த
கொங்கிவர்கோங்கமுஞ்செலவுடன்படுக
மென்றேட்குடைந்துவெயினிலைநின்ற
குன்றவேய்களுங்கூற்றடைந்தொழிக
மாயிருங்கடற்றிடைவைகலாயிரம்

பாவையைவளர்ப்போய்நீநனிபாவையை
விலக்காதுபிழைத்தனைமாதோநலத்தகு
மலைபுனலாரூரமர்ந்துறையமுதன்
கலைபமர்கையன்கண்ணுதலெந்தை
தொங்கலஞ்சடைமுடிக்கணிந்த
கொங்கலர்கண்ணியாயினகுரவே. (௧௬)

## வெண்பா.

குரவங்கமழ்கோதைகோதைவேலோன்பின்
விரவுங்கடுங்கானம்வெவ்வா—யரவஞ்
சடைக்கணிந்தசங்கரனூர்மதனன்றன்னைக்
கடைக்கணித்ததீயிற்கடிது. (௧௭)

## கட்டளைக்கலித்துறை.

சடைமலர்க்கொன்றையுந்திங்களுஞ்செங்கணரவுமங்கே
முடிமலராக்கியமுக்கணக்கன்மிக்கசெக்கரொக்கும்
படிமலர்மேனிப்பரமனடிபரவாதவர்போ
லடிமலர்நோவநடந்தோகடந்ததெம்மனையே. (௧௮)

## அகவல்.

மனையுறைகுருவிவளைவாய்ச்சேவல்
சினைமுதிர்பேடைச்செவ்விநோக்கி
யீனிலிழைக்கவேண்டியாறு
வன்பபொறைகூரமென்மென்முயங்கிக்
கண்ணுடைக்கரும்பினுண்டோடுகவரும்
பெருவளந்தழீஇயபீடுசொல்கிடக்கை
வருபுனலூரன்பார்வையாகி
மடக்கொடிமாதர்க்குவலையாய்த்தோன்றிப்
படிற்றுவாய்மொழிபலபாராட்டி
யுள்ளத்துள்ளதுதெள்ளிதிற்கரந்து

கள்ளநோக்கமொடுகைதொழுதிறைஞ்சி
டெம்மிலோயேபாணவவனே
லமரருமறியாவாதிமூர்த்தி
குமரன்றந்தைகுளிர்சடையிறைவ
னறைகழலெந்தையாரூரவனைத்
துறையிற்றூக்குமெழின்மென்காட்சிக்
கண்ணடியனையநீர்மைப்
பண்ணுடைச்சொல்லியர்தம்பாலோனே. (௧௯)

## வெண்பா.

பாலாடசொல்லியர்க்கேசொல்லுபோய்ப்பாண்மகனே
யேலாவிங்கென்னுக்கிடுகின்றாய்—மேலாய
தேத்தண்கமழ்கொன்றைச்செஞ்சடையான்றாள்சூடும்
பூந்தண்புனலூரன்பொய். (௨௦)

## கட்டளைக்கலித்துறை.

பொய்யாற்றொழினுமருளுமிறைகண்டம்போலிருண்ட
மையார்தடங்கண்மடந்தையர்கேட்கிற்பொல்லாதுவந்துன்
கையாலடிதொடல்செல்லனில்புல்லெல்கலையனைய
லையாவிவைநன்குகற்றாய்பெரிதுமழகியவே. (௨௧)

## அகவல்.

அழகுடைக்கிங்கிணியடிமிசையரற்றத்
தொழிலுடைச்சிறுபறைபூண்டுதேரீர்த்
தொருகளிறுருட்டியொண்பொடியாடிப்
பொருகளிறனையபொக்கமொடுபிற்றாழ்ந்து
பூங்குழற்சிறுதொடிதூங்குநடைபயிற்றி
யக்கரையுடுத்தையம்படைகட்டி
யொக்கரையிருக்குமொளிர்புன்குஞ்சிக்
குதலையங்கிளவிப்புதல்வன்றன்னை

யுள்ளச்சொரிந்தவெள்ளத்தீம்பா
லுடையவாகியதடமென்கொங்கை
வேண்டாதுபிரிந்தவிரிபுனலூரன்
பூண்டாங்ககலம்புல்குவனெனப்போய்ப்
பெருமடமுடையையவாழிவார்சடைக்
கொடுவெண்டிங்கட்கொழுநிலவேய்க்குஞ்
சுடுபொடியணிந்ததுளங்கொளியகலத்
தண்ணலாரூர்திண்ணிதிற்செய்த
சிறைகெழுசெம்புனல்போல
நிறைவொடுநீங்காய்நெஞ்சநீயே. (உஉ)

## வெண்பா.

நீயிருந்திங்கென்போதுநெஞ்சமேநீளிருட்க
ணாயிரங்கைவட்டித்தனலாடித்—தீயரங்கத்
தைவாயரவசைத்தானன்பனைத்தோட்கண்டமைத்த
செய்வானவூரன்றிறம். (உ௩)

## கட்டளைக்கலித்துறை.

திறமலிசின்மொழிச்செந்துவர்வாயிணையெங்கையர்க்கே
மறமலிவேலோனருளுகவார்சடையான்கடவூர்த்
துறைமலியாம்பல்பல்லாயிரத்துத்தமியேயெழினு
நறைமலிதாமரைதன்னதன்றேசொல்லுநற்கயமே. (உ௪)

## அகவல்.

கயங்கெழுகருங்கடன்முதுகுதெருவுபட
வியங்குதிமிறடவியெறியொளிநுளையர்
நெய்ம்மீன்கவரல்வேண்டிக்கைம்மிகுத்
தாலவட்டமேய்ப்பமீமிசை
முடிகெழுதருவலைவீசிமுந்நீர்க்
குடரெனவாங்கிக்கொள்ளைகொண்ட

சரிமுகச்சங்குஞ்சுடர்விடுபவளமு
மெரிகதிர்நித்திலத்தொகுதியுங்கூடி
விரிகதிர்நிலவுஞ்செக்கருந்தாரகை
யருவதுங்காட்டுமுலவாக்காட்சித்
தண்ணார்த்துறைவன்றடவரையகலங்
கண்ணுறக்கண்டதுமுதலாவொண்ணிறக்
காளமாசுணங்கதிர்மதிக்குழவியைக்
கோளிழைத்திருக்குங்கொள்கைபோல
மணிதிகழ்மிடற்றுவானவன்மருவு
மணிதிகழகலத்தண்ணலாரு
ரார்கலிவிழவினன்னதோர்
போலச்சிறந்ததுசிறுநல்லூரே. (உரு)

## வெண்பா.

ஊரெலாந்துஞ்சிபுலமெலாநள்ளென்று
பாரெலாம்பாடவிந்தபாயிருட்கட்—பேருலா
மாந்துறைவாயீசன்மணிநீர்மறைக்காட்டுப
புந்துறைவாய்மேய்ந்துறங்காபுள். (உசு)

## கட்டளைக்கலித்துறை.

பன்னூற்றாயின்றபொழுதிறுமாந்துகப்புதுறங்கி
நள்ளென்றகங்குலிருள்வாய்ப்பெருகிடவார்பனிநாட்
டுன்னுங்கலைக்கைச்சுடர்வண்ணனைத்தொழுவார்மனம்போன்
றன்னுமுருகவொருவர்நின்றோர்வந்துலாத்தருமே. (உஎ)

## அகவல்.

உலாநீர்க்கங்கையொருசடைக்கரந்து
புலானீரொழுகப்பொருகளிறுரித்த
பூதநாதனாதிமூர்த்தி
திருமடமலைமகட்கொருகூறுகொடுத்துத்த

னென்பிணைமைத்தவஞரூர்நன்பகல்
வலம்புரியடுப்பாமாமுத்தரிசி
சலஞ்சலநிறையவேற்றிநலந்திகழ்
பவளச்செந்தீமூட்டிப்பொலம்பட
லிப்பியந்துடுப்பாலொப்பத்துழாவி
யடாஅதட்டவமுதம்வாயமடுக்
கிடாஅவாயமோடுண்ணும்பொழுதிற்
றிருந்திழைப்பணைத்தோட்டேமொழிமாதே
விருந்தினரடியேறகருளுதியோவென
முலைமுகநோக்கிமுறுவலித்திறைஞ்சலி
னறைகமழ்மென்மொடைச்சிறுநுண்டுள்ளி
பொங்குபுனலூற்றதுபோலவெ
னங்கமெல்லாநதாளுயினளே. (௨௮)

## வெண்பா.

பனிவள்ள பாரோமிப்பரனலாடி
பேயினவன்பாரோம்பும்பேரருளான் — றியிலவன்
கண்ணுளஞரூர்க்கடலார்மடப்பாவை
சங்கொருங்கொங்கைக்கேதாழ்ந்து. (௨௯)

## கட்டளைக்கலித்துறை.

தாழ்ந்துகிடந்தசடைமுடிச்சங்கரன்ருள்பணியா
தாழ்ந்துகிடந்துறைவார்கிளைபோலமர்வேற்கிரங்கிச்
சூழ்ந்துகிடந்தகரைமேற்றிரையென்னுங்கைகொடுதந்து
வீழ்ந்துகிடந்தலறித்துயிலாதிவ்விரிகடலே. (௩0)

திருச்சிற்றம்பலம்.



உ

திருச்சிற்றம்பலம்.

சேரமான்பெருமாணாயனார்

அருளிச்செய்த

# திருக்கைலாயஞானவுலா.



திருமாலுநான்முகனுந்தேர்ந்துணராதன்றங்
கருமாலுறவழலாய்நின்ற—பெருமான்
பிறவாதேதோன்றினான்காணாதேகாண்பான்
றுறவாதேயாக்கைதுறந்தான்—முறைமையா
லாழாதேயாழ்ந்தானகலாதகலியா
னூழாலுயராதேயோங்கினான்—சூழொளிநூ
லோதாதுணர்ந்தானுணுகாதுநண்ணியான்
யாதுமணுகாதணுகியா—னாதி
யரியாகிக்காப்பானயனாய்ப்படைப்பா
னரனாயழிப்பவனுந்தானே—பரனாய
தேவரறியாததோற்றத்தான்றேவரைத்தான்
மேவியவாறேவிதித்தமைத்தா—னோவாதே
யெவ்வுருவில்யாரொருவருள்குவாருள்ளத்து
ளவ்வுருவாய்த்தோன்றியருள்கொடுப்பா—னெவ்வுருவுந்
தானேயாய்நின்றளிப்பான்றன்னிற்பிறிதுருவ
மேனோர்க்குங்காண்பரியவெம்பெருமா—னானந்த
சீரார்சிவலோகந்தன்னுட்சிவபுரத்தி
லேரார்திருக்கோயிலுள்ளிருப்ப—வாராய்ந்து
செங்கணமரர்புறங்கடைக்கட்சென்றீண்டி
யெங்கட்குக்காட்சியருளென்றிரப்ப—வங்கொருநாட்
பூமங்கைபொய்தீர்தரணிபுகழ்மங்கை
நாமங்கையென்றிவர்கணன்கமைந்த—சேமங்கொண்

ஞானக்கொழுந்துநகராசன்றன்மடந்தை
தேன்மொய்த்தகுஞ்சியின்மேற்சித்திரிப்ப—வூனமில்சீர்
நந்தாவனமலருமந்தாகினித்தடஞ்சேர்
செந்தாமரைமலர்நூறாயிரத்தா—ளேந்தா
வயந்தன்றெடுத்தமைத்தவாசிகைசூட்டி
நயந்திகழுநல்லுறுப்புக்கூட்டிப்—பயன்கொள்
குலமகளிர்செய்தகொழுஞ்சாந்தங்கொண்டு
நலமலியவாகந்தழீஇக்—கலைமலிந்த
கற்பகமீன்றகமழ்பட்டினையுடுத்துப்
பொற்கழல்கள்கான்மேற்பொலிவித்து—விற்பகருஞ்
சூளாமணிசேர்முடிகவித்துச்சுட்டிசேர்
வாளார்நுதற்பட்டமன்னுவித்துத்—தோளா
மணிமகரகுண்டலங்கள்காதுக்கணிந்தாங்
கணிவயிரக்கண்டிகைபொன்ஞாண்—பணிபெரிய
வாரமலைபூண்டணிதிகழுஞ்சன்ன
வீரந்திருமார்பில்வில்லிலக—வேருடைய
வெண்டோட்குக்கேயூரம்பெய்துதரபந்தனமுங்
கண்டோர்மனமகிழக்கட்டுறீஇக்—கொண்டு
கடிசூத்திரம்புனைந்துகங்கணங்கைப்பெய்து
வடிவுடையகோலம்புனைந்தாங்—கடிநிலைமே
னந்திமாகாளர்கடைகழிந்தபோழ்தத்து
வந்துவசுக்களிருக்குரைப்ப—வந்தமில்சீ
ரெண்ணருங்கீர்த்தியெழுவரிருடிகளு
மன்னன்மேலாசிகடாமுணர்த்த—வொண்ணிறத்த
பன்னிருவராதித்தர்பல்லாண்டெடுத்திசைப்ப
மன்னுமகத்தியன்யாழ்வாசிப்பப்—பொன்னியலு
மங்கிகமழ்தூபமேந்தயமன்வந்து
மங்கலவாசகத்தால்வாழ்த்துரைப்பச்—செங்க
ணிருதிமுதலோர்நிழற்கலன்களேந்த
வருணன்மணிக்கலசந்தாங்கத்—தெருவெலாம்

வாயுநனிவிளக்கமாமழைநீர்தெளிப்பத்
தூயவிர்ச்சோமன்குடையெடுப்ப—மேவியசீ
ரீசானன்வந்தடைப்பைகைக்கொள்ளவச்சுனிகள்
வாயார்ந்தமந்திரத்தால்வாழ்த்துரைப்பத்—தூய
வுருத்திரர்கடோத்திரங்கள்சொல்லக்குபேரன்
றிருத்தகுமாநிதியஞ்சிந்தக்—கருத்தமைந்த
கங்காநதியமுனையுள்ளுறுத்ததீர்த்தங்கள்
பொங்குகவரிபுடையிரட்டத்—தங்கிய
பைந்நாகமெட்டுஞ்சுடரெடுப்பப்பைந்தறுகட்
கைந்நாகமெட்டுங்கழல்வணங்க—மெய்ந்நாக
மேகம்விதானமாமின்னெலாஞ்சூழ்கொடியாய்
மேகத்துருமுமுரசறையப்—போகஞ்சேர்
தும்புருநாரதர்கள்பாடத்தொடர்ந்தெங்குங்
கொம்புருவநுண்ணிடையார்கூத்தாட—வெம்பெருமான்
விண்ணோர்பணியவுயர்ந்தவிளங்கொளிசேர்
வெண்ணார்மழவிடையைமேல்கொண்டாங்—கெண்ணார்
கருத்துடையபாரிடங்கள்காப்பொத்துச்செய்யத்
திருக்கடைகளேழ்கழிந்தபோதிற்—செருக்குடைய
சேனாபதிமயின்மேன்முன்செல்லயானைமே
லானைப்போரிந்திரன்பின்படர—வானூத
வன்னத்தேயேறியயன்வலப்பால்கைபோதக்
கன்னவிலுந்திண்டோட்கருடன்மேன்—மன்னிய
மாலிடப்பாற்செல்லமலரார்கணையைந்து
மேலிடப்பான்மென்கருப்புவில்லிடப்பா—லேல்வுடைய
சங்கணையுமுன்கைத்தடமுலையார்மேலெய்வான்
கொங்கணையும்பூவாளிகோத்தமைத்த—வெங்கணையான்
காமன்கொடிப்படைமுன்போதக்கதக்காரி
வாமன்புரவிமேல்வந்தணைய—நாமஞ்சேர்
வேழமுகத்துவிநாயகனையுள்ளுறுத்துச் [கூந்தன்
சூழ்வளைக்கைத்தொண்டைவாய்ச் செண்டை யொண்கட்—டாழ்

மங்கையொருவருஞ்சூழமடநீலி
சிங்கவடலேற்றின்மேற்செல்லத்—தங்கிய
விச்சாதரரியக்கர்கின்னரர்கிம்புருட
ரச்சாரணரரக்கரோடசுர—ரெச்சாருஞ்
சல்லரிதாளந்தகுணிதந்தத்தளகங்
கல்லலகுகல்லவடமொந்தை—நல்லியலந்
தட்டழிசங்கஞ்சலஞ்சலந்தண்ணுமை
கட்டழியாப்பேரிகாதாளங்—கொட்டும்
குடமுழவங்கொக்கரைவீணைகுழல்யா
ழிடமாந்தடாரிபடக—மிடவிய
மத்தளந்துந்துபிவாய்ந்தமுருடிவற்று
லெத்திசைதோறுமெழுந்தியம்ப—வொத்துடனே
மங்கலம்பாடுவார்வந்திறைஞ்சமல்லருங்
கிங்கரருமெங்குங்கிலுகிலுப்பத்—தங்கிய
வாருமிருதுவும்யோகுமருந்தவமு
மாருதமுத்திரையுமந்திரமு—மீறாந்த
காலங்கண்மூன்றுங்கணமுங்குணங்களும்
வாலகிலியரும்வந்தீண்டி—மேலை
யிமையோர்பெருமானேபோற்றியெழில்சே
ருமையாண்மணவாளாபோற்றி—யெமையாளுந்
தீயாடிபோற்றிசிவனேயடிபோற்றி
யீசனேயெந்தாயிறைபோற்றி—தூயசீர்ச்
சங்கரனேபோற்றிசடாமகுடத்தாயபோற்றி
பொங்கரவாபொன்னங்கழல்போற்றி—யங்கொருநா
ளாயவிழுப்போரருச்சுனனாற்றற்குப்
பாசுபதமீந்தபதம்போற்றி—தூய
மலைமேலாய்போற்றிமயானத்தாய்வானோர்
தலைமேலாய்போற்றிதாள்போற்றி—நிலைபோற்றி
போற்றியெனப்பூமாரிபெய்துபுலன்கலங்க
நாற்றிசையுமெங்குநலம்பெருக—வேற்றுக்

கொடியும்பதாகையுங்கொற்றக்குடையும்
வடிவுடையதொங்கலுஞ்சூழ்க—கடிகமழும்
பூமான்கருங்குழலாருள்ளம்புகுதூண்பான்
வாமானவீசன்வரும்போழ்திற்—சேமேலே

## சூழாங்கள்.

வாமானவீசன்மறுவில்சீர்வானவர்தங்
கோமான்படைமுழக்கங்கேட்டலுமே—தூமாண்பில்
வானநீர்தாங்கிமறையோம்பிவான்பிறையோ
னேமில்குலமுடையவா—யீனமிலா
வெள்ளையணிதலால்வேழத்துரிபோர்த்த
வள்ளலேபோலும்வடிவுடைய—வொள்ளிய
மாடநடுவின்மலராரமளியே
கூடியகோர்க்களமாக்குறித்துக்—கேழில்
சிலம்புபறையாகச்சேயரிக்கணம்பா
விலங்குகொடும்புருவம்வில்லா—நலந்திகழுங்
கூழையின்குழுவளையார்ப்பக்கைபோந்து
கேழ்கிளருமல்குலாந்தேருந்திச்—சூழொளிய
கொங்கைகமாப்பொங்கக்கொழுநர்மனங்கவர
வங்கம்பொருதசைந்தவாயிழையார்—செங்கேழற்
பொற்கலசத்துள்ளான்மணிநீர்முகஞ்சேர்த்தி
நற்பெருங்கோலமிகப்புனைந்து—பொற்புடைய
பேதைமுதலாகப்பேரிளம்பெண்ணீறாக
மாதரவர்சேரமகிழ்ந்தீண்டிச்—சோதிசேர்
குளிகையுஞ்சூட்டுஞ்சுளிகையுஞ்சுட்டிகையும்
வாளிகையும்பொற்றொடியின்விலக—மாளிகையின்
மேலேறிநின்றுதொழுவார்துயர்கொண்டு
மாலேறிநின்றுமயங்குவார்—நூலேறு
தாமமேதந்துசடாதாரிநல்காளேல்
யாமமேயெம்மையடுமென்பார்—காமவே

ளாமென்பாரன்றென்பாரையுருவார்கையெறிவார்
தாமுன்னை நாளேடுசங்கிழப்பார்—பூமன்னும்
பொன்னரிமாலையைப்பூண்பார்பூண்கொண்டு
துன்னரிமாலையாச்சூட்டுவார்—முன்ன
மொருகணெழுதிவிட்டொன்றெழுதாதோடித்
தெருவம்புகுவார்திகைப்பா—ரருகிருந்த
கண்ணாடிமேற்பஞ்சுபெய்வார்கிளியென்று
பண்ணாடிச்சொற்பந்துக்குற்றுரைப்பா—ரண்ணன்மேற்
கண்ணென்னுமாசாலாங்கோலிக்கருங்குழலார்
திண்ணநிறைத்தாழிறந்திட்டா—ரொண்ணிறத்த

## பேதை.

பேதைப்பருவம்பிழையாதாள்வெண்மணலாற
றூதைச்சிறுசோறடுதொழிலா—ட்தி
லிடையாலுமெக்கழுத்தமாட்டாணலஞ்சே
ருடையாலுமுள்ளுருக்கவில்லா—ணடையாலுங்
கௌவைநோய்காளையரைச்செயயாள்கதிர்முலைக
ளெவ்வநோய்செய்யுந்தொழில்பூணாள்—செவ்வனேர்
நோக்கினுநோய்நோக்கநோக்காடன்செவ்வாயின்
வாக்கும்பிறர்மனத்தைவஞ்சியாள்—பூக்குழலும்
பாடவந்தோன்றமுடியாளிளவேய்த்தோ
ளாடவர்தம்மையயர்வுசெய்யா—ளோடோறு
மொன்றுரைத்தொன்றுன்னியொன்றுசெய்தொன்றின்கட்
சென்றமனத்தனளாஞ்சேயிழையா—ணன்றாகத்
தாலிகழுத்தணிந்துசந்தனத்தான்மெய்பூசி
நீலவறுவைவிரித்துடுத்துக்—கோலஞ்சேர்
பந்தலிற்பாவைகொண்டாடுமிப்பாவைக்குத்
தந்தையாரென்றொருத்திதான்வினவ—வந்தமில்சீ
ரீசனெரியாடியென்னவவனையோர்
காய்சினமால்விடைமேற்கண்ணுற்றுத்—தாய்சொன்ன

விக்கணக்குநோக்காளிவள்போல்வாள்காமனூ
னற்கணக்கின் மேற்சிறிதேநாட்செய்தாள்—பொற்புடைய

## பேதும்பை.

பேரொளிசேர்காட்சிப்பெதும்பைப்பிராயத்தாள்
காரொளிசேர்மஞ்ஞைக்கினியலாள்—சீரொளிய
தாமரையொன்றினிரண்டுகுழையிரண்டு
காமருகெண்டையோர்செந்தொண்டை—ஆமருவு
முத்தமுரிவெஞ்சிலைசுட்டிசெம்பவளம்
வைத்ததுபோலுமதிமுகத்தா—ளொத்தமைந்த
கங்கணஞ்சேர்ந்திலங்குகையாள்கதிர்மணியின்
கிங்கிணிசேர்ந்ததிருந்தடியா—ளொண்சேழ
லந்துகில்சூழ்ந்தசைந்தவல்குலாளாய்பொறியிற்
சந்தனந்தோய்ந்ததடந்தோளாள்—வந்து
திடரிட்டதிண்வரைக்கண்செய்தமுலையாள்
கடல்பட்டவின்னமுதமன்னாண்—மடல்பட்ட
மாலைவளாய்குழலாண்மணநாறு
சோலையிளங்கிளிபோற்றுமொழியாள்—சாலவும்
வஞ்சனைசெய்துமனங்கவரும்வாட்கண்ணுக்
கஞ்சனத்தையிட்டங்கழகாக்கி—யெஞ்சா
மணியாரம்பூண்டாழிமெல்விரலிற்சேர்த்தி
டணியார்வளைதோண்மேன்மின்ன—மணியார்த்த
தூவெண்மணற்கொண்டுதோழியருந்தானுமாய்க்
காமனுருவம்வரவெழுதிக்—காமன்
கருப்புச்சிலையுமலரம்புந்தேரு
மொருப்படுடனெழுதும்போழ்தில்—விருப்புறுந்
தேனமருங்கொன்றையந்தார்த்தீர்த்தன்சிவலோகன்
வானமாலேற்றின்மேல்வந்தணைய—தானமர
நன்றறிவார்சொன்னநலந்தோற்றுநாண்டோற்று
நின்றறிவுதோற்றுநிறைதோற்று—நன்றாகக்

கைவண்டுங்கண்வண்டுமோடக்கலையோட
நெய்விண்டபூங்குழலாணின்றொழிந்தாண்—மொடநொண்ட

மங்கை.

மங்கையிடங்கடவாமாண்பிறுள்வானிழிந்த
கங்கைச்சுழியனையவுந்தியா—டங்கிய
வங்கைகமலமடிகமலமாறேக்கி
கொங்கைகமலமுகங்கமலம்—பொங்கெழிலா
ரிட்டிடையும்வஞ்சியிரும்பனைத்தோள் வேயெழிலார்
பட்டுடைபவல்குலுந்தேர்த்தட்டு—மட்டுவிரி
கூந்தலறல்பவளஞ்செய்யவாயவ்வாயி
லேயுந்தமணிமுறுவலின்முத்தம்—வாயந்தசீர்
வண்டுவளையவளர்நாசிகைகூட்டிக்
கண்டிகமுத்திற்கவினசேர்த்திக்—குண்டலங்கள்
காதுக்கணிந்துகனமேசலேருத்தித்
தீதில்செழுங்கோலஞ்சித்திரித்து—மாதராள்
பொறகூட்டிற்பூவையைவாங்கியதனோடுஞ்
சொறகோட்டிக்கொண்டிருந்தவேல்வைக்க—ணுறகோட்டு
வெள்ளிவிலங்கன்மேல்வீற்றிருந்தஞாயிறுபோ
லொள்ளியமால்விடையைமேல்கொண்டு—தெள்ளியசீர்
தாழுஞ்சடையான்சடாமகுடந்தோன்றதலும்
வாழுமேமம்மர்மனத்தளாய்ச்—சூழொளியானை
றார்நோக்குந்தன்றுருநோக்குமவனுடைய
வேர்நோக்குந்தன்னதெழிறேக்கும்—பேரருளா
ணேறேக்குந்தன்றேளுநோக்குமவன்மார்பி
னீறேக்கம்வைத்துநெடிதுயிர்த்து—காறேக்கா
துள்ளமுருகவொழியாதவேட்கையாம்
வெள்ளத்திடையழுந்திவெய்துயிர்த்தா—ளொள்ளிய

## மடந்தை.

தீந்தமிழின்றெய்வவடிவாடிருந்தியசீர்
வாய்ந்தமடந்தைப்பிராயத்தா—ளேய்ந்தசீ
ரீசன்சிலையுமெழில்வான்பவளமுஞ்
சேய்வலங்கைவேலுந்திரண்முத்தும்—பாசிலைய
வஞ்சியும்வேயும்வளர்தாமரைமொட்டு
மஞ்சில்வருமாமதிபோன்மண்டலமு—மெஞ்சாப்
புருவமுஞ்செவ்வாயுங்கண்ணுமெயிறு
முருவநுசுப்புமென்றோளு—மருவினிய
கொங்கையும்வாண்முகமுமாக்கொண்டாள்கோலஞ்சேர்
பங்கயப்போதனையசேவடியா—ளொண்கேழல்
வாழைத்தண்டன்னகுறங்கினாள்வாய்ந்தசீ
ராழித்தேர்த்தட்டனையவல்குலா—ளூழித்
திருமதியமற்றொன்றுமென்றுமுகத்தை
யுருவுடையநாண்மீன்சூழ்ந்தாற்போற்—பெருகொளிய
முத்தாரங்கண்டத்தணிந்தாளணிகலங்கண்
மொய்த்தாரவாரமிகப்பெருகி—வித்தகத்தாற்
கள்ளுங்கடாமுங்கலவையுங்கைபோந்திட்
டுள்ளும்புறமுஞ்செறிவமைத்துத்—தெள்ளொளிய
காளிங்கஞ்சோதிவிடப்பத்தொடுத்தமைத்த
தாளிம்பத்தாமநுதல்சேர்த்தித்—தோளொங்குந்
தண்ணறுஞ்சந்தனங்கொண்டப்பிச்சதிர்சாந்தை
வண்ணம்பெறமிசையேமட்டித்தாங்—கொண்ணுதலா
டன்னமர்தோழியர்கள்சூழத்தவிசேறிப்
பின்னுமோர்காமரம்யாழமைத்து—மன்னு
விடவண்ணக்கண்டத்துவேதியன்மேவிட்ட
மடல்வண்ணம்பாடும்பொழுதீண்—டடல்வல்ல
வேல்வல்லான்வில்வல்லான்மெல்லியலார்க்கெஞ்ஞான்று
மால்வல்லானூர்கின்றமால்விடையின்—கோல

மணியேறுகேட்டாக்குநோக்குவாள்சால
வணியேறுதோளானைக்கண்டாங்—கணியார்ந்த
கோட்டியொழியவெழுந்துகுழைமுகத்தைக்
கோட்டிநுதல்சிவப்பவாய்துலக்கி—நாட்டார்க
ளெல்லாருங்கண்டாரெனக்கடவுளிங்காய
நல்லாய்படுமேற்படுமென்று—மெல்லவே
செல்லலுறுஞ்சரணங்கம்பிக்குந்தன்னுறுநோய்
சொல்லலுறுஞ்சொல்லிமுடைசெறிக்கு—நல்லாகங்
காணலுறுங்கண்கணீர்மல்குங்காண்பார்முன்
னாணலுறுநெஞ்சமொட்டாது—பூணாகம்
புல்லலுறுமண்ணல்கைவாரானென்றிவ்வகையே
யல்லலுறுமழுந்துமாழ்துயரான்—மெல்லியலா
டன்னுருவம்பூங்கொன்றைத்தார்கொள்ளத்தான்கொன்றைய
பொன்னுருவங்கொண்டுபுலம்புற்றாள்—பின்னொருத்தி

## அரிவை.

செங்கேழற்றாமரைபோல்சீறடியாடீதிலா
வங்கேழரிவைப்பிராயத்தா—ளொண்கேழற்
றிங்களுந்தாரகையும்வில்லுஞ்செழும்புயலுந்
தங்கொளிசேர்செவ்வாயுமுண்மையாற்—பொங்கொளிசே
மின்னார்வான்காட்டுமுகவொளியாண்மெய்ம்மையே
தன்னுவாரில்லாத்தகைமையா—ளெந்நாளு
மில்லாரையெல்லாருமெள்குவார்செல்வரை
யெல்லாருஞ்செய்வர்சிறப்பென்னுஞ்—சொல்லாலே
யல்குற்குமேகலையைச்சூழ்ந்தாளணிமுலைமேன்
மல்கியசாந்தொடுபூண்புனைந்து—நல்கூ
ரிடையிடையேயுள்ளுருகக்கண்டாளெழிலார்
நடையெடையன்னத்தைவென்றா—ளடியிணைமேற்
பாடகங்கொண்டுபசிசமைத்தாள்பன்மணிசேர்
சூடகமுன்கைதொடர்வித்தாள்—கேழல்சீர்ப்

பொன்னரிமாலை தலைக்கணிந்து பூண்கொண்டு
மன்னுங்கழுத்தை மகிழ்வித்தாள் — பொன்னா
ரின்னிசைவீணையைவாங்கியிமையவர்த
மண்ணன்மேற்றுணிட்டவாசையான் — முன்னமே
பாடன்றொடங்கும்பொழுதிற்பரஞ்சோதி
கேடிலாமால்விடைமேற்றோன்றுதலுங் — கூடிய
வின்னிசையுமிப்பிறப்பும்பேணுமிருந்தமிழு
மன்னியவீணையையுங்கைவிட்டுப் — பொன்னனையீ
ரின்றன்றேகாண்டதெழினலங்கொள்ளேனே
னன்றன்றேபெண்மைநமக்கென்று — சென்றவன்ற
ஞெண்களபமாடுமொளிவாண்முகத்திரண்டு
கண்களபமாடுவபோற்கட்டுரைத்து — மொண்சேழ்
கூந்தலவிழ்க்குமுடிக்குங்கலைதிருத்துஞ்
சாந்தந்திமிருமுலையார்க்கும் — பூந்துகிலைச்
சூழுமவிழ்க்குந்தொழுமழுஞ்சோர்துயருற்
றுழுமழுந்துமயர்வுயிர்க்குஞ் — சூழொளிய
வங்கைவளைதொழுதுகாத்தாள்கலைகாவா
ளங்கையிவளுநலந்தோற்றா — ளங்கொருத்தி

தெரிவை.

யாராவமுதமவயவம்பெற்றனைய
சீரார்தெரிவைப்பிராயத்தா — ளோரா
மருளோசையின் மழலைவாய்ச்சொலாலென்று
மிருடீர்புலரியேயொப்பா — ளருளாலே
வெப்பமிளையவர்கட்காக்குதலாலுச்சியோ
டொப்பமையக்கொள்ளுமுருவத்தாள் — வெப்பந்தீர்ந்
தந்தளிர்போற்சேவடியுமங்கையுஞ்செம்மையா
லந்திவான்காட்டுமழகினா — ளந்தமில்
சீரார்முகமதியமாதலாற்சேயிழையா
ளோராரிரவினெழில்கொண்டாள் — சீராரும்

கண்ணார்பயோதரமுநுண்ணிடையுமுண்மையாற்
றண்ணிளங்காரின்சவிகொண்டாள்—வண்ணஞ்சேர்
மாந்தளிர்மேனிமுருக்கிதழ்வாயாதலால்
வாய்ந்தவிளவேனில்வண்மையாண்—மாந்த
ரறிவுடையீர்நின்மின்களல்லார்போமென்று
பறையறைவபோலுஞ்சிலம்பு—முறைமையார்
சீரார்திருந்தடிமேற்சேர்த்தினடேரல்கு
லோராதகலலுமுறுதென்று—சீராலே
யந்துகிலுமேகலையுஞ்சூழ்ந்தாளணிமுலைகண
மைந்தர்மனங்கவருமென்பதனுன்—முந்துறவே
பூங்கச்சினலடையப்பூட்டுநீஇப்பொற்றொடியாற்
காம்பொத்ததோளிணையைக்காப்பேவி—வாய்ந்தசீர்
நற்கழுத்தைநல்லாரத்தான்மறைத்துக்காதுக்கு
விற்பகருங்குண்டலங்கண்மேவுவித்து—மைப்பகருங்
காவியங்கண்ணைக்கதந்தணிப்பாள்போலத்தன்
றூவியவஞ்சனத்தைமுன்னூட்டி—யாவரையு
மாகுலமாக்குமழகினாளன்னமுங்
கோகிலமும்போலுங்குணத்தினா—ளாகிப்
பலகருதிக்கட்டிக்கரியவாய்க்கோடி
யலர்சுமந்துகூழையவாகிக்—கலைகரந்
துள்யாதுமின்றிப்புறங்கமழ்ந்துகீழ்தாழ்ந்து
கள்ளாவினாறுங்கருங்குழலா—டெள்ளொளிய
செங்கழுநீர்ப்பட்டுடுத்துச்செங்குங்குமமெழுதி
யங்கழுநீர்த்தாமநுதல்சேர்த்திப்—பொங்கெழிலார்
பொற்கவற்றின்வெள்ளிப்பலகைமணிச்சூது
நற்கமையநாட்டிப்பொரும்பொழுதில்—விற்பகருந்
தோளாணிலைபேறுதோற்றங்கேடாய்நின்ற
தாளான்சடாமகுடந்தோன்றுதலுங்—கேளாய
நாணார்நடக்கலத்தார்க்கிடையில்லை
யேனரொழிகவெழிலொழிக—பேணுங்

குலத்தாரகன்றிடுககுற்றத்தார்வம்பி
னலத்திர்நினைமினீரென்று—சொலற்கரிய
தேவாதிதேவன்சிவனாயிற்றேன்கொன்றைப்
பூவாரலங்கலருளாது—போவானேற்
கண்டாலறிவனெனச்சொல்லிக்கைசோர்ந்து
வண்டார்பூங்கோதைவளர்ந்தோற்றா—ளாண்டாய

## பேரிளம்பெண்.

பெண்ணரசாய்த்தோன்றியபேரிளம்பெண்மையாள்
பண்ணமருமின்சொற்பணிமொழியாண்—மண்ணின்மேற்
கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறியுமைம்புலனு
மொண்டொடிகண்ணேயுளவென்று—பண்டையோர்
கட்டுரையைமேம்படுத்தாள்கண்ணாடிமண்டலம்போல்
விட்டிலங்குநல்லுகிர்சேர்மெல்விரலாள்—கட்டரவ
மஞ்சப்பரந்தகன்றவல்குலாளாய்நலத்த
வஞ்சிக்கொடிநுடங்குநுண்ணிடையா—ளஞ்சாத
பொற்செப்பிரண்டுமுகடுமணியழுத்தி
வைத்தனபோலவளர்ந்தேந்தி—யொத்துச்
சுணங்கூர்திதலையுஞ்சூழ்போந்துகண்டார்க்
சணங்குமமுதமுமாய்த்தோன்றி—யிணங்கொத்த
கொங்கையாள்கோலங்கட்கெல்லாமோர்கோலமா
நங்கையாணாகிளவேய்த்தோளிணா—ளங்கையாற்
காந்தட்குலம்பழித்தாள்காமவேள்காதலாள்
சாந்தமிலங்குமகலத்தாள்—வாய்ந்துடனே
யேய்ந்துகுவிந்துதிரண்டுமறிந்திருபா
றேய்ந்துதுடித்தசெழும்பவளங்—காய்ந்திலங்கி
முத்தமுந்தேனும்பொதிந்துமுனிவரையுஞ்
சித்தந்திறைகொள்ளுஞ்செவ்வாயா—ளொத்து
வரிகிடந்தஞ்சனமாடிமணிக
ளுருவநடுவுடையவாகிப்—பெருகிய

தண்ணங்கயலுஞ்சலஞ்சலமுந்தோன்றுதலால்
வண்ணக்கடலனையவாட்கண்ணு—ளொண்ணிறத்த
குண்டலஞ்சேர்காதினுள்கோலக்குளிர்மதிய
மண்டலமேபோலுமதிமுகத்தாள்—வண்டலம்ப
யோசனைநாறுகுழலாளொளிறுதன்மேல்
வாசிகைகொண்டுவடிவமைத்தாண்—மாசில்சீர்ப்
பாதாதிகேசம்பழிப்பிலாள்பாங்கமைந்த
சீதாரிகொண்டுதன்மெய்புகைத்தாண்—மாதார்ந்த
பண்கவருஞ்சொல்லார்பல்லாண்டேத்தப்பாயொளிசேர்
வெண்கவரிவெள்ளத்திடையிருந்து—வொண்கேழற்
கண்ணவனையல்லதுகாணுசெவியவன
தெண்ணருஞ்சீரல்லதிசைகொள்ளா—வண்ணல்
கழலடியல்லதுகைதொழாவஃதான்
றழலங்கைக்கொண்டான்மாட்டன்பென்—றெழிலுடைய
வெண்பாவிரித்துரைக்கும்போழ்தில்விளங்கொளிசேர்
கண்பாவுநெற்றிக்கறைக்கண்டன்—விண்பா
லரியரணஞ்செற்றுங்கலைபுனலும்பாம்பும்
புரிசடைமேல்வைத்தபுராண—னெரியிரவி
லாடுமிறைவனமரர்குழாந்தற்சூழ
மாடமறுகில்வரக்கண்டு—கேடில்சீர்
வண்ணச்சிலம்படிமாதரார்தாமுண்ட
கண்ணெச்சிலெம்மையேயூட்டுவா—னண்ணலே
வந்தாய்வளைகவர்ந்தாய்மாலுமருந்துயருந்
தந்தாயிதுவோதகவென்று—நொந்தாள்போற்
கட்டுரைத்துக்கைசோர்ந்தகமுருகிமெய்வெளுத்து
மட்டிவரும்பூங்கோதைமால்கொண்டாள்—கொட்டிமைசேர்
பண்ணுருமின்சொற்பணைப்பெருந்தோட்செந்துவர்வாய்ப்
பெண்ணாரவாரம்பெரிதன்றே—விண்ணோங்கி

மஞ்சடையுநீள்குடுமிவாணிலாவீற்றிருந்த்
செஞ்சடையான்போந்ததெரு. [illegible]

---

பெண்ணீர்மைகாமின்பெருந்தோளிணைகாமி
னுண்ணீர்மைமேகலையுமுள்படுமின்—றெண்ணீரக்
காரேறுகொன்றையந்தார்க்காவாலிகட்டங்க
னூரேறுபோந்ததுலா.

திருச்சிற்றம்பலம்.



இத்திருவுலா ஆதியுலாவெனவும் பெயர் பெறும்.

உ

திருச்சிற்றம்பலம்.

நக்கீரதேவநாயனார்

அருளிச்செய்த

# கைலைபாதிகாளத்திபாதியந்தாதி.



சொல்லும்பொருளுமேதூத்திரியுநெய்யுமா
நல்லிடிஞ்சிலென்னுடையநாவாகச்—சொல்லரிய
வெண்பாவிளக்காவியன்கயிலைமேலிருந்த
பெண்பாகர்க்கேற்றினேன்பெற்று. (௧)

பெற்றபயனிதுவேயன்றேபிறந்தியான்
கற்றவர்களேத்துஞ்சீர்க்காளத்திக்—கொற்றவர்க்குத்
தோளாகத்தாடரவஞ்சூழ்ந்தணிந்தவம்மானுக்
காளாகப்பெற்றேனடைந்து. (௨)

அடைந்துய்ம்மினம்மானையம்மாவிதன்னைக்
குடைந்துண்ணவெண்ணியவெங்கூற்றங்—கடைந்துநுங்
கண்ணுளேபார்க்கும்பொழுதுகயிலாயத்
தண்ணலேகண்டீரரண். (௩)

அரணமொருமூன்றுமாரழலாய்வீழ
முரணம்புகோத்தமுதல்வன்—சரணமே
காணுமாலுற்றவன்றன்காளத்திகைதொழுது
பேணுமாலுள்ளம்பெரிது. (௪)

பெரியவர்காணீரென்னுள்ளத்தின்பெற்றி
தெரிவரியதேவாதிதேவன்—பெரிதுந்
திருத்தக்கோரேத்துந்திருக்கயிலைக்கோனை
யிருத்தத்தான்போந்திடம். (௫)

இடப்பாகனீள்கோட்டிமவான்பயந்த
மடப்பாவைதன்வடிவேயாஞல்—விடப்பாற்
கருவடிசேர்கண்டத்தெங்காளத்தியாள்வார்க்
கொருவடிவேயன்றுரு. (௬)

உருவுபலகொண்டுணர்வரிதாய்நிற்கு
மொருவனொருபாலிருக்கை—மருவினிய
பூக்கையிற்கொண்டெப்பொழுதம்புத்தேளிர்வந்திறைஞ்சு
மாக்கயிலையென்னுமலை. (எ)

மலைவரும்போல்வானவருந்தானவருமெல்லா
மலைகடல்வாய்நஞ்செழல்கண்டஞ்சி—நிலைதளரக்
கண்டமையாற்றண்சாரற்காளத்தியாள்வார்நஞ்
சுண்டமையாலுண்டிவ்வுலகு. (அ)

உலகமனைத்தினுக்குமொண்ணுதன்மேலிட்ட
திலகமெனப்பெறினுஞ்சீசீ—யிலகியசீ
ரீசாதிருக்கயிலையெம்பெருமானென்றென்றே
பேசாதிருப்பார்பிறப்பு. (௯)

பிறப்புடையர்கற்றோர்பெருஞ்செல்வர்மற்றுஞ்
சிறப்புடையராஞலுஞ்சீசீ—யிறப்பில்
கடியார்நறுஞ்சோலைக்காளத்தியாள்வா
ரடியாரைப்பேஞதவர். (௧0)

அவரும்பிறந்தாராய்ப்போவார்கொலாவீ
யெவருந்தொழுதேத்துமெந்தை—சிவமன்னு
தேக்குவார்சோலைத்திருக்கயிலையேத்தாதே
போக்குவார்வாளாபொழுது. (௧௧)

வாளாபொழுதுகழிக்கின்றார்மாலுடைவர்
தேளார்கொலந்தோகிதிபட்டார்—ஹளாடை

யண்ணாற்கனுக்கராய்க்காளத்தியுண்ணின்ற
கண்ணைப்பராவார்கதை. (கஉ)

கதையிலேகேளீர்கயிலாயநோக்கிப்
புதையிருட்கண்மாலோடும்போகிச்—சிதையாச்சீர்த்
தீர்த்தன்பாற்பாசுபதம்பெற்றுச்செருக்களத்திற்
பார்த்தன்போர்வென்றிலனோபண்டு. (கங)

பண்டுதொடங்கியும்பாவித்துநின்கழற்கே
தொண்டுபடுவான்றொடர்வேனைக்—கண்டுகொண்
டாளத்தயாவுண்டோவில்லையோசொல்லாயே
காளத்தியாயுன்கருத்து. (கச)

கருத்துக்குச்சேயையாய்க்காண்டக்கோர்காண
விருத்திருக்கயிலையென்று—லொருத்த
ரறிவானுறுவார்க்கறியுமாறுண்டோ
நெறிவார்சடையாய்நிலை. (கரு)

நிலையில்பிறவிநெடுஞ்சுழியிற்பட்டுத்
தலைவதடுமாறுகின்றேன்—றலைவின்றிப்
போந்தேறக்கைதாராய்காளத்திப்புத்தேளிர்
வேந்தேயிப்பாசத்தைவிட்டு. (கசு)

பாசத்தைவிட்டுநின்பாதத்தின்கீழேயென்
னேசத்தைவைக்கநினைகண்டாய்—பாசத்தை
நீக்குமாவல்லகயிலாயாநீயென்னைக்
காக்குமாறித்தனையேகாண். (கஎ)

காணுதலக்கின்றார்வானோர்கள்காளத்திப்
பூணாரமார்பன்றன்பொற்பாத—நாணாதே
கண்டிடுவான்யானிருந்தேன்காணீர்கடனஞ்சை
யுண்டிடுவான்றன்னையொருங்கு. (கஅ)

ஒருங்காதுடனேநின்றேலைநவரெம்மை
நெருங்காமனித்தமொருகா—னெருங்கிக்
கருங்கலோங்கும்பற்கயிலாயமேயான்
வருங்கொலோநம்பான்மதித்து. (௧௯)

நம்பான்மதித்துறையுங்காளத்திநண்ணாதே
வம்பார்மலர்தூய்வணங்காதே—நம்பாநின்
சீலங்களேத்தாதேதீவினையேன்யானிருந்தேன்
காலங்கள்போனகழிந்து. (௨௦)

கழிந்தகழிகிடாய்நெஞ்சேகழியா
தொழிந்தநாண்மேற்பட்டுயர்ந்தோர்—மொழிந்தசீர்க்
கண்ணுதலானெந்தைகயிலாயமால்வரையே
நண்ணுதலாநன்மைநமக்கு. (௨௧)

நமக்கிசைந்தவாநாமுமேத்தினானம்பர்
தமக்கழகுதாமேயறிவ—ரமைப்பொதும்பிற்
கல்லவாநீடருவிக்காளத்தியாள்வாரை
வல்லவாநெஞ்சமேவாழ்த்து. (௨௨)

வாழ்த்துவாய்வாழ்த்தாதொழிவாய்மறுசுழியிட்
டாழ்த்துவாயஃதறிவாய்நீயன்றே—யாழ்த்தகைய
வண்டார்பொழிற்கயிலைவாழ்கென்றிருப்பதே
கண்டாயடியேன்கடன். (௨௩)

கடநாகமூடாடுங்காளத்திக்கோனைக்
கடனாகக்கைதொழுவார்க்கில்லை—யிடநாடி
யிந்நாட்டிற்கேவந்திங்கீண்டிற்றுக்கொண்டுபோ
யந்நாட்டிலுண்டுழுதுமாறு. (௨௪)

மாறிப்பிறந்துவழியிடையாற்றிடை
யேறியிழியுமிதுவல்லாற்—றேறித்

திருக்கயிலையேத்திரேற்சேமத்தால்யார்க்கு
மிருக்கையிலைக்கண்டீரினிது. (உரு)

இனிதேபிறவியினமரங்களேறிக்
கனிதேர்கடுவன்கடம்பின்—முனிவாய்ப்
பிணங்கிவருந்தண்சாரற்காளத்திபேணி
வணங்கவல்லராயின்மகிழ்ந்து. (உசு)

மகிழ்ந்தலரும்வண்கொன்றைமேலேமனமாய்
நெகிழ்ந்துநெகிழ்ந்துள்ளேநெக்குத்—திகழ்ந்திலங்கும்
விண்ணிறங்காவோங்கும்வியன்கயிலைமேயாயென்
பெண்ணுறங்காளென்செய்கேன்பேசு. (உஎ)

பேசும்பரிசறியாள்பேதைபிறர்க்கெல்லா
மேசும்பரிசாளுனேபாவ—மாசுனைநீர்க்
காம்பையலைத்தாலிக்குங்காளத்தியென்றென்று
பூம்பசலைமெய்ம்முழுதும்போர்த்து. (உஅ)

போர்த்தகளிற்றுரியும்பூண்டபொறியரவுந்
தீர்த்தமகளிருந்தசெஞ்சடையு—மூர்த்தி
குயிலாயமென்மொழியாள்கூறுயவாறுங்
கயிலாயயான்காணக்காட்டு. (உகூ)

காட்டினடமாடிக்கங்காளராகிப்போய்
நாட்டிற்பலிதிரிந்துநாடோறு—மோட்டுண்பா
ராளுலுமென்கொலோகாளத்தியான்வாரை
வானோர்வணங்குமாவந்து. (௩0)

வந்தமரரேத்துமடைகூழும்வார்சடைமேற்
கொந்தவிழுமாலைகொடுத்தார்கொல்—வந்தித்து
வாளுகுத்தவண்கயிலைக்கோனார்தம்மாமுடிமேற்
பாளுகுத்தமாணிக்குப்பண்டு. (௩க)

பண்டிதுவேயன்றுகிற்கேளீர்கொல்பல்சருகு
கொண்டிலிங்கத்தும்பினூற்கூட்டிழைப்பக்—கண்டு
நலந்திக்கெலாமேத்துங்காளத்திநாதர்
சிலந்திக்குச்செய்தசிறப்பு. (௩௨)

செய்தசிறப்பெண்ணிலெங்குலக்குஞ்சென்றடைந்து
கைதொழுவார்க்கெங்கள்கயிலாயர்—நொய்தளவிற்
காலற்காய்ந்தாரன்றேகாணீர்கழறொழுத
பாலற்காயன்றுபரிந்து. (௩௩)

பரிந்துரைப்பார்சொற்கேளாளெம்பெருமான்பாதம்
பிரிந்திருக்ககில்லாமைபேசும்—புரிந்தமரர்
நாதாவாகாளத்திநம்பாவாவென்றென்று
மாதாவாவுற்றமயல். (௩௪)

மயலைத்தவிர்க்கநீவாராயொருமூன்
றெயிலைப்பொடியாகவெய்தாய்—கயிலைப்
பருப்பதவாநின்னுடையபாதத்தின்கீழே
யிருப்பதவாவுற்றாளிவள். (௩௫)

இவளுக்குநல்லவாறெண்ணுதிரேலின்றே
தவளப்பொடியிவண்மேற்சாத்தி—யிவளுக்குக்
காட்டுமின்கள்காளத்திகாட்டிக்கமழ்கொன்றை
சூட்டுமின்கடீருந்துயர். (௩௬)

துயர்க்கெலாங்கூடாயதோற்குரம்பைபுக்கு
மயக்கிவழிகாணமாட்டேன்—வியற்கொடும்போ
ரேற்றானேவண்கயிலையெம்மானேயென்கொலோ
மேற்றானிதற்குவிளைவு. (௩௭)

விளையும்வினையரவின்வெய்யவிடத்தைக்
களைமின்னோகாளத்தியாள்வார்—வளைவி

திருந்தியசீசன் றிருநாமமென்னு
மருந்தினை நீர்வாயிலேலவைத்து. (௩௮)

வாயிலேலவைக்குமளவின் மருந்தாகித்
தீயபிறவிநோய்தீர்க்குமே—தூயவே
கம்பெருமாதேவியொடுமன்னுகயிலாயத்
தெம்பெருமானோரஞ்செழுத்து. (௩௯)

அஞ்செழுத்துங்கண்டவரருமறைகளாவனவு
மஞ்செழுத்துங்கற்கவணித்தாகு—நஞ்சவித்த
காளத்தியார்யார்க்குங்காண்டற்கரிதாய்ப்போய்
நீளத்தேநின்றநெறி. (௪0)

நெறிவார்சடையாய்நிலையின்மைநீயென்
றறியாய்கொலந்தோவயர்ந்தா—ணெறியிற்
கனைத்தருவிதூங்குங்கயிலாயாநின்னை
நினைத்தருவிகண்சோரநின்று. (௪௧)

நின்றுமிருந்துங்கிடந்துநடந்துமியா
மென்றுநினைந்தாலுமென்கொலோ—சென்றுதன்
றாள்வானவரிறைஞ்சுந்தண்சாரற்காளத்தி
யாள்வானருளாதவாறு. (௪௨)

அருளாதவாறுண்டேயார்க்கேனுமாக
விருளார்கறைமிடற்றெம்மீசன்—பொருளாய்ந்து
மெய்ம்மையேயுன்னில்வியன்கயிலைமேயான்வந்
திம்மையேதீர்க்குமிடர். (௪௩)

இடர்ருமக்கோரிடநாடிக்கொண்டு
நடலீரோகாலத்தானுங்கள்—கடல்வாய்க்
கருப்பட்டோங்கொண்முகில்சேர்காளத்திகாண
வொருப்பட்டோங்கண்டருணர்ந்து. (௪௪)

உணருங்காலொன்றையுருத்தெரியக்காட்டாய்
புணருங்காலாரமுதேபோன்று—மிணரிற்
கனியவாஞ்சோலைக்கயிலாயமேயா
யினியவாகாணின்னியல்பு. (சரு)

நின்னியல்பையாரேயறிவார்நினையுங்கால்
மன்னியசீர்க்காளத்திமன்னவனே—நின்னில்
வெளிப்படுவதேழுலகுமீண்டேயொருகா
லொளிப்பதுவுமாறுலுரை. (சசு)

உரையும்பொருளுமுடலுமுயிரும்
விரையுமலரும்போல்விம்மிப்—புரையின்றிச்
சென்றவாறேங்குந்திருக்கயிலையெம்பெருமா
னின்றவாறெங்குநிறைந்து. (சஎ)

நிறைந்தெங்குநீயேயாய்நின்றாலுமொன்றின்
மறைந்தைம்புலன்காணவாராய்—சிறந்த
கணியாருந்தண்சாரற்காளத்தியாள்வாய்
பணியாயாலென்முன்பரிசு. (சஅ)

பரிசறியேன்பற்றிலேன்கற்றிலேன்முற்றுங்
கரியுரியான்பாதமேகண்டாய்—திரியும்
புரமாளச்செற்றவனேபொற்கயிலைமன்னும்
பரமாவடியேற்குப்பற்று. (சகூ)

பற்றுவானெவ்வுயிர்க்குமெந்தைபசுபதியே
முற்றுவெண்டிங்கண்முளைசூடி—வற்றுவாங்
கங்கைசேர்செஞ்சடையான்காளத்தியுண்ணின்ற
மங்கைசேர்பாகத்துமன். (ருo)

மன்னுகயிலாயாமாமுத்தமாணிக்கம்
பொன்னாரமாக்கொண்டுபூணுதே—யந்நாளு

மின்செய்வார்செஞ்சடையாய்வெள்ளெலும்புபூண்கின்ற
தென்செய்வானெந்தாயியம்பு. (ருக)

இயம்பாய்மடநெஞ்சேயேனோர்பாலென்ன
பயம்பார்த்துப்பற்றுவானாற்ருய்—புயம்பாம்பா
லார்த்தானேகாளத்தியம்மானேயென்றென்றே
யேத்தாதேவாளாவிருந்து. (ருஉ)

இருந்தவாகாணீரிதுவென்னமாய
மருந்தண்கயிலாயத்தண்ணல்—வருந்திப்போட்க்
தானுளும்பிச்சைபுகும்போதுந்தன்னடியார்
வானாளமண்ணாளவைத்து. (ருங)

வைத்தவிருநிதியேயென்னுடையவாழ்முதலே
நித்திலமேகாளத்திநீள்சுடரே—மொய்த்தொளிசே
ரக்காலத்தாசையடிநாயேன்காணுங்கா
லெக்காலத்தெப்பிறவியான். (ருச)

யானென்றுந்தானென்றிரண்டில்லையென்பதனை
யானென்றுங்கொண்டிருப்பனானாலுந்—தேனுண்
டளிகடாம்பாடுமகன்கயிலைமேயான்
றெளிகொடான்மாயங்கள்செய்து. (ருரு)

மாயங்கள்செய்தைவர்சொன்னவழிநின்று
காயங்கொண்டாடல்கணக்கன்று—காயமே
நிற்பதன்றுதலாற்காளத்திநின்மலர்சீர்
கற்பதேகண்டீர்கணக்கு. (ருசு)

கணக்கிட்டுக்கொண்டிருந்துகாலனார்நம்மை
வணக்கிவலைப்படாமுன்னம்—பிணக்கின்றிக்
காலத்தானெஞ்சேகயிலாயமேவியநற்
சூலத்தான்பாதந்தொழு. (ருஎ)

தொழுவாள்பெறுளே தன்றேள்வளையுந்தோற்ருண்
மழுவாளன்காளத்திவாழ்த்தி—யெழுவா
னறுமாமலர்க்கொன்றைநம்முன்னே நாளைப்
பெறுமாறுகாணீரென்பெண். (ருஅ)

பெண்ணின்றயலார்முன்பேதைபிறைசூடி
கண்ணின்றநெற்றிக்கயிலைக்கோ—னுண்ணின்ற
காமந்தான்மீதூரநைவாட்குன்கார்க்கொன்றைத்
தாமந்தாமற்றிவளைச்சார்ந்து. (ருகூ)

சார்ந்தாரையெவ்விடத்துங்காப்பனவுஞ்சார்ந்தன்பு
கூர்ந்தார்க்குமுத்திகொடுப்பனவுங்—கூர்ந்துள்ளே
மூளத்தியானிப்பார்முன்வந்துநிற்பனவுங்
காளத்தியார்தங்கழல். (சூO)

தங்கழல்களார்ப்பவிளக்குச்சலஞ்சலனென்
றங்கழல்களார்ப்பவனலேந்திப்—பொங்ககலத்
தார்த்தாடரவமகன்கயிலைமேயாய்நீ
கூத்தாடன்மேவியவாகூறு. (சூக)

கூறாய்நின்பொன்வாயாற்கோலச்சிறுகிளியே
வேறாகவந்திருந்துமெல்லெனவே—நீறாவு
மஞ்சடையுநீள்குடுமிவாளருவிக்காளத்திச்
செஞ்சடையெம்மீசன்றிறம். (சூ௨)

ஈசன்றிறமேநினைந்துருகுமெம்மைப்போன்
மாசிலிறத்தமடக்குருகே—கூசி
யிருத்தியாய்நீயுமிருங்கயிலைமேயாற்
கருத்தியாய்க்காமுற்றாயாம். (சூ௩)

காமுற்றாயாமன்றேகாளத்தியான்கழற்கே
யாமுற்றதுற்றாயிருங்கடலே—யாமத்து

ஞாலத்துயிரெல்லாங்கண்டுஞ்சுநள்ளிருள்கூர்
காலத்துந்துஞ்சாதுன்கண். (கச)

கண்ணுங்கருத்துங்கயிலாயரேயெமக்கென்
றெண்ணியிருப்பன்யானெப்பொழுது—நண்ணும்
பொறியாடரவசைத்தபூதப்படையா
ரறியார்கொனெஞ்சேயவர். (கரு)

நெஞ்சேயவர்கண்டாய்நேரேநினைவாரை
யஞ்சேலென்றுட்கொண்டருள்செய்வார்—நஞ்சேயுங்
கண்டத்தார்காளத்தியாள்வார்கழல்கண்டீ
ரண்டத்தார்சூடுமலர். (கசு)

அலரோனெடுமாலமரர்கோன்மற்றும்
பலராய்ப்படைத்துக்காத்தாண்டு—புலர்காலத்
தொன்றாகிமீண்டுபலவாகிநிற்கின்றான்
குன்றுதசீர்க்கயிலைக்கோ. (கஎ)

கோத்தமலர்வாளிகொண்டநங்கன்காளத்திக்
கூத்தன்மேலன்றுகுறித்தெய்யப்—பார்த்தலுமே
பண்பொழியாக்கோபத்தீச்சுற்றுதலும்பற்றற்று
வெண்பொடியாயவீழ்ந்திலனோவெந்து. (கஅ)

வெந்திறல்வேற்பார்த்தற்கருள்செய்வான்வேண்டியோர்
செந்தறுகட்கேழற்றிறம்புரிந்து—வந்தருளுங்
கானவனுங்கோலமியான்காணக்கயிலாய
வானவர்தங்கோமானேவா. (கக)

வாமான்றேர்வல்லவயப்போர்விசயனைப்போற்
றுமாறுலகிற்றவமுடையார்—தாமியார்க்குங்
காண்டற்கரியராயக்காளத்தியாளவாரைத்
தீண்டத்தாம்பெற்றவமையாற்சென்று. (௨௦)

சென்றிறைஞ்சும்வானோர்தஞ்சிந்தைக்குஞ்சேயரா
யென்றுமடியார்க்குமுன்னிற்பர்—நன்று
கனியவாஞ்சோலைக்கயிலாயமேயா
ரினியவாபத்தர்க்கிவர். (எக)

இவரேமுதற்றேவரெல்லார்க்குமிக்கா
ரிவரல்லரென்றிருக்கவேண்டாங்—கவராதே
காதலித்தின்றேத்துதிரேற்கானத்தியாள்வார்நீ
ராதரித்ததெய்வமேயாம். (எஉ)

ஆமென்றுநாளையுளவென்றுவாழ்விலே
தாமின்றுவீழ்கைதவமன்று—யாமென்று
மிம்மாயவாழ்வினையேபேணுதிருங்கயிலை
யம்மானைச்சேர்வதறிவு. (எங)

அறியாமலேனுமறிந்தேனுஞ்செய்து
செறிகின்றதீவினைகளெல்லா—நெறிநின்று
நன்முகில்சேர்காளத்திநாதனடிபணிந்து
பொன்முகரியாடுதலும்போம். (எச)

போகின்றமாமுகிலேபொற்கயிலைவெற்பளவு
மேகின்றெமக்காகவெம்பெருமா—னேகிஞ
லுண்ணப்படாநஞ்சமுண்டாற்கென்னுள்ளுறுநோய்
விண்ணப்பஞ்செயகண்டாய்வேறு. (எரு)

வேறேயுங்காக்கத்தகுவேனைமெல்லியலாள்
கூறேயுங்காளத்திக்கொற்றவனே—யேறேறு
மன்பாவடியேர்கருளாதொழிகின்ற
தென்பாவமேயன்றேவின்று. (எசு)

இன்றுதொடங்கிப்பணிசெய்வேன்யானுனக்
கென்றுமிளமதியேயெம்பெருமா—னென்றுமென்

னுட்காதலுண்மையுபர்கயிலைமேயாற்குத்
திட்காதேவிண்ணப்பஞ்செய். (எஎ)

செய்யசடைமுடியென்செல்வனையான்கண்டெனது
கையறவுமுண்மெலிவும்யான்காட்டப்—பையவே
காரேறுபூஞ்சோலைக்காளத்தியாள்வார்தம்
போரேறேயித்தெருவேபோது. (எஅ)

போதுநெறியனவேபேசிநின்பொன்வாயா
லூதத்தருவனெளிவண்டே—காதலாற்
கண்டார்வணங்குங்கயிலாயத்தெம்பெருமான்
வண்டார்மோந்தென்குழற்கேவா. (எகூ)

வாவாமணிவாயான்மாவின்றளிர்கோதிக்
கூவாதிருந்தகுயிற்பிள்ளா—யோவாதே
பூமாம்பொழிலுடுத்தபொன்மதில்சூழ்காளத்திக்
கோமான்வரவொருகாற்கூவு. (அ0)

கூவுதலும்பாற்கடலேசென்றவனைக்கூடுகவென்
றேவினன்பொற்கயிலையெம்பெருமான்—மேவிடசீ
ரன்பாற்புலிக்காலன்பாலன்பாலாசையினாற்
றன்பாற்பால்வேண்டுதலுந்தான். (அக)

தானேயுலகாள்வான்றன்கண்டவாவழக்க
மானான்மற்றாரிதனையன்றென்பார்—வானோர்
களைகண்டானாய்நின்றகாளத்தியாள்வார்
வளைகொண்டார்மாறந்தார்வந்து. (அஉ)

வந்தோரரக்கனூர்வண்கயிலைமால்வரையைத்
தந்தோள்வலியினையேதாங்கருதி—யந்தோ
விடந்தாரிடந்திட்டிடார்க்கீழெலிபோற்
கிடந்தார்வலியெலாங்கெட்டு. (அஙூ)

கெட்டவாக்கரேவேதியரேகேளீர்கொல்
பட்டதுவுமோராதுபண்டொருநா—ளொட்டக்
கலந்தரனார்காளத்தியாள்வார்மேற்சென்று
சலந்தரனார்பட்டதுவுந்தாம். (அச)

தாம்பட்டதொன்றுமறியார்கொல்சார்வரே
காம்புற்றசெந்நெற்கயிலைக்கோன்—பாம்புற்ற
வாரத்தார்பத்தர்க்கருகணையார்காலனார்
தூரத்தேபோவார்தொழுது. (அரு)

தொழுதுநமனுந்தன்றூதுவர்க்குச்சொல்லும்
வழுவில்சீர்க்காளத்திமன்னன்—பழுதிலாப்
பத்தர்களைக்கண்டாற்பணிந்தகலப்போமின்க
ளெத்தனையுஞ்சேய்த்தாகவென்று. (அசு)

வென்றைந்துங்காமாதிவேரறுத்துமெல்லவே
யொன்றநினைதிரேலொன்றலாஞ்—சென்றங்கை
மானுடையானென்னையுடையான்வடகயிலை
தானுடையான்றன்னுடையதாள். (அஎ)

தாளொன்றாற்பாதாளமூடுருவத்தண்விசும்பிற்
றோளொன்றாலண்டங்கடந்துருவித்—தோளொன்றாற்
றிக்கனைத்தும்போர்க்குந்திறற்காளிகாளத்தி
நக்கனைத்தான்கண்டநடம். (அஅ)

நடமாடுஞ்சங்கரன்றானான்முகனுங்காணான்
படமாடுபாம்பணையான்காணான்—விடமேவுங்
காரேறுகண்டன்கயிலாயன்றன்னுருவை
யாரேயறிவாரிசைந்து. (அகூ)

இசையுந்தன்கோலத்தையான்காணவேண்டி
வசையில்சீர்க்காளத்திமன்ன—னசைவின்றிக்

காட்டுமேற்காட்டிக்கலந்தென்னைத்தன்னோடுங்
கூட்டுமேற்கூடலேகூடு. (௯௦)

கூடியிருந்துபிறர்செய்யுங்குற்றங்க
ணாடித்தங்குற்றங்கணாடாதே—வாடி
வடகயிலையேத்தாதேவாழ்ந்திடுவான்வேண்டி
லடகயிலவாரமுதைவிட்டு. (௯௧)

விட்டாவிபோகவுடல்கிடந்துவெந்தீயிற்
பட்டாங்குவேமாறுபார்த்திருந்து—மொட்டாவாங்
கள்ளலைக்கும்பூஞ்சோலைக்காளத்தியுண்ணின்ற
வள்ளலைச்சென்றேத்துமனம். (௯௨)

மனமுற்றுமையலாய்மாதரார்தங்கள்
சனமுற்றுங்காமத்தேவீழ்வர்—புனமுற்
றினக்குறவரேத்துமிருங்கயிலைமேயான்
றனக்குறவுசெய்கலார்தாழ்ந்து. (௯௩)

தாழ்ந்தசடையுந்தவளத்திருநீறுஞ்
சூழ்ந்தபுலியதளுஞ்சூழரவுஞ்—சேர்ந்து
நெருக்கிவானோரிறைஞ்சுங்காளத்தியாள்வார்க்
கிருக்குமாகோலங்களேற்று. (௯௪)

ஏற்றின்மணியேயமையாதோவீர்ஞ்சடைமேல்
வீற்றிருந்தவெண்மதியும்வேண்டுமோ—வாற்றருவி
கன்மேற்பட்டார்க்குங்கயிலாயத்தெம்பெருமா
னென்மேற்படைவிடுப்பார்க்கிங்கு. (௯௫)

ஈங்கேவாவென்றருளியென்மனத்திலெப்பொழுது
நீங்காமனிவந்துநின்றாலுந்—தீங்கை
யடுகின்றகாளத்தியாள்வாய்நானல்ல
பணிகின்றவண்ணம்பணி. (௯௬)

பணியா துமுன்னிவனைப் பாவியேன் வாளா
கணியாதுகாலங்கழித்தே—னணியுஞ்
சருமாமிடற்றெங்கயிலாயத்தெங்கள்
பெருமானைதில்லைபிழை. (கூஎ)

பிழைப்புவாய்ப்பொன்றறியேன் பித்தேறினாற்போ
லழைப்பதேகண்டாயடியே—னழைத்தாலு
மென்னாதரவேகொண்டின்பொழில்சூழ்காளத்தி
மன்னாதருவாய்வரம். (கூஅ)

வரமாவதெல்லாம்வடகயிலைமன்னும்
பரமாவுன்பாதாரவிந்தஞ்—சிரமார
வேற்றிடும்போதாகவந்தென்மனத்திலெப்பொழுதும்
வைத்திடுநீவேண்டேன்யான்மற்று. (கூகூ)

மற்றம்பலபிதற்றவேண்டாமடநெஞ்சே
கற்றைச்சடையண்ணல்காளத்தி—நெற்றிக்க
ணாராவமுதின்றிருநாமமஞ்செழுத்துஞ்
சோராமலெப்பொழுதுஞ்சொல். (க00)

திருச்சிற்றம்பலம்.

—∘○※○∘—

உ

திருச்சிற்றம்பலம்.

நக்கீரதேவநாயனார்

அருளிச்செய்த

# திருவீங்கோய்மலையெழுபது.



அடியுமுடியுமரியுமயனும்
படியும்விசும்பும்பாயந்தேறி—நொடியுங்கா
லின்னதெனவறியாவீங்கோயேயோங்கார
மன்னதெனநின்றான்மலை. (௧)

அந்தவிளமாக்குழவியாயம்பிரிந்ததற்குக்
கொந்தவிழ்தேன்றோயத்துக்குறமகளிர்—சந்தி
னிலைவளைக்கையாற்கொடுக்குமீங்கோயேமேரு
மலைவளைக்கைவில்லிமலை. (௨)

அம்பவளவாய்மகளிரம்மனைக்குந்தம்மனையைச்
செம்பவளந்தாவென்னச்சீர்க்குறத்தி—கொம்பி
னிறுதலையிறாற்கிளைக்குமீங்கோயேநம்மேன
மறுதலைநோயதீர்ப்பான்மலை. (௩)

அரிகரியைப்பக்கண்டவிடத்தச்சலிப்பாயோடப்
பிரிவரியதன்பிடியைப் பேணிக்—கரிபெரிதுங்
கையெடுத்துநீட்டிக்கதஞ்சிறக்குமீங்கோயே
மையடுத்தகண்டன்மலை. (௪)

அரியுமுழுவையுமாளியுமேயீண்டிப்
பரிபிட்டுப்பன்மலர்கொண்டேறிச்—சொரிய
வெரியாடிகண்டுகக்குமீங்கோயேகூற்றந்
திரியாமற்செற்றான்சிலம்பு. (௫)

ஒளிதொடரவரிதொடரவாங்குடனே
வாளிகொடுதொடருமாக்குறவர்—கோளி
விடுசிலையினுற்புடைக்குமீங்கோயேநம்மேற்
கொடுவினைகள்வீட்டுவிப்பான் குன்று. (௬)

இடுதினைதின்வேழங்கடியக்குறவர்
வெடிபடுவெங்கவண்கலூன்ற—நெடுநெடென
நீண்டகழைமுத்துதிர்க்குமீங்கோயேயெங்குமணி
பூண்டகழையேறிபொருப்பு. (௭)

ஈன்றகுறமகளிர்க்கேழைமுதுகுறத்தி
நான்றகறிக்கேறசலைநற்கிழங்—கூன்றவைத்
தென்னன்னையுண்ணென்றெடுத்துரைக்குமீங்கோயே
மின்னன்னசெஞ்சடையான்வெற்பு. (அ)

ஈன்றகுழவிக்குமந்தியிறுவரைமே
லூன்றநறவத்தைத்தானுகித்—தோன்ற
விரலாற்றேன்றோய்த்தூட்டுமீங்கோயேநம்மேல்
வரலாநோய்தீர்ப்பான்மலை. (௯)

உண்டிருந்ததேனையறுபதங்களூடிப்போய்ப்
பண்டிருந்தயாழ்முரலப்பைம்பொழில்வாயக்—கண்டிருந்த
மாமயில்களாடிமருங்குவருமீங்கோயே
பூமயிலிதாதைபொருப்பு. (௧0)

ஊடிப்பிடியுறங்கவொண்கதலிவண்கனிக
ளோடிக்களிறுநயர்தெடுத்துக்—கூடிக்
குணமருட்டிக்கொண்டாடுமீங்கோயேவானோர்
குணமருட்டுங்கோளரவன்குன்று. (௧௧)

எய்யத்தொடுத்தோன்குழுத்திநோக்கேற்றதெனக்
கையிற்கணைகளைந்துகன்னிமான்—பையப்போ

வென்கின்றபாவனைசெயீங்கோயேதூங்கெயில்கள்
சென்றன்றுவென்ருன்சிலம்பு. (கஉ)

ஏழையிளமாதேயென்ஞெடுநீபோதென்று
கூழைமுதுவேடன்கொண்டுபோய்—வேழ
விளைக்குவால்வீட்டுவிக்குமீங்கோயேநந்தம்
விளைக்குவால்வீட்டுவிப்பான்வெற்பு. (கங)

ஏனமுழுதபுழுதியினமணியைக்
கானவர்தம்மக்கள்கனலென்னக்—கூன
லிறுக்கங்கதிர்வெதுப்புமீங்கோயேநம்மேன்
மறுக்கங்கடீர்ப்பான்மலை. (கச)

ஏனங்கிளைத்தவினபவளமாமணிகள்
கானலெரிபரப்பக்கண்டஞ்சி—யானை
யினமிரியமுல்லைநகுமீங்கோயேநம்மேல்
விளையிரியச்செற்றுகந்தான்வெற்பு. (கரு)

ஒருகணையுங்கேழலுயிர்செகுத்துக்கையி
லிருகணையுமானைமேலெய்ய—வருகணையு
மாளரிதாஞேடவரிவெருவுமீங்கோயே
கோளரிக்குங்காண்பரியான்குன்று. (கசு)

ஓங்கிப்பரந்தெழுந்தவொள்ளிலவத்தண்போதைத்
தூங்குவதோர்கொள்ளியெனக்கடுவன்—மூங்கிற்
றழையிறுத்துக்கொண்டோச்சுமீங்கோயேசங்கக்
குழையிறுத்தகாதுடையான்குன்று. (கஎ)

ஓடுமுகிலையுகிராலிறவூன்றி
மாடுபுகவான்கைமிகமடுத்து—நீடருவி
மாச்சியமுண்டுமனங்களிக்குமீங்கோயே
கோச்சியங்காண்பரியான்குன்று. (கஅ)

கண்டகனி நுகர்ந்தமந்தி கருஞ்சுனை நீ
ருண்டு குளிர்ந்திலவென் றாடிப்போய்க்—கொண்ட
விறைக்கீறி வாய்மடுக்கு மீங்கோயே நான்கு
மறைக்கீறு கண்டான் மலை. (௧௯)

கருங்களிற்றின் வெண்கொம்பாற் கல்லுரல்வாய் நல்லார்
பெருந்தினை வெண்பிண்டி யிடிப்ப—வருங்குறவன்
கைக்கொணருஞ் செந்தேன் கலந்துண்ணு மீங்கோயே
மைக்கொணருங் கண்டன் மலை. (௨0)

கனையபலாங் கனிகள் கல்லிலையர் தொக்க
நனையகலத் துரத்திலேந்தி—மனைகள்
வரவிரும்பி யாய்பார்க்கு மீங்கோயே பாங்கார்
குரவரும்பு செஞ்சடையான் குன்று. (௨௧)

கடக்களிறு கண்வளரக் கார்நிறவண் டார்ப்பச்
சுடர்க்குழையார் பாட்டெழவு கேட்டு—மடக்கிளிகள்
கீதந்தெரிந் துரைக்கு மீங்கோயே யாற்கீழ் நால்
வேதந்தெரிந் துரைப்பான் வெற்பு. (௨௨)

கறுத்தமுலைச் சூற்பிடிக்குக் கார்யானை சந்த
மிறுத்துக்கை நீட்டு மீங்கோயே—செறுத்த
கடதடத்த தோலுரிவைக் காப்பமையப் போர்த்த
விடமிடற்றி னான் மருவும் வெற்பு. (௨௩)

கங்குலிரை தேருங்கா கோதரங் கேழற்
கொம்பினிடைக் கிடந்தகூர் மணியைப்—பொங்கி
யுருமென் றுபுற்றடையு மீங்கோயே காமன்
வெருவொன் றக்கண் சிவந்தான் வெற்பு. (௨௪)

கலவிக்களி றசைந்த சாற்றெங்குங் காணு
திலைக்கொண் டேந்திக்கான் வீச—வுலவிச்சென்

ழுண்பிடிகாற்றேற்றுகக்குமீங்கோயேயாங்காய
வெண்பொடிநீற்றான் மருவும்வெற்பு. (உரு)

கன்னிப்பிடிமுதுகிற்கப்பருவமுட்பருகி
யன்னைக்குடிவரலாறஞ்சிப்—பின்னரே
யேன்றருக்கிமாதவஞ்செயீங்கோயேநீங்காத
மான்றரித்தகையான் மலை. (உசா)

கள்ளமுதுமறவர்காட்டகத்துமாவேட்டை
கொள்ளென்றழைத்தகுரல்கேட்டுத்—துள்ளி
யினக்கவலைபாய்ந்தோடுமீங்கோயேநந்த
மனக்கவலைதீர்ப்பான் மலை. (உஎ)

கல்லைப்புனமேய்ந்துகார்க்கொன்றைத்தார்போர்த்துக்
கொல்லையெழுந்தகொழும்புறவின்—முல்லையங்கள்
பல்லரும்புமொய்த்தினுமீங்கோயேமூவெயிலுங்
கொல்லரும்பக்கோல்கோத்தான் குன்று. (உஅ)

கல்லாக்குரங்குபளிங்கிற்கனிகாட்ட
வெல்லாக்குரங்குமுடனீண்டி—வல்லே
யிருந்துகிராற்கற்கிளைக்குமீங்கோயேமேனிப்
பொருந்தவராப்பூண்டான்பொருப்பு. (உகூ)

கண்கொண்டவிர்மணியினுப்பட்கருங்கேழல்
வெண்கோடுவீழ்ந்தவியன்சார—றண்கோ
டிளம்பிறைசேர்வான்கடுக்குமீங்கோயேவேதம்
விளம்பிறைசேர்வான் கடுக்கும்வெற்பு. (௩0)

காந்தளங்கைத்தலங்கள்காட்டக்களிமஞ்ஞை
கூந்தல்விரித்துடனேகூத்தாடச்—சாய்ந்திரங்கி
யோர்க்கொன்றைபொன்கொடுக்குமீங்கோயேசெஞ்சடைமேற்
கார்க்கொன்றையேன்றான் கடறு. (௩க)

குறமகளிர்கூடிக்கொழுந்தினைகள்குத்தி
நறவமாக்கஞ்சகங்கணாடிச்—சிறுகுறவர்
கைந்நீட்டியுண்ணக்களித்துவக்குமீங்கோயே
மைந்நீட்டுங்கண்டன்மலை. (௯௨)

கூழைமுதுமந்திகோல்கொண்டுதேன்பாய
வேழையிளமந்திசென்றிருந்து—வாழை
யிலையாற்றேனுண்டுவக்குமீங்கோயேயிஞ்சி
சிலையாற்றான்செற்றான்சிலம்பு. (௯௩)

கொல்லையிளவேங்கைக்கொத்திறுத்துக்கொண்டுசுனை
மல்லைநீர்மஞ்சனமாநாட்டிக்கொண்—டொல்லை
யிருங்கைக்களிறேறுமீங்கோயேமேனோய
வருங்கைக்களைவான்மலை. (௯௪)

கொவ்வைக்கனிவாய்க்குறமகளிர்கூந்தல்சேர்
கவ்வைக்கடிபிடிக்குங்காதன்மையாற்—செவ்வை
யெறித்தமலர்கொண்டுவிடுமீங்கோயேயன்பர்
குறித்தவரந்தான்கொடுப்பான்குன்று. (௯௫)

கொடுவிற்சிலைவேடர்கொல்லைபுகாமற்
படுகுழிகள்கல்லுதல்பார்த்தஞ்சி—நெடுநாகந்
தண்டேன்றிச்செல்லுஞ்சீரீங்கோயேதாழ்சடைமேல்
வண்டேன்றுந்தாரான்மலை. (௯௬)

கோங்கினரும்பழித்தகொங்கைக்குறமகளிர்
வேங்கைமணிநீழல்விளையாடி—வேங்கை
வரவதனைக்கண்டிரியுமீங்கோயேதீங்கு
வரவதனைக்காப்பான்மலை. (௯௭)

சந்தனப்பூம்பைந்தழையைச்செந்தேனிற்றோய்த்தியானை
மந்தண்மடப்பிடியின்வாய்க்கொடுப்ப—வந்தன்

சண்களிக்கத்தான்கலிக்குமீங்கோயேதேங்காதே
விண்களிக்கநஞ்சுண்டான்வெற்பு. (௩௮)

சந்தினிலையதனுட்டண்பிண்டிதேன்கலந்து
சொந்தியினிதுண்ணக்குறமகளிர்—மந்தி
யிளமகளிர்வாய்க்கொடுத்துண்ணீங்கோயேவெற்பின்
வளமகளிர்பாகன்மலை. (௩௯)

சாரற்குறத்தியர்கடண்மருப்பால்வெண்பிண்டி
சேரத்தருக்கிமதுக்கலந்து—வீரத்
தமரினிதாவுண்ணுஞ்சீரீங்கோயேயின்பக்
குமரன்முதுதாதையார்குன்று. (௪0)

தாயோங்கித்தாமடருந்தண்சாரலொண்கானம்
வேயோங்கிமுத்தமெதிர்பிதுங்கித்—தீயோங்கிக்
கண்கன்றித்தீவிளைக்குமீங்கோயேசெஞ்சடைமேல்
வண்கொன்றைத்தாரான்வரை. (௪௧)

செடிமுட்டச்சிங்கத்தின்சீற்றத்தீக்கஞ்சிப்
பிடியட்டமாக்களிறுபோந்து—கடமுட்டி
யென்னேசியென்னுஞ்சீரீங்கோயேயேந்தழலிற்
பொன்னேரனையான்பொருப்பு. (௪௨)

சுனைநீடுதாமரையின்றாதளைந்துசோதிப்
புனைநீடுபொன்னிறத்தவண்டு—மனைநீடி
மன்னிமணம்புணருமீங்கோயேமாமதியஞ்
சென்னியணிந்தான்சிலம்பு. (௪௩)

செந்தினையின்வெண்பிண்டிபச்சைத்தேனூற்குழைந்து
வந்தவிருந்தூட்டுமணிக்குறத்தி—பந்தியாத்
தேக்கிலைகளிட்டுச்சிறப்புரைக்குமீங்கோயே
மாக்கலைகள்வைத்தான்மலை. (௪௪)

தடங்குடைந்தகொங்கைக்குறமகளிர்தங்க
ளிடம்புகுந்தங்கின்னறவமாந்தி—யுடன்கலந்து
மாக்குரவையாடிமகிழ்ந்துவருமீங்கோயே
கோக்குரவையாடிகொழுங்குன்று. (சரு)

தாமரையின்றடைகைத்ததாமரைகடாடகையத்
தாமரையிற்பாய்ந்துகளுந்தண்புறவிற்—றமரையி
னீட்டம்புலிசிதறுமீங்கோயேயெவ்வுயிர்க்கும்
வாட்டங்கடீர்ப்பான்மலை. (சசு)

தெள்ளகட்டபூஞ்சுனையதாமரையின்றேமலர்வாய்
வள்ளவட்டப்பாழிமடலேறி—வெள்ளகட்ட
காராமைகண்படுக்குமீங்கோயேவெங்கூற்றைச்
சேராமற்செற்றான்சிலம்பு. (சஎ)

தேன்மருவும்பூஞ்சுனைக்கட்புக்குச்செழு. (சஅ)

(சகூ) (ருO) (ருக) (ருஉ) (ருங) (ருச)(ருரு) (ருசு) (ருஎ)
(ருஅ) (ருகூ) (சுO) (சுக)

கலைகள்வருவனகள்கண்டு—சிலையை
யிருந்தெடுத்துக்கோறெரியுமீங்கோயேமானைப்
புரிந்திடத்துக்கொண்டான்பொருப்பு. (சுஉ)

மத்தக்கரிமுகத்தைவாளரிகள்பீறவொளிர்
முத்தம்பனிநிகர்க்குமொய்ம்பிற்று—லத்தகைய
வேனற்புனநீடுமீங்கோயேதேங்குபுனல்
கூனற்பிறையணிந்தான்குன்று. (சுங)

மந்தியினங்கண்மணிவரையினுச்சிமேன்
முந்தியிருந்துமுறைமுறையே—நந்தி
யளைந்தாடியாலிக்குமீங்கோயேகூற்றம்
வளைந்தோடச்செற்றான்மலை. (சுச)

மந்திமகவினங்கள்வண்பலவின்றீஞ்சுளைக்கண்
முந்திப்பறித்தமுறியதனுட்—சிந்திப்போய்த்
தேனாறுபாயுஞ்சீரீங்கோயேசெஞ்சடைமேல்
வானாறுவைத்தான்மலை. (கூடு)

முள்ளார்ந்தவெள்ளிலவமேறிவெறியாது
கள்ளார்ந்தபூப்படியுங்கார்மயிரு—ளொள்ளா
ரெரிநடுவுட்பெண்கொடியாரேயக்குமீங்கோயே
புரிநெடுநூன்மார்பன்பொருப்பு. (கூசு)

வளர்ந்தவிளங்கன்னிமாங்கொம்பின்கொங்கை
யளைந்துவடுப்படுப்பான்வேண்டி—யிளந்தென்ற
லெல்லிப்புகநுழையுமீங்கோயேதீங்கருப்பு
வில்லிக்குக்கூற்றானான்வெற்பு. (கூஎ)

வானமதிதடவலுற்றவிளமந்தி
கானமுதுவேயின்கண்ணேறித்—தானங்
கிருந்துயரக்கைநீட்டுமீங்கோயேநம்மேல்
வருந்துயரந்தீர்ப்பான்மலை. (கூஅ)

வேய்வனத்துள்யானைதினைகவரவேறிருந்து
காய்வனத்தேவேடன்கணைவிசைப்ப—வேயணைத்து
மாப்பிடிமுன்னோட்டுமீங்கோயேமறைபரவு
பூப்பிடிபொற்றாளான்பொருப்பு. (கூகூ)

வழகிதழ்க்காந்தண்மேல்வண்டிருப்பவொண்டீ
முழுகியதென்றஞ்சிமுதுமந்தி—பழகி
யெழுந்தெழுந்துகைநெரிக்குமீங்கோயேதிங்கட்
கொழுந்தெழுந்தசெஞ்சடையான்குன்று. (எ0)

திருச்சிற்றம்பலம்.



☞ இப்பிரபந்தத்திலே சில செய்யுள்களும் அடிகளும் இறந்துபோயின.

திருச்சிற்றம்பலம்.

நக்கீரதேவநாயனார்

அருளிச்செய்த

# திருவலஞ்சுழிமும்மணிக்கோவை.



## அகவல்.

வணங்குதும்வாழிநெஞ்சேபுணர்ந்துடன்
பொருகடன்முகந்துகருமுகிற்கணநற்
படவரவொடுங்கவின்னிக்குடவரைப்
பொழிந்துகொழித்திழியருவிகுணகடன்
மடுக்குங்காவிரிமடந்தைவார்புன
லுடுத்தமணிநீர்வலஞ்சுழி
யணிநீர்க்கொன்றையண்ணலதடியே. (க)

## வெண்பா.

அடிப்போதுதந்தலைவைத்தவ்வடிகளுன்னிக்
கடிப்போதுகைக்கொண்டார்கண்டார்—முடிப்போதா
வாணாகஞ்சூடும்வலஞ்சுழியான்வானோருங்
காணாதசெம்பொற்கழல். (உ)

## கட்டளைக்கலித்துறை.

கழல்வண்ணமுஞ்சடைக்கற்றையுமற்றவர்காணகில்லார்
தழல்வண்ணங்கண்டேதளர்ந்தாரிருவருந்தாமரையி
னிழல்வண்ணம்பொன்வண்ணநீர்நிறவண்ணநெடியவண்ண
மழல்வண்ணமுந்நீர்வலஞ்சுழியாள்கின்றவண்ணலையே. (ங)

## அகவல்.

அண்ணலதுபெருமைகண்டனங்கண்ணுதற்
கடவுண்மன்னியதடயல்குவலஞ்சுழிப்

பனிப்பொருட்பயந்துபல்லவம்பழிக்குந்
திகழொளிமுறுவற்றேமொழிச்செவ்வாயத்
திருந்திருங்குழலியைக்கண்டு
வருநதியென்னுள்ளம்வந்தவப்போதே. (௪)

வெண்பா.

போதெலாம்பூங்கொன்றைகொண்டிருந்தபூங்கொன்றைத்
தாதெலாந்தன்மேனித்தைவருமாற்—றீதின்
மறைக்கண்டன்வாஞேன்வலஞ்சுழியான்சென்னிப்
பிறைக்கண்டங்கண்டணைந்தபெண். (௫)

கட்டளைக்கலித்துறை.

பெண்கொண்டிருந்துவருந்துங்கொலாம்பெருமான்றிருமால்
வண்கொண்டசோலைவலஞ்சுழியான்மதிசூடிநெற்றிக்
கண்கொண்டகோபங்கலந்தனபோன்மின்னிக்கார்ப்புனத்தூப
பண்கொண்டுவண்டினம்பாடநின்றூர்த்தனபன்முகிலே. (௬)

அகவல்.

முகிற்கணமுழங்கமுனிந்தவேழ
மெயிற்றிடையடக்கியவெகுளியாற்ற
வணிநடைமடப்பிடியருகுவந்தணைதருஞ்
சாரற்றண்பொழிலணைநதுசேருந்
தேனுகுதண்டலைசெறிதருவனத்திற
சருவரிவாரலெம்பெருமகீர்மல்கு
சடைமுடியொருவன்மருவியவலஞ்சுழி
யணிதிகழ்தோறறத்தங்கயத்தெழுந்த
மணிநீர்க்குவளையன்ன
வணிநீர்க்கருங்கணுயிழைபொருட்டே. (௭)

வெண்பா.

பொருட்டக்கீர்சில்பலிக்கென்றில்புகுந்தீரேனு
மருட்டக்கீர்யாதுமூரென்றேன்—மருட்டக்க

பாமறையமென்றார்வலஞ்சுழிநம்வாழ்வென்றார்
தாமறைந்தார்காணேன்கைச்சங்கு. (அ)

## கட்டளைக்கலித்துறை.

சங்கம்புரளத்திரைசுமந்தேறுங்கழியருகே
வங்கமலியுந்துறையிடைக்காண்டிர்வலஞ்சுழியா
ரங்கமபுலனைந்துமாகியநான்மறைமுக்கணக்கன்
பங்கன்றிருவர்க்கொருவடிவாகியபாவையையே. (கூ)

## அகவல்.

பாவைபாடியதுறையும்பாவை
மருவொடுவளர்ந்தவன்னமுமருவித்
திருவடிபடியேன்றீண்டியதிறனுங்
கொடியேனுள்ளங்கொண்டகுழலுங்கள்ளக்
கருங்கண்போன்றகாவியுநெருங்கி
ய வளைபோன்றதன்றேதவளச்
சாம்பலம்பொடிசாந்தெனத்தைவந்து
தேம்பல்வெண்பிறைசென்னிமிசைவைத்த
வெள்ளேற்றுழவன்வீங்குபுனல்வலஞ்சுழி
வண்டினம்பாடுஞ்சோலைக்
கண்டவம்மவக்கடிபொழிறுனே. (கo)

## வெண்பா.

தானேறுமானேறதைத்தொழேன்றன்சடைமேற்
றேனேறுகொன்றைதிறம்பேசேன் — வானேறு
மையாருஞ்சோலைவலஞ்சுழியானென்கொலென
கையார்வளைகவர்ந்தவாறு. (கக)

## கட்டளைக்கலித்துறை.

ஆறுகற்றைச்சடைக்கொண்டோரொற்றைப்பிறைசூடிமற்றைக்
கூறுபெண்ணாயவன்சண்ணூர்வலஞ்சுழிக்கொங்குதங்கு
நாறுதண்கொம்பரன்னீர்களின்னேநடந்தேகடந்தார்
சீறுவென்றிச்சிலைக்கானவர்வாழ்கின்றசேணெறியே. (க௨)

## அகவல்.

நெறிதருகுழலிவிறலியொடுபுணர்ந்த
செறிதருதமிழ்நூற்சீரியாழ்ப்பாண
பொய்கையூரன்புதுமணம்புணர்தர
மூவோமூன்றுபயன்பெற்றனமேநீயவன்
புனைதார்மாலைபொருந்தப்பாடி
யில்லதுமுள்ளதுஞ்சொல்லிக்கல்லலை
வாசகம்வழாமற்பேசவண்மையில்
வானரமகளிர்வான்பொருள்பெற்றனையவரே
லெங்கையர்கொங்கைக்குங்குமந்தழீஇ
விழையாவின்பம்பெற்றனர்யானே
லரனமர்ந்துறையுமணிநீர்வலஞ்சுழிச்
சுரும்பிவர்நறவயிற்சூழ்ந்தெழுதரும்பிற்
றீநீரன்னவாய்நீர்சோருஞ்
சிலம்புகுரற்சிறுபறைபூண்ட
வலம்புகுரற்கிங்கிணிக்களிறுபெற்றனனே. (கரு)

## வெண்பா.

தனமேறிப்பீர்பொங்கித்தன்னங்கம்வேறாய்
மனம்வேறுபட்டொழிந்தாண்மாதோ—வினமேறிப்
பாடாலம்வண்டலம்பும்பாய்நீர்வலஞ்சுழியான்
கோடாலங்கண்டணைந்தகொம்பு. (கசு)

## கட்டளைக்கலித்துறை.

கொம்பார்குளிர்மறைக்காடனைவானவர்கூடிநின்று
நம்பாவெனவணங்கப்பெறுவானைநகரெரிய
வம்பாய்ந்தவனைவலஞ்சுழியானையண்ணாமலைமேல்
வம்பார்நறுங்கொன்றைத்தாருடையானைவணங்குதுமே. (கரு)

## திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

நக்கிரதேவநாயனார்

அருளிச்செய்த

# திருவெழுகூற்றிருக்கை.



ஒருடம்பிருருவாயினையொன்றுபுரிந்
தொன்றினீரிதழ்க்கொன்றைசூடினை
மூவிலைச்சூலமேந்தினை
சுடருஞ்சென்னிமீமிசை
யிருகோட்டொருமதியெழில்பெறமிலைத்தனை
யொருகணையிருதோள்செவியுறவாங்கி
மூவெயினாற்றிசைமுரணரண்செகுத்தனை
யாற்றமுன்னெறிபயந்தனை
செறியவிரண்டுநீக்கி
டொன்றுநினைவோர்க்குறுதியாயினை
யந்நெறியொன்று
மனம்வைத்திரண்டுநினைவிலோர்க்கு
முன்னெறியுலகங்காட்டினையந்நெறி
நான்கெனவூழிதோற்றினை
சொல்லுமைந்தலையரவசைத்தசைந்தனை
நான்முகன்மேன்முகங்கபாலமேந்தினை
நான்முகமுப்புரிமார்பி
னிருவரங்கமொருங்குடனேந்திய
வொருவனின்னாதிகாணாதிருவர்
மூவுலகுழன்றுநாற்றிசையுழிதர
வைம்பெருங்குன்றத்தழலாய்த்தோன்றினை
யாறுநின்சடையதுவைந்துநின்னிலையது
நான்குநின்வாய்மொழிமூன்றுநின்கண்ணே

நாவாயகத்துளதேநாமுளமேநம்மீச
னவாய்போனன்னெறிக்கணுய்க்குமே—நாவாயாற்
றுய்க்கப்படும்பொருளைக்கூட்டுதுமற்றவர்க்காட்
டுய்க்கப்படுவதாஞ்சூது. (அ௬)

சூதொன்றுனக்கறியச்சொல்லினேனன்னெஞ்சே
சூதன்சொலற்கரியசோதியான்—சூதின்
கொழுந்தேன்கமழ்சோலைக்குற்றாலம்பாடிக்
கொழுந்தேயிழந்தேன்குருகு. (அ௭)

குருகிளவேய்த்தோண்மெலியக்கொங்கைமார்புல்கிக்
குருகிளையார்கோடுகொடாமே—குருகிளரும்
போதார்கழனிப்புகலூரமர்ந்துறையும்
போதாநின்பொன்முடிக்கட்போது. (அஅ)

போதரங்கவார்குழலாரென்னவார்நன்னெஞ்சே
போதரங்கநீர்கரந்தபுண்ணியனைப்—போதரங்கக்
கானகஞ்சேர்சோதியேகைவிளக்காநின்றுடுங்
கானகஞ்சேர்வாழ்க்கடிமைகல். (அ௯)

கற்றானஞ்சாடுகோவாலிகளந்தைக்கோன்
கற்றானைக்கல்லாதநாளெல்லாங்—கற்றா
னமரர்க்கமரரர்க்கடிமைபூண்டா
ரமரர்க்கமரராவார். (௯0)

ஆவாமணிதரறிவிலரேயாதொன்று
மாவார்போற்காட்டியழிகின்று—ராவா
பகனுடிப்பாடிப்படர்சடைக்குப்பல்பூப்
பகனுடியேத்தார்பகர்ந்து. (௯௧)

பகனுட்டம்பாட்டயரும்பாட்டோடாட்டெல்லி
பகனுட்டம்பாழ்படுக்குமுச்சி—பகனுட்டந்
தாங்காறெழுதெழுவார்தாழ்சடையார்தம்முடைய
தாங்காறெழுதறலை. (௯௨)

தலையாலங்காட்டிற்பலிதிரிவரென்னுந்
தலையாலங்காடர்தாமென்னுந்—தலையாய
பாகீரதிவளரும்பல்சடையீர்வல்லிடையீர்
பாகீரதிவளரும்பண்பு. (கங)

பண்பாயநான்மறையான்சென்னிப்பலிதேர்ந்தான்
பண்பாயபைங்கொன்றைத்தாரருளான்—பண்பாற்
றிருமாலுமங்கைச்சிவற்கடிமைசெய்வான்
றிருமாலுமங்கைச்சிவன். (கச)

சிவன்மாட்டுகவெழுதுநாளுநகுமென்னுஞ்
சிவன்மேயசெங்குன்றூரென்னுஞ்—சிவன்மாட்டங்
காலிங்கனகினையுமாயிழையீரங்கொன்றை
பாலிங்கனகினையுமாறு. (கரு)

அறுவெங்கூற்றுதைத்தானைத்தோல்போர்த்துகந்துங்
காறுர்சடையீர்க்கமையாதே—யாறுத
வானினத்தார்தாந்தமனியிழையினார்க்கடிமை
யானினத்தார்தாந்தவிர்ந்ததாட்டு. (கசா)

ஆட்டுமரவரழிந்தாரெலும்பணிவா
ராட்டுமிடுபலிகொண்டாரமர—ராட்டுமோர்
போரேற்றான்கொன்றையான்போந்தான்பலிக்கென்று
போரேற்றான்போந்தான்புறம். (கஎ)

புறந்தாழ்குழலார்புறனுரையஞ்சாதே
புறந்தாழ்புலிப்பொதுவுளாடி—புறந்தாழ்பொன் [ன்
மேற்றளிக்கோன்வெண்பிறையான் வெண்சுடர்போன்மேனியா
மேற்றளிக்கோனென்றுரையான்மெய். (கஅ)

மெய்யன்பகலாதவேதியன்வெண்புரிநூன்
மெய்யன்விரும்புவார்க்கென்றுமென்றும்—வெய்ய
துணையகலாநோக்ககலாபோற்றிகலாநெஞ்சே
துணையிகலாகூறுவானூறு. (கக)

நூறான்பயனாட்டின்றூறுமலர்சொரிந்து
நூறுநொடிவதனின்மிக்கதே—நூறு
வுடையான்பரித்தவெரியுத்தமனைவெள்ளே
றுடையானைப்பாடலாலொன்று. (௪௦௦)

திருச்சிற்றம்பலம்.

உ

திருச்சிற்றம்பலம்.

பரணதேவநாயனார்

அருளிச்செய்த

## சிவபெருமான்றிருவந்தாதி.



ஒன்றுரைப்பீர்போலப்பலவுரைத்திட்டோடாதே
யொன்றுரைப்பீராயினுறுதுணையா—மொன்றுரைத்துப்
பேரரவம்பூண்டுபெருந்தலையிலுண்டுழலும்
பேரரவம்பூணும்பிரான். (௧)

பிரானிடபமால்பெரியமந்தாரம்வில்லுப்
பிரானிடம்பேரொலிநாணாகம்—பிரானிடம்
பேணுமுமைபெரியபுன்சடையின்மேலமர்ந்து
பேணுமுமையிடவம்பெற்று. (௨)

பெற்றும்பிறவிபிறந்திட்டொழியாதே
பெற்றும்பிறவிபிறந்தொழிமின்—பெற்றுங்
குழையணிந்தகோளரவக்கூற்றுதைத்தான்றன்னைக்
குழையணிந்தகோளரவ நீ. (௩)

நீயேயாளாவாயுநின்மலற்குநன்னெஞ்சே
நீயேயாளாவாயுநீள்வாளி—னீயே
வேறூர்புனற்சடையாவெங்களிடைமருதா
வேறூர்புனற்சடையாவென்று. (௪)

என்றுமலர்தூவியீசன்றிருநாம
மென்றுமலர்தூற்றியேயிருந்து—மென்றும்

புகலூராபுண்ணியனேயென். (௫)

என்னேயிவளுற்றமாலென்சொலின்கொன்றை
யென்னேயிவளொற்றியூரென்று—மென்னே
தவளப்பொடியணிந்தசங்கரனேயென்றுந்
தவளப்பொடியானைச்சார்ந்து. (௬)

சார்ந்துரைப்பதொன்றுண்டுசாவாமூவாப்பெருமை
சார்ந்துரைத்தத்துவத்தினுட்பொருளைச்—சார்ந்துரைத்த
வாதியேயம்பலவாவண்டத்தையாட்கொள்ளு
மாதியேன்றென்பாலருள். (௭)

அருள்சேராதாரூர்தியாருமலெய்தா
யருள்சேராதாரூர்தியாடி—யருள்சேரப்
பிச்சையேற்றுண்டுபிறர்கடையிற்காணிமிர்த்துப்
பிச்சையேற்றுண்டுழல்வாய்பேச்சு. (௮)

பேச்சுப்பெருகுவதென்பெண்ணணலியென்று
பேச்சுக்கடற்கபெருவெளியைப்—பேச்சுக்
குரையானையூனுக்குயிரானையொன்றற்
குரியானைநன்னெஞ்சேயுற்று. (௯)

உற்றுரையாய்நன்னெஞ்சேயோதச்சடல்வண்ண
னுற்றுரையாவண்ணமொன்றுளனே—யுற்றுரையா
யானையுரித்தானையப்பனையெப்பொழுது
[illegible]டைந்து. (௰)

அடைந்துன்பாலன்பாயணிமணிகொண்டர்ச்சித்
தடைந்துன்பான்மேலுகுத்தமாணிக்—கடைந்துன்பா
லவ்வமுதமூட்டியணிமலருஞ்சூழ்ந்தன்று
வவ்வமுதமாக்கினாய்காண். (கக)

சானாயகவாலிகதிர்முடிமேற்கங்கைதனைக்
கானாயக்காருருவிற்சேருமையைக்—கானா
யுடைதலைகொண்டேநேர்திரிவானைநச்சி
யுடைதலைகொண்டேநேர்திரி. (கஉ)

திரியும்புரமெரித்தசேவகனார்செவ்வே
திரியும்புரமெரியச்செய்தார்—திரியு
மரியான்றிருக்கயிலையென்றதார்மேனி
யரியான்றிருக்கயிலையாம். (கh

ஆம்பரிசேசெயதங்கழியாக்கை—யாம்பரிசே
யேத்தித்திரிந்தானையெம்மானையம்மானை
யேத்தித்திரிந்தானையேத்து. (கசு)

ஏத்துற்றுப்பார்த்தனெழில்வானடைவான்போ
லேத்துற்றுப்பார்த்தனிறைஞ்சுதலு—மேத்துறறுப்
பாசுபதமன்றளித்தபாசூரான்பானீற்றான்
பாசுபதமின்றளியென்பால். (கரு)

பாலார்புனல்பாய்சடையானுக்கன்பாகிப்
பாலார்புனல்பாய்சடையானுள்—பாலாடி
யாடுவான்பைங்கணரவூர்வான்மேனிநீ
யாடுவானென்றென்றேயாங்கு. (கசு)

ஆங்குரைக்கலாம்பொன்மலர்ப்பாதமஃதன்றே
யாங்குரைக்கலாம்பொனணிதில்லை—யாங்குரைத்த
வம்பலத்துமண்டத்துமப்பாலுமாய்நின்ற
வம்பரத்துமண்டத்துமாம். (கஎ)

மாயனையோர்பாகமமர்ந்தானை வானவரு
மாயவருமால்கடனஞ்சுண்டானை—மாய
வருவானை மாலையொளியானை வானி
னுருவானையேத்தியுணர். (௧௮)

உணராவளைகழலாவுற்றுன்பாற்சங்க
முணராவளைகழலவொட்டி—யுணரா
வளைந்தானமேனியணியாரூரேசென்
றளைந்தானையாமாறுகண்டு. (௧௯)

கண்டிறந்துகாயெரியின்வீழ்ந்துகடிதோடிக்
கண்டிறந்துகாமன்பொடியாகக்—கண்டிறந்து
கானினுகந்தாடுங்கருத்தர்க்குக்காட்டினனா
கானினுகந்தாடுங்கருத்து. (௨௦)

கருத்துடையவாதிகளைறமிடற்றெம்மீசன்
கருத்துடையகங்காளவேடன்—கருத்துடைய
வானேற்றானீற்றானனலாடியாமாத்து
ரானேற்றானீறானெறி. (௨௧)

எரியாடியேகமபமென்றுகார்மேனி
யெரியாடியேகம்பமாரு—மெரியாடி
யீமத்திடுங்காடுதேருமிறைபணிபப
வீமத்திடுங்க[illegible]தான். (௨௨)

தானயன்மால[illegible]ணித்துலகிற்
றானயன்மால[illegible]சன்[illegible]யான—றானக்
கரைப்பகிர்ந்தான[illegible]யத்தண்புலித்தோலாடைக்
கரைப்படுத்தான்[illegible]ச்சார். (௨௩)

சாராவார்தா[illegible]ரன்றன்மேனிமேற்
சாராவார்[illegible]—சார்வா
யரவமது[illegible]கொன்றையொற்றி
யரவமது[illegible] (௨௪)

மேலாயதேவர்வெருவவெழுநஞ்ச
மேலாயமின்றிவேறுண்பொழுதின்—மேலாய
மங்கையுமைவந்தடுத்திலளேவாளாரு
மங்கையுமைவந்தடுத்து. (௨௫)

அடுத்தபொன்னம்பலமேசார்வுமதனு
ளடுத்ததிருநட்டமஃதே—யடுத்ததிரு
வானைக்காவாடுவதுமேலென்புபூண்பதுவு
மானைக்காவான்றனமைவு. (௨௬)

அமைவும்பிறப்புமிறப்புமாமற்றுங்
கமைவும்பரமானவாதி—யமையும்
திருவாலவாய்சென்றுசேராதுமாக்க
டிருவாலவாய்சென்றுசேர். (௨௭)

சென்றுசெருப்புக்காலாற்செல்லமலர்நீக்கிச்
சென்றுதிருமுடிவாய்நீர்வார்த்துச்—சென்றுதன்
கண்ணிடந்தன்றப்புங்கருத்தற்குக்காட்டினானே
கண்ணிடந்தன்றப்பாமைப்பார்த்து. (௨௮)

பார்த்துப்பரியாதேபாணீறுபூசாதே
பார்த்துப்பரிந்தங்கம்பூணாதே—பார்த்திட்
டுடையானஞ்சோதாதேயூனுரைக்கைவிட்
டுடையானஞ்சோதாதாருள. (௨௯)

ஊணொன்றுமில்லையுறக்கில்லையுன்மாலி
னாணென்றுபேசவோர்சங்கிழந்தா—ளாணொன்றும்
விட்டானேவேள்விதுரந்தானேவெள்ளநீர்
விட்டானேபுனசடையேயவ்வேறு. (௩௦)

வேறுரைப்பன்கேட்டருளும்வேதநான்காறங்கம்
வேறுரைத்தபேணிய[illegible]டையான்—வேறுரைத்த
பாதத்தா[illegible]பைங்கண[illegible]ஆர்வாய்பாருரும்
பாதத்தாயென்றுமலர். (௩௧)

மலரணைந்துகொண்டுமகிழ்வாயுன்பாத
மலரணைந்துமானயனமாகு—மலரணைந்து
மன்சக்கரம்வேண்டவாளாவளித்தனையால்
வன்சக்கரம்பரனேவாய்த்து. (௩௨)

வாய்த்தவடியார்வணங்கமலரோன்மால்
வாய்த்தவடியுமுடியுங்காணார்—வாய்த்த
சலந்தரனைக்கொன்றிட்டுச்சங்கரனாரென்றே
சலந்தரனாய்நின்றவாறாம். (௩௩)

தாமென்னநாமென்னவேறில்லைதந்துறவிற்
றாமென்னைவெறுத்தனித்திருந்து—தாமென்
கழிப்பாலைசேருங்கறைமிடற்றாரென்றே
கழிப்பாலைசேருங்கடன். (௩௪)

கடனாகக்கைதொழுமின்கைதொழவல்லீரேற்
கடனாகைக்காரோணமேயார்—கடநாக
மாளவுரித்தாடுவார்நம்மேலைவல்வினைநோய்
மாளவிரித்தாடுமால்வந்து. (௩௫)

வந்தார்வளைகழல்வார்வாடித்துகில்சோர்வார்
வந்தார்முலைமெலிவார்வார்குழல்கள்—வந்தார்
சுரிதருவாரைங்கொன்றைத்தாராரைக்கண்டு
சுரிதருவாரைங்கொன்றைத்தார். (௩௬)

தாரானெனினுஞ்சடைமுடியான்சங்கரனந்
தாரான்றசமுகனைத்தோணெரித்துத்—தாராய
நாளுங்கொடுத்தந்தவானவர்கட்ம்முன்னே
வாளுங்கொடுத்தான்மதித்து. (௩௭)

மதியாருஞ்செஞ்சடையான்வன்கொன்றைத்தாரான்
மதியாருமாலுடையபாகன்—மதியாரு
மண்ணுமலைசேராராரோடுங்கூடாகி
மண்ணுமலைசேர்வரால். (௩௮)

ஆலநிழற்கீழிருப்பதுவுமாய்வதற
மாலமமுதுசெய்வதாடுவதீ—யாலந்
துறையுடையானானையுரியுடையான்சோற்றுத்
துறையுடையான்சோராதசொல்லு. (௩௯)

சொல்லாயமின்றித்தொலைவின்றித்தூநெறிக்கட்
சொல்லாய்ப்பெருத்தசுடரொளியாய்ச்—சொல்லா
விரட்டத்தானைவிரவார்புரமட்ட
வீரட்டத்தானைவிரை. (௪0)

விரையாருமத்தம்விரகாகச்சூடி
விரையாரும்வெள்ளெலும்புபூண்டு—விரையாரு
நஞ்சுண்டவாதிநலங்கழல்கள்சேராதார்
நஞ்சுண்டவாநிலம். (௪௧)

நலம்பாயுமாக்கநலங்கொண்டலென்ற
னலம்பாயுமானன்குருவ—நலம்பாட்செய்
தார்த்தார்க்குமண்ணாமலையானிடந்
தார்த்தார்க்குமண்ணாமலை. (௪௨)

மலையார்கலைபோடவாரோடக்கொங்கை
மலையார்கலைபோய்மாலானாள்—மலையார்
கலையுடையான்வானின்மதியுடையான்காவாத்
தலையுடையானென்றுதொழுதாள். (௪௩)

தாளார்கமலமலரோடுதண்மலருந்
தாளாரவேசொரிந்துதாமிருந்து—தாளார்
சிராமலையாய்சேமத்துணையேயென்றேத்துஞ்
சிராமலையார்சேமத்துளார். (௪௪)

ஆர்துணையாவாங்கிருப்பதமபலவாவுஞ்சலுலம
டார்துணையாவானையுரிமூடி—யார்துணையாம்
பூவணத்தாய்பூதப்படையாளிபொங்கொளிடாய்
பூவணத்தாடென்னின்புகல். (௪௫)

புகலூருடையாட்பொறியரவம்பூணி
புகலூர்ப்புனற்சடையெம்பொன்னே—புகலூராய்
வெண்காடாவேலைவிடமுண்டாய்வெள்ளேற்றாய
வெண்காடாவென்பேனேநான். (சகஅ)

நானுடையமாடேயென்ஞானச்சுடர்விளக்கே
நானுடையகுன்றமேநான்மறையாய்—நானுடைய
காடுடையாய்காலங்களானாயகனலாடுங்
காடுடையாய்காலமானாய். (சஎ)

ஆயன்றமரராழியாவகைசெய்தா
யாயன்றமரராழியாமை—யாயன்
றிருத்தினான்செங்கண்விடையூர்வான்மேனி
திருத்தினான்சேதுக்கரை. (சஅ)

கரையேனுமாதர்கருவானசேருக்
கரையேனுமாதுகரையாங்—கரையேனுங்
கோளிலியெம்மாதிகுறிபரவவல்லையே
கோளிலியெம்மாதிகுறி. (சகூ)

குறியார்மணிமிடற்றுக்கோலஞ்சேர்ஞானக்
குறியாகிநின்றகுணமே—குறியாகு
மாலங்காடெய்தாவடைவேன்மேலாடரவ
மாலங்காடெய்தாவடை. (ரு0)

அடையும்படைமழுவுஞ்சூலமிலம்பங்கி
யடையுமிறப்பறுப்பதானா—லடைய
மறைக்காடுசேருமனனேரென்பாற்சேரா
மறைக்காடுசேர்மக்கடாம். (ருக)

தாமேயவாறுசமயமுதற்பரமுந்
தாமேயவாறுதழைக்கின்றார்—தாமேற்
றழலுருவர்சங்கரவர்பொங்கரவம்பூண்ட
தழலுருவர்சங்கரரென்பார். (ருஉ)

பார்மேவுகின்றபலருருவர்பண்டரங்கர்
பார்மேவுகின்றபடுதலையர்—பார்மேல்
வலஞ்சுழியைச்சேர்வர்மலரடிகள்சேர்வார்
வலஞ்சுழியைச்சேர்வாருவார். (ருங)

வாரணிந்தகொங்கையுமையாண்மணவாளா
வாரணிந்தகொன்றைமலர்சூடீ—வாரணிந்த
செஞ்சடையாய்சீர்கொள்சிவலோகாசேயொளியாய்
செஞ்சடையாய்செல்லநினை. (ருச)

நினைமால்கொண்டோடிநெறியானதேடி
நினைமாலேநெஞ்சநினையா—நினைமால்கொண்
டோர்தேடியும்பாராலம்பரமாகாளாவென்
றூர்தேடியென்றுரைப்பானூர். (ருரு)

ஊர்வதுவுமானேறுடைதலையிலுண்பதுவு
மூர்வதுவுமெல்லுரகமூடுவர்கொ—ரூர்வதுவு
மேகம்பமென்றுமிடைமருதைநேசத்தார்க்
கேகம்பமாய்நின்றவேறு. (ருசா)

ஏறேய்வாண்முதலேயேகம்பாவெம்பெருமா
னேறேறியூருமெரியாடி—யேறேய
வாதிவிடங்காகாறையண்டத்தாயம்மானே
யாதிவிடங்காவுமைநன்மாட்டு. (ருஎ)

மாட்டும்பொருளையுருவைவருகாலம்
வாட்டும்பொருளாய்மறையானே—வாட்டு
முருவானைச்சோதியுமைபங்காபங்கா
யுருவானசோதியுரை. (ருஅ)

உரையாவிருப்பதுவுமுன்னையேயூனி
னுரையாயுயிராய்ப்பொலிந்தா—யுரையாய
வம்பொனேசோதியணியாரூர்சேர்கின்ற
வம்பொனேசோதியேயாய்ந்து. (ருக)

ஆய்ந்துன்றன்பாதமடையவருமென்மே
லாய்ந்தென்றன்பாசமலமறுத்—தாய்ந்துன்றன்
பாலணையச்செய்தபரமாபரமேட்டி
பாலணையச்செய்தபரம். (௬௰)

பரமாயபைங்கட்சிரமேயப்பூண்ட
பரமாயபைங்கட்சிரமே—பரமாய
வாறடைந்தசெஞ்சடையாயைந்தடைந்தமேனியா
யாறடைந்தசெஞ்சடையாயன்பு. (௬௧)

அன்பேயுடையவரனேடணையாத
வன்பேயுடையவனலாடி—யன்பே
சழுமலத்துளாடுங்கரியுரிபோர்த்தானே
கழுமலத்துளாடுங்கரி. (௬௨)

கரியார்தாஞ்சேருஞ்சலைமறிகைக்கொண்டே
கரியார்தாஞ்சேருங்கவாலி—கரியாகி
நின்றகழிப்பாலைசேரும்பிரானும
நின்றகழிப்பாலைசேர். (௬௩)

சேரும்பிரானுமஞ்சிந்திச்கவல்லீரேற்
சேரும்பிரானுமஞ்சிந்திக்கச்—சேரு
மலையான்மகளைமகிழ்ந்தாரூர்நின்றான்
மலையான்மகளைமகிழ்ந்து. (௬௪)

மகிழ்ந்தன்பர்மாகாளஞ்செய்யுமகளிர்
மகிழ்ந்தம்பரமாகிநின்றார்—மகிழ்ந்தங்க
மொன்றாகிநின்றவுமைபங்கனொற்றியூ
ரொன்றாகிநின்றவுமை. (௬௫)

உமைகங்கையென்றிருவருற்றவுணர்வு
முமைகங்கையென்றிருவர்காணா—ருமைகங்கை
கார்மிடற்றம்மேனிக்கதிர்முடியான்கண்மூன்று
கார்மிடற்றம்மேனிக்கினி. (௬௬)

இனியவாகாணீர்களிப்பிறவியெல்லா
மினியவாவாகாமையற்று—மினியவா
ரூக்கைபலசெய்தவாமாத்தூரம்மானை
யாக்கைபலசெய்தவன்று. (௬௭)

அன்றமரருய்யவமிர்தமவர்க்கருளி
யன்றவுணர்வீடவருள்செய்தோ—னன்றவுணர்
சேராமணின்றவடிகளடியார்க்குச்
சேராமணின்றசிவம். (௬௮)

சிவனந்தஞ்செல்கதிக்கோர்கண்சேர்வதாக்குஞ்
சிவனந்தஞ்செல்கதிக்கோர்கண்ணுஞ்—சிவனந்தஞ்
சேருமுருவுடையீர்செங்காட்டங்குடிமேற்
சேருமுருவுடையீர்செல். (௬௯)

செல்லுமளவுஞ்சிந்தைபாமற்சிந்திமின்
செல்லுமளவுஞ்சிவனும்மைச்—செல்லுந்
திருமீச்சூர்ச்சேறவேசெங்கணேறூருந்
திருமீச்சூரீசன்றிறம். (௭௰)

திறமென்னுஞ்சிந்தைதெரிந்தும்மைமக்காணுந்
திறமென்னுஞ்சிந்தைக்குமாமே—திறமென்னுஞ்
சித்தத்திர்செல்வத்திருக்கடவூர்சேர்வென்ற
சித்தத்திரேசெல்லுநீர். (௭௧)

நீரேயெருதேறுநின்மலனாராவீரு
நீரேநெடுவானினின்றிரு—நீரே
நெருப்பாயதோற்றத்துநீளாறும்பூண்டு
நெருப்பாயதோற்றநிலைத்து. (௭௨)

நிலைத்திவ்வுலகனைத்துநீரேயாய்நின்றீர்
நிலைத்திவ்வுலகனைத்துநீரே—நிலைத்திரக்
காணப்பேரீர்கங்கைசூடினீர்கங்காளீர்
காணப்பேரீர்கங்கையீர். (௭௩)

ஈரமுடையவிளமதியஞ்சூடினீ
ரீரமுடையசடையினீ—ரீர
வருங்காலமாயினீரிவ்வுலகமெல்லாய்
வருங்காலமாயினீர்வாழ்வு. (எச)

வாழ்வார்மலரணைவார்வந்தவருநாகம்
வாழ்வார்மலரணைவார்வண்கங்கை—வாழ்வாய
தியாடவாறுள்வான்வான்கழல்கள்சேராதார்
தீயாடவாறுளுமாறு. (எரு)

மாறுதவாணையின்றோல்போர்த்துவளர்சடைமேன்
மாறுதநீருடையமாகாளர்—மாறு
விடுங்கையர்சேருமெழிலவாயமுன்னே
விடுங்கையர்சேர்வாசவீ. (எசு)

ஈயும்பொருளேயெமக்குச்சிவலோக
மீயும்பொருளேயிடுகாட்டி—னீயும்
படநாகம்பூணும்பரலோகிரென்னீர்
படநாகம்பூணும்படி. (எஎ)

படியேறும்பார்த்துப்பரத்தோடுங்கூட்டிப்
படியேறும்பார்த்துப்பரனைப்—படியேனைப்
பாருடையாய்பைங்கண்புலியதளாயபானீற்றாய்
பாருடையாயாறுன்பரம். (எஅ)

பரமாயவிட்டுநின்பாதம்பணிந்தேன்
பரமாயவாதிப்பரனே—பரமாய
நீதியேநின்மலனேநேரார்புரமூன்று
நீதியேசெய்தாய்நினை. (எகூ)

நினையடைந்தேன்சித்தநிலையாரும்வண்மை
நினையடைந்தேன்சித்தநிமலா—நினையடைந்தேன்
கண்டத்தாய்காளத்தியானேகனலாருங்
கண்டத்தாய்காவாலிகா. (அ0)

காவார்பொழிற்கயிலையாதிகருவேயெங்
காவாயப்பொலிந்தகடுவெளியே—காவாய
வேறுடையாயென்னையிடைமருதிலேயென்று
மேறுடையாய்நீயேசரி. (அக)

கரியானுநான்முகனுமாய்நின்றகண்ணன்
சரியாருங்கூற்றங்கனியே—சரியாருங்
காடுடையாய்காலங்களானாய்கனலாடுங்
காடுடையாய்காலமானாய். (அஉ)

ஆனாயானாவடலேறேயாரூர்க்கோ
னானாயானாவமுதமேயானா—யானாய்
கவரேலும்போதேந்திகதநாகம்பூணி
சவரேலும்புதார்கைவளை. (அங)

வளைகொண்டாயென்னைமடவார்கண்முன்னே
வளைகொண்டாய்மாசற்றசோதி—வளைகொண்டாய்
மாற்றார்கதுவமதிலாரூர்சேர்கின்ற
மாற்றாரூர்கின்றமயல். (அச)

மயலானதீருமருந்தாகுமற்று
மயலானாராரூர்மயரார்—மயலான
கண்ணியர்தம்பாகாகனியேகடிக்கொன்றைக்
கண்ணியலான்பாதமேகல். (அரு)

கலைமான்கையேனப்பூண்காண்கயிலைமானின்
கலைமான்கறைகாண்கவாலி—கலைமானே
யாடுவதும்பாடுவதுங்காலனைப்பொன்னம்பலத்து
ளாடுவதுமாடானரன். (அசு)

அரனேயணியாரூர்மூலட்டத்தானே
யரனேயடைந்தார்தம்பாவ—மரனே
யயனார்தமங்கமடையாகக்கொண்டா
யயனாகமாகவடை. (அஎ)

ஆடையுந்திசையீசன்றிண்டோளாகாச
மடையுந்திருமேனியண்ட—மடையுந்
திருமுடிகால்பாதாளமாகைகடலங்கி
திருமுடிநீர்கண்கள்சுடர்மூன்று. (௮௮)

மூன்றரணமெய்தானேமூலத்தனிச்சுடரே
மூன்றரணமாயநின்றமுக்கண்ணனே—மூன்றரண
மாய்நின்றசோதியணியாரூர்சேர்கின்ற
வாயநின்றசோதியறம். (௮௯)

ஆறமாய்வரேனுமடுகாடுசேர
வறமாளுரங்கமணிவ—ரறமாய
வல்வினைகள்வாராவெனுமருகலாரென்ன
வல்வினைகள்வாராதவாறு. (௯௦)

ஆறுடையர்நஞ்சுடையராடரவுடைய
ராறுடையர்காலமைவுடைய—ராறுடைய
சித்தர்தீர்செல்வத்திருக்கயிலைசேர்கின்ற
சித்தர்தீரெல்லார்க்குஞ்சேர்வு. (௯௧)

சேர்வுமுடையர்செழுங்கொன்றைத்தாரார்நஞ்
சேர்வுமுடையரரவுடையர்—சேருந
திருச்சாயக்கட்டாடுவரேற்செய்தக்கவென்றுந்
திருச்சாக்காட்டேநின்னுருவு. (௯௨)

உருவுபலகொண்டொருவராய்நின்று
ருருவுபலவாமொருவ—ருருவு
பலவல்லவொன்றலலபைஞ்ஞீலிமேயார்
பலவல்லவொன்றுப்பகர். (௯௩)

பகரப்பரியானைமேலூராதானைப்
பகரப்பரிசடைமேல்வைத்த—பகரப்
பரியானைச்சேருலகம்பல்லுயிர்களெல்லாம்
பரியானைச்சேருலகம்பண். (௯௪)

பண்ணாகப்பாடிப்பலிகொண்டாய்பாரேழும்
பண்ணாகச்செய்தபரஞ்சோதீ—பண்ணா
வெருதேறியூர்வாயெழில்வஞ்சியெங்க
ளொருதேறியூர்வாயிடம். (௯௫)

இடமாயவெவ்வுயிர்க்குமேகம்பமேயா
ரிடமாணாக்கிந்தவிறைவ—ரிடமாய
வீங்கோய்மலையாரெழிலார்சிராமலையா
ரீங்கோய்மலையாரெமை. (௯௬)

எமையாளவந்தாரிடரானதீர
வெமையாளுமெம்மையிமையோ—ரெமையாளும்
வீதிவிடங்கர்விடமுண்டகண்டர்விடையூர்
வீதிவிடங்கர்விடையூர்தி. (௯௭)

தீயானமேனியனேசெம்பவளக்குன்றமே
தீயானசேராமற்செய்வானே—தீயான
செம்பொற்புரிசைத்திருவாரூராயென்னைச்
செம்பொற்சிவலோகஞ்சேர். (௯௮)

சேர்கின்றசிந்தைசிதையாமற்செய்வானே
சேர்கின்றசிந்தைசிதையாமற்—சேர்கின்றே
னொற்றியூரானேயுறவாருமில்லையினி
யொற்றியூரானேயுறும். (௯௯)

உறுமுந்தமுன்னேயுடையாமலின்னே
முறுமுந்தமுன்னேயுடையாம—லுறுமுந்த
மோரைந்துடைத்துற்றுணர்வோடிருந்தொன்று
யோரைந்துரைக்கவல்லார்க்கொன்று. (௧௦௦)

ஒன்றைப்பரணருரைத்தவந்தாதிபல
வொன்றைப்பகரிலொருகோடி—யொன்றைத்
தவிராதுரைப்பார்தளராருலகிற்
றவிராசிவலோகந்தான்.

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்.

இளம்பெருமானடிகள்

அருளிச்செய்த

# சிவபெருமான்றிருமும்மணிக்கோவை.

## அகவல்.

முதல்வன்வகுத்தமதலைமாடத்
திடவரையூன்றியகடவுட்பாண்டிற்
பள்ளிச்செம்புயலுள்விழுதூறீஇப்
பக்கஞ்சேணிவர்தழுக்தமாச்சுட
ரெரிவளியெடுபினுஞ்சிறுகடுக்குருநின்
னடிநிழலெளியவோவைத்தமுடிமிசை
யிலங்குவளைத்தளிப்போதவிரித்த
வலங்குகதிரொலியணியணிந்தெந்தைமாறே. (௧)

## வெண்பா.

மாறுதடுத்தமணிக்கங்கைதிங்களின்
றேறுதடுப்பக்கிடக்குமே—நீறடுத்த
செந்தாழ்வரையின்றிரள்போற்றிருமேனி
யெந்தாய்நின்சென்னியிடை. (௨)

## கட்டளைக்கலித்துறை.

இடைதரில்யாமொன்றுணர்த்துவதுண்டிடையோர்சிமையத்
தடைதருமூரிமந்தாரம்விராய்நதிவெண்ணிலவின்
றொடைதருதுண்டங்கிடத்தினுந்தொண்டரொதூக்கியிட்ட
புடைதருபுல்லெருக்குஞ்செல்லுமோநின்புரிசடைக்கே. (௩)

## அகவல்.

சடையே, நீரகந்ததும்பிநெருப்புக்கலிக்குமே
மிடறே, நஞ்சகந்துவன்றியமிர்தயிலிற்றுமே

வடிவே, முளியெரிகவைஇத்தளிர்தயங்கும்மே
யடியே, மடங்கன்மதஞ்சிறிமலர்பழிக்கும்மே
யஃதான், றினையவென்றறிகிலம்யாமேமுனைதவத்
தலைமூன்றுவருத்தனிக்காட்
கொலையூன்றருகுமிநெடுவேலோயே. (௪)

## வெண்பா.

வேலைமுகடும்விசும்பகடுங்கைகலந்த
காலைநீரெங்கேகரந்தனையான் — மாலைப்
பிறைக்கிருகண்ணுதலாபெண்பாகாவையோ
விறைக்கூருமெங்கட்கிது. (௫)

## கட்டளைக்கலித்துறை.

இறுநீரொழிமினிடைதந்துமைமிமையத்தரசி
புறுநீர்மணத்தும்புலியதளேயுடைபொங்குகங்கை
முறுநீர்கொழித்தவிளமணன்முன்றின்மென்றேரூட்டடிதிகட்
செறுநீர்ததும்பத்திவளஞ்செய்செஞ்சடைத்தீவண்ணரே. (௬)

## அகவல்.

வண்ண, மைஞ்சுதலைகவைஇப்பவளமால்வரை
மஞ்சுமிவிலங்கிப்பகல்செகுக்கும்மே
யென்னைப், பழமுடைச்சிறுகலத்திடுபலிபெய்வோ
ணைஞ்சகம்பிணிக்கும்வஞ்சமோவுடைத்தே
யஃதான்று, முளையெயிற்றுக்குருளையின்றுயிலெடுப்ப
நடுங்குதலைச்சிறுநிலாவிதிர்க்குங்கொடும்பிறைத்
தேமுறுமுதிர்ச்சடையிறைவ
மாமுறுகொள்கைமாயமோவுடைத்தே. (௭)

## வெண்பா.

உடைதலையின்கோவையொருவடமோகொங்கை
புடைமலிந்தவெள்ளெருக்கம்போதோ—சடைமுடிமேல்
முன்னாள்புத்தமுகிணிலவோமுக்கணு
வின்னாள்கண்டதிவள். (௮)

## கட்டளைக்கலித்துறை.

இவளப்பனிமாலிமையத்தணங்குகற்றைச்சடைமே
லவளப்புத்தேளிருலகிற்கரசியதுகொண்டென்னை
யெவருக்குநீநல்லதியாரைமுன்னெய்திற்றெற்றேபிதுகா
தவளப்பொடிச்செக்கர்மேனிமுக்கண்ணுடைச்சங்கரனே. (௯)

## அகவல்.

சரதலநுழைத்தமரகதக்கபாடத்
தயில்வழங்குகுடுமிக்கயிலைநாடநின்
னணங்குதுயிலெடுப்பிற்பிணங்குநிலாப்பிணையல்
யாமேகண்டதுமிலமேதாமா
மூவாவெஃகமுமுரணு
மோவாதுபயிற்றுமுலகமாலுளதே (௰)

## வெண்டா.

உளரொளியகங்கையொலிதிரைகண்மோத
வளரொளிதேய்ந்துள்வளைந்ததொக்கும்—கிளரொளிய
பேதைக்கருங்கட்பிணுவின்மணாளனார்
கோதைப்பிறையின்கொழுந்து. (௧௧)

## கட்டளைக்கலித்துறை.

கொழுந்திரட்டெண்ணிலவஞ்சிநின்கூரிருள்வார்பளிங்கின்
செழுந்திரட்குன்றகஞ்சென்றடைந்தாலொக்குந்தெய்வநீரொ
தழுந்திரட்கண்டத்தவளப்பொடிச்செக்கர்மேனிநின்றே
ரெழுந்திரட்சோதிப்பிழம்புமென்னுள்ளத்திடங்கொண்டவே. ( )

## அகவல்.

கொண்டற்காரெயிற்றுச்செம்மருப்பிருவின்
புண்படுசிமையத்துப்புல்வுநாறுகுடுமி
வரையோன்மருகபுனலாள்கொழுந
விளையோன்றுதைமுதுகாட்டுப்பொருநநின்

னீ ருடு பொலங்கழல்பரவ
வேறுங்குகவர்க்குமோவிடுதருநெறியே. (கங)

வெண்பா.

நெறிவிரவுகொன்றைநெடும்படர்கீழ்க்கங்கை
யெறிதிரைகளீர்த்தெற்றவேறிப்—பொறிபிதிர
வீற்றராக்கண்படுக்குமிண்டைச்சடைச்சங்க
ணேற்றராற்றீருமிடர். (கச)

கட்டளைக்கலித்துறை.

இடர்தருதீவினைக்கெள்கினைவார்க்குநின்னீரடியின்
புடைதருதாமரைப்போதுகொலாஞ்சரண்போழருவிப்
படர்தருகொம்பைப்பவளவண்ணுபருமாமுறைதயங்
சடைதருசெஞ்சுடர்க்கற்றையொக்குஞ்சடையந்தணனே. (கரு)

அகவல்.

அந்தணர்செந்தொடையொழுக்கமு
மடலோர்பயிற்றுநின்சுடர்மொழியாண்மையு
மவுணர்நன்ருட்டிறைவணங்கிக்
குறுநெடுந்தானைபரப்பித்தறுகண்
மால்விடையடரத்தாணிமிர்ந்துக்க
காய்சினவரவுநாண்பற்றிநீயோர்
நெடுவரைநெளியவாங்கிச்
சுடுகணையெரிகிமிர்த்துத்துரந்தனான்றே. (கசு)

வெண்பா.

ஞான்றபுனமாலைதோளலைப்பநாண்மதிய
நின்றநிலவோடுமிவ்வருவான்—மூன்றியங்கு
மூதூர்வியன்மாடமுன்னெருகாற்றுன்னருந்தீ
மீதூரக்கண்சிவந்தவேந்து. (கஎ)

கட்டளைக்கலித்துறை.

வேந்துக்கமாக்கடற்சூரன்முன்னாள்படவென்றிகொண்ட
சேந்தற்குத்தாதையிவ்வையமளந்ததெய்வத்திகிரி

யேந்தற்குமைத்துனத்தோழரின்றேன்மொழிவள்ளியென்னுங்
கூந்தற்கொடிச்சிதன் மாமன்வெம்மால்விடைக்கொற்றவனே. ()

## அகவல்.

கொற்றத்துபபிலொற்றையீன்ற
சுணங்கையஞ்செல்வத்தணங்குதருமுதுகாட்டுப்
பேயமுதிராயத்துப்பிணவின்கொழுநநின்
றேர்கழல்கவைஇயிலங்கிதழ்த்தாமந்
தவழ்தருபுனறலைப்படுந
ரவலமாக்கடலழுந்தலோவிலரே. (கக)

## வெண்பா.

இலர்கொலாமென்றிளைஞரேசப்பலிக்கென்
றுலகெலாஞ்சென்றுழல்வரேனு—மலர்குலாந்
திங்கட்குறுந்தெரியற்றேவர்க்காட்செய்வதே
யெங்கட்குறுந்தெரியினீண்டு. (உ0)

## கட்டளைக்கலித்துறை.

ஈண்டுமுற்றத்தொற்றைமால்விடையேறியையம்முனைநாள்
வேண்டிமுற்றத்திரிந்தெங்கும்பெருதுவெறுங்கைவந்தார்
பூண்டவொற்றைச்செங்கணாரமுங்கற்றைச்சடைப்புனலு
நீண்டவொற்றைப்பிறைக்கீறுமெப்போதுமென்னெஞ்சதநவே.

## அகவல்.

நெஞ்சிற்கொண்டவஞ்சமோவுடைத்தே
மடவோர்விரும்புநின்விளையாட்டியல்போ
மருள்புரிகொள்கைநின்றெருளாமையோ
யாதாகியதோவெந்தைநீதியென்
றுடைதலைநெடுநிலாவெறியல்
கடைதலென்றருளிகுடியபொருளே. (உஉ)

## வெண்பா.

பொருளாகயானிரந்தாற்புல்லெருக்கின்போது
மருளான்மற்றல்லாதார்வேண்டிற்—றெருளாத
பான்மருமான்மறிக்கைப்பைங்கட்பகடுரியான்
ருன்மருன்பைங்கொன்றைத்தார். (உ௩)

## கட்டளைக்கலித்துறை.

தாரிளங்கொன்றைநல்லேறுகடாவித்தலைமைமிக்க
வேரிளமென்முலைப்பொன்மலையாட்டிக்கெற்றேயிவனோர்
பேரிளங்கொங்கைப்பிணவொடுங்கூடிப்பிறைக்கொழுந்தி
னேரிளந்துண்டஞ்சுமந்தையம்வேண்டியுழிதருமே. (உ௪)

## அகவல்.

உழிதரன்மடிந்துகழுதுகண்படுக்கு
மிடருறுமுதுகாட்டுச்சிரியல்பெரும்
புகர்முகத்துளக்கையுரவோன்றுதை
நெடியோன்பாகநின்சுடர்மொழியாண்மை
பயிற்றுநாவலர்க்
கிடர்தருதீவினைகெடுத்தலோவெளிதே. (உ௫)

## வெண்பா.

எளியவென்றெள்கியிகழாதுநாளு
மளியமாட்செய்தாலுமையோ—தெளிவரிய
வள்கயிலைநீள்பொருப்பவான்றோய்மதிச்சடையாய்
கொள்கையிலையெம்மாற்குறை. (உ௬)

## கட்டளைக்கலித்துறை.

குறையாப்பலியிவைகொள்கவென்கோல்வளையுங்கலையுந்
திறையாக்கொண்டாயினிச்செய்வதென்றெய்வக்கங்கைப்புனலி
பொறையாயொருகடனஞ்சுண்டகண்டாபொடியணிந்த
விறையாவிடுபிணக்காடுசெய்மேனியெம்வேதியனே. (உ௭)

## அகவல்.

வேதியர்பெருமவிண்ணோர்தலைவ
வாதிநான்முகத்தண்டவாண
செக்கர்நான்மறைப்புத்தேனொடு
காய்சினமழவிடைப்பாகநின்
மூவிலைநெடுவேல்பாடுது
நாவலம்பெருமைநல்குவோயெனவே. (உஎ)

## வெண்பா.

எனவேயுலகெலாமென்றிளைஞரேச
நனவேபலிதிரிதிநாளுந்—சினவேங்கைக்
கார்க்கயிலைநாடகளிற்றிருரியலாற்
போர்க்கயிலைபேசணிபொய். (உஅ)

## கட்டளைக்கலித்துறை.

பொய்நீருரைசெய்திர்பொய்யோம்பலியெனப்போனபின்னை
யிந்நீள்கடைக்கென்றுவந்தறியீரினிச்செய்வதென்னே
செந்நீர்வளர்சடைத்திங்கட்பிளவொடுகங்கைவைத்த
முந்நீர்ப்பவளத்திரட்செக்கரொக்குமுதலவனே. (உகூ)

திருச்சிற்றம்பலம்.



உ

திருச்சிற்றம்பலம்.

அதிராவடிகள்

அருளிச்செய்த

# மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை.

## அகவல்.

ஒருவெட்டிங்கங்கையிருங்குறும்பைம்புகர்
முழுமுகச்செந்துதிநாலிணர்வெண்ணிணக்
குடர்ப்புலவுகமழுமடற்கழுப்படையவன்
மதலைமாமதந்துவன்றியகதனுடைக்
கடதடக்கபோலத்தோரிடமருப்பிற்
கரண்டகவுகரத்துமுரண்டருகுழவிதன்
சேவடியுகளமல்ல
தியாவையுமிலமினியிருநிலத்திடையே. (க)

## வெண்பா.

நிலந்துளங்கமேருத்துளங்கநெடுவான்
மலர்துளங்கச்சப்பாணிகொட்டுங்—கலந்துளங்கொள்
காமாரியீன்றகருங்கைக்கடதடத்து
மாமாரியீன்றமணி. (உ)

## கட்டளைக்கலித்துறை.

மணிசிந்துகங்கைதன்மானக்குருளையைவாளரக்க
ரணிசிந்தவென்றவெம்மையர்க்கிளங்கன்றையங்கரும்பின்
றுணிசிந்தவாய்ப்பெய்தபோதகத்தைத்தொடர்ந்தோர்பிறவிப்
பிணிசிந்துகார்முளையைப்பிடித்தோர்க்கில்லைபேதுறவே. (௩)

## அகவல்.

பேதுறுதகையமல்லதுதீதுறச்
செக்கர்க்குஞ்சிக்கருநிறத்தொக்கணுப்பண்

பக்கவணிரும்பொறித்தடக்கையு
முரணியபெருந்தோட்
கொட்டாவிதேவிதன்
மட்டுகுதெரியலடிமணந்தனமே. (௪)

வெண்பா.

மேயவுருமிடற்றர்வெள்ளெயிற்றர்திண்சேனை
யோயமணிபூசலாடின்றே—பாய
மழைசெவிக்காற்றுந்தியவாளமர்க்கணெந்தை
தழைசெவிக்காற்றுந்தத்தளர்ந்து. (௫)

கட்டளைக்கலித்துறை.

உந்தத்தளராவளைத்தனமுன்னமின்னேடைநெற்றிச்
சந்தத்தளராவொருதனித்தெவ்வர்தந்தாளிரியூர்
விந்தத்தளராமருங்கிற்கிளிபெற்றவேழக்கன்றின்
மந்தத்தளராமலர்ச்சரணங்கள்வழுத்துமின்னே. (௬)

அகவல்.

மின்னெடுங்கொண்டலங்கெடுமுழக்கத்
தோவறவிளங்கியதுளைக்கைக்கடவுளை
யாமிகவழுத்துவதெவனோவவனேற்
பிறந்ததிவ்வுலகின்பெருமுதாதை
யுரந்தருசிரமரிந்தவற்கேவரைந்தது
மேருச்சிமையத்துமிமிசை
வாரிச்செல்வன்மகண்மகன்மொழியே. (௭)

வெண்பா.

மொழியின்மறைமுதலேமுன்னயனைத்தேறே
கழியவருபொருளேகண்ணே—தெழிய
கலாலயனேயெங்கள்கணபதியேநின்னை
யலாதையனேசூழாதென்னன்பு. (௮)

## கட்டளைக்கலித்துறை.

அன்புதவச்சுற்றகாரழல்கொண்டெயின்மூன்றெரிய
வன்புதவந்துந்தைமாட்டுநின்றூன்மதஞ்சூழ்மருப்பிற்
கன்புதவக்கரத்தாளமிட்டோடிக்கடுநடையிட்
டின்புதவச்சென்றுநீயன்றுகாத்ததியம்புகவே. (௯)

## அகவல்.

கவவுமணிக்கேடகக்கங்கணக்கவைவளு
வைநகழலவுணரொடுபொருதஞான்றுநீற்
புழைக்கரமுயிர்த்தவழற்பேருதை
விரைநனிசிறிமூரி
யஞ்சேறுபுலர்த்துமென்பர்
மஞ்சேறுகயிலைமலைகிழவோயே. (௧௦)

## வெண்பா.

மலைசூழ்ந்திழிகின்றமாசுணைப்பொற்பாறை
தலைசூழ்ந்துதாளிணைப்பதொக்குங்—கலைசூழ்
திரண்டகங்கொள்பேரறிவன்றிண்வயிற்றினும்பர்க்
கரண்டகங்கொள்காலுயிர்க்குங்கை. (௧௧)

## கட்டளைக்கலித்துறை.

காலதுகையதுகண்ணதுநீயதுகார்மதநீர்
மேலதுகிழதுநூலதுவெற்பதுபொற்பமைநீம்
பாலதுதேனதுதானதுமென்மொழிப்பாவைமுப்பூண்
வேலதுவாளதுநான்மறைக்கின்றவிடுசுடர்க்கே. (௧௨)

## அகவல்.

சுடர்ப்பிழம்புதழைத்தவழற்றனிநெடுவேற்
சேய்மூவுலகம்வலம்வரவேய
கொன்றையம்படலத்துன்றுசடைக்கடந்து
வோங்கிருந்தாதையைவளாய்மாங்கனி

டள்ளற்றீஞ்சுவையருந்திய
வள்ளற்கிங்கென் மனங்கனிந்திடுமே. (கரு)

## வெண்பா.

இக்கயங்கொண்மூவலயஞ்சூழேழ்தடவரைக
டிக்கயங்கள்பேர்ந்தாடச்செங்கிரை—புக்கியங்கு
தேஞுடவண்டாடச்செங்கீரையாடின்றே
வாஞுடன்பெற்றவரை. (கசு)

## கட்டளைக்கலித்துறை.

பெற்றமெல்லோதிசிலம்பின்மகள்பெறப்பிச்சுகந்த
மற்றவள்பிச்சன்மயங்கன்முன்றேன்பின்னிணைமைமிதக்
கற்றவனையன்புறங்காட்டிடைநடமாட்டுகந்தோ
செற்றவெண்டந்தத்தவனம்மையாட்கொண்டுசெய்தனவே. ()

## அகவல்.

செய்தருபொலம்படைமொய்தருபருஉக்
குருளை,வெள்ளெயிறுபொதிந்தவள்ளுகிர்த்திரள்வாய்ப்
பெருந்திரட்புழைக்கை
மண்முழைவழங்குந்தின்முரணேற்றின்
பனையடர்ப்பாகன்றனதிணையடி
நெடும்பொற்சரணமேத்த
விடும்பைப்பௌவமினிநீங்கலமே. (கஎ)

## வெண்பா.

அலங்கன்மணிகனகமுந்தியருவி
விலங்கன்மிசையிழிவதொக்கும்—பலன்கனிக
ளுண்டளைந்தகோன்மகுடத்தொண்கடுக்கைத்தாதளைந்து
வண்டணைந்துசோருமதம். (கஎ)

## கட்டளைக்கலித்துறை.

மதந்தந்தமென்மொழிமாமலையாட்டிமடங்கல்கொன்ற
மதந்தந்தமுக்கண்ணரற்குமுன்னீன்றவம்மாமலைபோன்

மதந்தந்தகும்பக்குழவிமந்தாரப்பொன்றூட்டிருந்து
மதந்தந்தசெம்மலன்றேருவையமுய்யவளர்கின்றதே. (கஅ)

## அகவல்.

வளர்தருகவட்டின்கிளரொளிக்கற்பகப்
பொதும்பர்த்தும்பிபொழிகின்றேச்சும்
பாரிடைக்குறுநடைத்தோடினாங்க
ரிட்டமாங்கனி
முழுவதும்விழுங்கியமுளைப்பனைத்தடக்கை
யெந்தையல்லதுமற்றியாவுள
சிந்தைசெய்யுர்தேவதைநமக்கே. (கசு)

## வெண்பா.

கேளுற்றியான்றளரவொட்டுமேகிம்புரிப்பூண்
வாளுற்றகேயூரவாளரக்கர்—தோளுற்
றறித்தெறிந்துகொன்றழித்தவங்கயங்கண்மீண்டே
யிறுத்தெறிந்துகொன்றழித்தவேறு. (உ௦)

## கட்டளைக்கலித்துறை.

ஏறுதழீஇயவெம்புத்தேண்மருகவெங்குந்தவள
நீறுதழீஇயவெண்டோளவன்செல்வவண்டுண்ணநெக்க
வாறுதழீஇயகரதலத்தையநின்றன்னையல்லால்
வேறுதழீஇத்தொழுமோவணங்காதவியன்சிரமே. (உக)

## அகவல்.

சிரமே, விசும்புபோதவுயரியிரண்டசும்புபொழியும்மே
கரமே, வரைத்திரண்முரணியவிரைத்துவிழும்மே
புயமே, திசைவிளிம்புகிழியச்சென்றுசெறிக்கும்மே
யடியே, யிடுந்தொறுமிவ்வுலகம்பெயரும்மே
யாயினு, மஞ்சுடர்ப்பிழம்புதழீஇ
நெஞ்சகத்தொடுங்குமோநெடும்பணைச்சுரே. (உஉ)

## வெண்பா.

சூர்தந்தபொற்குவட்டின்சூளிகையின்வானயிர்த்து
வார்தர்தெழுமதியமன்னுமே—சீர்தந்த
மாமதலைவான்மதியங்கொம்புவயிறுதித்த
கோமதலைவாண்மதியங்கொம்பு. (௨௩)

(௨௪) (௨௫) (௨௬) (௨௭) (௨௮) (௨௯) (௩௰)

திருச்சிற்றம்பலம்.



உ

திருச்சிற்றம்பலம்.

பட்டணத்துப்பிள்ளையார்

அருளிச்செய்த

# கோயினான்மணிமாலை.



## வெண்பா.

பூமேலயனறியாமோலிப்புறத்ததே
நாமேபுகழ்ந்தளவைநாட்டுவோம்—பாமேவு
மேத்துகந்தான்றில்லையிடத்துகந்தானம்பலத்தே
கூத்துகந்தான்கொற்றக்குடை. (௧)

## கட்டளைக்கலித்துறை.

குடைகொண்டிவ் வையமெலாங்குளிர்வித் தெரிபொற்றிகிரிப், படைகொண் டிகறெறும்பார்த்திவராவதிற் பைம்பொற்கொன்றைத், தொடைகொண்டவார்சடையம்பலத்தான்றொண்டர்க்கேவல்செய்து, கடைகொண்டபிச்சைகொண்டுண்டிங்குவாழ்தல்களிப்புடைத்தே. (௨)

## ஆசிரியவிருத்தம்.

கரிவந்தமுதூறிக்கன்மனத்தையெல்லாங்
கசியும்படிசெய்துகண்டறிவாரில்லா
வெளிவந்தடியேன்மனம்புகுந்ததென்றால்
விரிசடையும்வெண்ணீறுஞ்செவ்வானமென்ன
வொளிவந்தபொன்னிறமுந்தொன்னடமுங்காட்டு
முடையானுயர்தில்லையம்பலமொன்றல்லா
லெளிவந்தினிப்பிறர்பாற்சென்றவர்க்குப்பொய்கொண்
டிடைமிடைந்தபுன்மொழியாலிச்சையுரையோமே. (௬)

## இணைக்குறளாசிரியப்பா.

உரையின்வரையும்பொருளினளவு
மிருவகைப்பட்டவெல்லையுங்கடந்து
தம்மைமறந்துநின்னைநினைப்பவர்
செம்மைமனத்தினுந்தில்லைமன்றினுநட
மாடுமம்பலவாணநீடு
குன்றக்கோமான்றன்றிருப்பாவையை
நீலமேனிமாதிருத்தங்கையைத்
திருமணம்புணர்ந்தனான்றுபெருமநின்
றுதவிழ்கொன்றைத்தாருமேதமில்
வீரவெள்விடைக்கொடியும்போரிற்
றழங்குரந்தமருகப்பறையுமுழங்கொலிக்
தெய்வக்கங்கையாறும்பொய்தீ
விரையாக்கலியெனுமாணையுநிரைநிரை
யாயிரம்வகுத்தமாயிருமருப்பின்
வெண்ணிறச்செங்கண்வேழமும்பண்ணியல்
வைதிகப்புரவியும்வானநாடு
மையறுகனகமேருமால்வரையுஞ்
செய்வயற்றில்லையாகியதொல்பெரும்பதியுமென்
றொருபதினயிரந்திருநெடுநாமமு

முரிமையிற்பாடித்திருமணப்பந்தரு
ளமரர்முன்புகுந்தறுகுசாத்தினின்
றமர்பெயரெழுதியவரிநெடும்புத்தகத்
தென்னையுமெழுதவேண்டுவனின்னரு
ளாணைவைப்பிற்காணொணவனுவும்
வானுறநிமிர்ந்துகாட்டுங்
கானில்வானுளம்புங்கருடனுதலினே. (ச)

## வெண்பா.

ஆதரித்தமாலுமறிந்திலனென்றஃதறிந்தே
காதலித்தநாயேற்குங்காட்டுமே—போதகத்தோற்
கம்பலத்தானீனாகங்கணத்தான்றென்புலியூ
ரம்பலத்தான்செம்பொனடி. (ரு)

## கட்டளைக்கலித்துறை.

அடியொன்றுபாதலமேழிற்குமப்புறம்பட்டதிப்பான்
முடியொன்றிவ்வண்டங்களெல்லாங்கடந்ததுமுற்றும்வெள்ளைப்
பொடியொன்றுதோளெட்டுத்திக்கின்புறத்தனபூங்கரும்பின்
செடியொன்றுதில்லைச்சிற்றம்பலத்தான்றன்திருநடமே. (சு)

## ஆசிரியவிருத்தம்.

நடமாடியேழுலகுமுய்யக்கொண்ட
நாயகரேநான்மறையோர்தங்களோடுந்
திடமாடமதிற்றில்லைக்கோயில்கொண்ட
செல்வரேயுமதருமைதேராவிட்டீ
ரிடமாடியிருந்தவளும்விலக்காவிட்டா
லென்போல்வார்க்குடனிற்கவியல்வதன்று
தடமாலைமுடிசாய்த்துப்பணிந்தவானோர்
தஞ்சுண்டாவங்கருநீர்நஞ்சுண்டீரே. (எ)

## நேரிசையாசிரியப்பா.

நஞ்சுமிழ்பகுவாய்வெஞ்சினமாசுணந்
தன்முதன்முருக்கநென்முதற்சூழ்ந்த
நீர்ச்சிறுபாம்புதன்வாய்க்கெதிர்வந்த
தேரையைவவ்வியாங்கியான்முன்
கருவிடைவந்தவொருநாட்டொடங்கி
மறவாமறலிமுறைபிறழ்பேழ்வா
யயிற்றலையன்னவெற்றிடைக்கிடந்தாங்
கருணனியின்றியொருவயிறேம்பற்குப்
பல்லுயிர்செகுத்துவல்லிதினருந்தி
யயர்த்தனனிருந்தும்போலும்பெயர்த்துநின்
றெண்டோள்வீசிக்கண்டோருருகத்
தொல்லெயிலுடுத்ததில்லைமூதூ
ராடுமம்பலக்கூத்தனைப்
பாடுதல்பரவுதல்பணிதலோவிலமே. (அ)

## வெண்பா.

இலவிதழ்வாய்வீழ்வாரிசழ்வாரவர்தங்
கலவிகடைக்கணித்துங்காணே—னிலகுமொளி
யாடகஞ்சேரம்பலத்தேயாளுடையார்நின்றாடு
நாடகங்கண்டன்பானநான். (௯)

## கட்டளைக்கலித்துறை.

நானேபிறந்துபயன்படைத்தேனயனாரணனெங்
கோனேயெனத்தில்லையம்பலத்தேநின்றுகூத்துகந்த
தேனேதிருவுள்ளமாகியென்றீமையெல்லாமறுத்துத்
தானேபுகுந்தடியேன்மனத்தேவந்துசந்திக்கவே. (௧0)

## ஆசிரியவிருத்தம்.

சந்துபுனையவெதும்பிமலரணை
தங்கவெருவியிலங்குகலையொடு

சங்குசுழலநிறைந்தவயலவர்
தஞ்சொனலிடமெலிந்துகிளியொடு
பந்துகழல்கண்மறந்துதளிர்புரை
பண்டைநிறமுமிழந்துநிறைபொடு
பண்புதவிரவனங்கனவனொடு
நண்புபெருகவிளைந்தவினையன
நந்திமுழவுதழங்கமலைபெறு
நங்கைமகிழவணிந்தவரவுக
ணஞ்சுபிழியமுரன்றுமுயலக
னைந்துநரலவலைந்தபகிரதி
யந்திமதியொடணிந்துதிலைநக
ரம்பொனணியுமரங்கினடநவி
லங்கணரசையடைந்துதொழுநிவ
ளன்றுமுதலெதிரின்றுவரையுமே. (கக)

## நிலைமண்டலவாசிரியப்பா.

வரையொன்றுநிறுவிபரவொன்றுபிணித்துக்
கடறடைவாகமிடலொடும்வாங்கித்
திண்டோளாண்டதண்டாவமரர்க்
கமிர்துணவளித்தமுதுபெருங்கடவுள்
கடையுகஞ்சென்றகாலத்துநெடுநில
மாழிப்பரப்பிலாழ்வதுபொருஅ
தஞ்சேலென்றுசெஞ்சேலாகித்தன்
றெய்வவுதரத்துச்சிறுசெலுப்புரையிற்
பௌவமேழேபட்டதுபௌவத்தோ
டுலகுகுழைத்தொருநாளுண்டது
முலகமூன்றுமளந்துழியாங்கவ
னீரடிநிரம்பிற்றுமிலவேதேரி
லுரைப்போர்க்கல்லதவன்குறைவின்றே
யினையனாகியதனிமுதல்வானவன்

சேழற்றிருவுருவாகியாழத்
தடுக்கியவேழுமெடுத்தனனெடுத்தெடுத்
தூழியூழிகிழுறக்கிளைந்துங்
காண்பதற்கரியநின்கழலும்வேண்டுபு
நிகிலலோகமுநெடுமறைத்தொகுதியு
மகிலசராசரமனைத்துமுதவிய
பொன்னிறக்கடவுளன்னமாகிக்
காண்டலாதநின்கதிர்நெடுமுடியு
மீங்கிவைகொண்டுநீங்காதுவிரும்பிச்
சிறியபொதுவின்மறுவின்றிவிளங்கி
யேவருங்காணவாடுதியதுவெனக்
கதிசயம்விளைக்குமன்றேயதிசயம்
விளையாதுமொழிந்ததெந்தைவளையாது
கல்லினும்வலிதாநல்லிதிற்செல்லாது
தான்சிறிதாயினுமுள்ளிடைநிரம்ப
வான்பொய்ச்சமாயாவாசை
மிடைந்தனகிடப்பவிடம்பெறலருமையி
லைவர்கள்வர்வல்லிதிற்புகுந்து
மண்மகன்றிகிரியிலெண்மடங்குசுழற்ற
வாடுபுகிடந்தபேடினெஞ்சத்து
நுழைந்தனைபுகுந்துதழைந்தநின்சடையுஞ்
செய்யவாயுமையமர்கண்டமு
நெற்றியிற்றிகழ்ந்தவொற்றைநாட்டமு
மெடுத்தபாதமுந்தடுத்தசெங்கையும்
புள்ளியாடையுமொள்ளிதின்விளங்க
நாடகமாடுதிநம்பகூடும்
வேதநான்கும்விழுப்பெருமுனிவரு
மாதிநின்றிறமாதலின்மொழிவது
பெரியதிற்பெரியையென்றுமன்றே
சிறியதிற்சிறியையென்றுமன்றே

நிறைபொருண்மறைகளுன் குநின்னறைகழ
லிரண்டொடுமறிவினிலார்த்துவைத்த
மறையவர்தில்லைமன் றுகிழவோனே. (௪௨)

## வெண்பா.

கிழவருமாய்நோய்மூப்புக்கீழ்ப்பட்டுச்காமத்
துழவரும்போயோயுமாகண்டோ—மொழிதெரிய
வாயிறுலிப்போதேமன்றினடமாடு
நாயறுரென்றுரைப்போநாம். (௪௩)

## கட்டளைக்கலித்துறை.

நாமத்திறுவென்றறுத்திருத்தேனறைமாமலர்சேர்
தாமத்திறுலுன்சரண்பணியேன்சார்வதென்கொடுநான்
வாமத்திலேயொருமானைத்தரித்தொருமானைவைத்தா
சேமத்திறுலுன்றிருத்தில்லைசேர்வதோர்செந்நெறியே. (௪௪)

## ஆசிரியவிருத்தம்.

நெறிதருகுழலையறலென்பர்க
ணிழலெழுமதியநுதலென்பர்க
ணிலவினும்வெளிதுநகையென்பர்க
ணிறம்வருகலசமுலையென்பர்க
ளறிருவதரிதிவிடையென்பர்க
ளடியிணைகமலமலரென்பர்க
ளவயவமிளையமடமங்கைய
ரழகியரமையுமவரென்செய
மறிமழுவுடையகரனென்கிலர்
மறலிமடியமுனியுமரனென்கிலர்
மதிபொதிசடிலதரனென்கிலர்
மலைமகண்மருவுபுயனென்கிலர்
செறிபொழினிலவுதில்லையென்கிலர்
திருநடநவிலுமிறையென்கிலர்

சிவகதியருளுமரசென்கிலர்
சிலர்நரகுறுவரறிவின்றியே. (கரு)

## நேரிசையாசிரியப்பா.

அறிவிலொழுக்கமும்பிறிதுபடுபொய்யுங்
கடும்பிணித்தொகையுமிடும்பையீட்டமு
மினையனபலசரக்கேற்றிவினையெனுந்
தொன்மீகாமனுய்ப்பவந்நிலைக்
கருவெனுநெடுநகரொருதுறைநீத்தத்துப்
புலனெனுங்கோண்மீனலமந்துதொடரப்
பிறப்பெனும்பெருங்கடலுறப்புகுந்தலைக்குந்
துயர்த்திரையுவட்டிற்பெயர்ப்பிடமயர்த்துக்
குடும்பமென்னுநெடுங்கல்வீழ்த்து
நிறையெனுங்கூம்புமுரிந்துகுறையா
வுணர்வெனுநெடும்பாய்கீறிப்புணரு
மாயப்பெயர்ப்படுகாயச்சிறைக்கலங்
கலங்குபுகவிழாமுன்னமலங்கன்
மதியுடனணிந்தபொதியவிழ்சடிலத்துப்
பையரவணிந்ததெய்வநாயக
தொல்லெயிலுடுத்ததில்லைகாவல
வம்பலர்தும்பையம்பலவாணநின்
னருளெனுநலத்தார்பூட்டித்
திருவடிநெடுங்கரைசேர்த்துமாசெய்யே. (கசு)

## வெண்பா.

செய்யதிருமேனிச்சிற்றம்பலவருக்கென்
னையல்வளைகொடுத்தல்சாலுமே—யையன்றேர்
சேயேவருமளவிற்சிந்தாதமாத்திரமே
தாயேநமதுகையிற்சங்கு. (கஎ)

## கட்டளைக்கலித்துறை.

சங்கிடத்தானிடத்தான்றனதாகச்சமைந்தொருத்தி
யங்கிடத்தாடில்லையம்பலக்கூத்தற்கவிர்சடைமேற்
கொங்கிடத்தார்மலர்க்கொன்றையென்றுயெங்கைநீயுமொரு
பங்கிடத்தான்வல்லையேலில்லையேலுன்பசப்பொழியே. (கஅ)

## ஆசிரியவிருத்தம்.

ஒழிந்ததெங்களுறவென்கொலோவெரியி
லொன்னலார்கள்புரமுன்னொர்நாள்
விழுந்தெரிந்துறுகளாகவென்றிசெய்த
வில்லிதில்லைநகர்போலியார்
ழிந்தவர்திபிலழுந்திமேகலை
தொடக்கநின்றவர்நடக்கநொந்
தழிந்தசிந்தையினும்வந்ததாகிலுமொர்
சிந்தையாயொழிவதல்லவே. (கக)

## நேரிசையாசிரியப்பா.

அல்லல்வாழ்க்கைவல்லிதிற்செலுத்தற்குக்
கைத்தேருழர்துகார்வருமென்று
வித்துவிதைத்தும்விண்பார்த்திருந்துங்
கிளையுடன்றவிரப்பொருளுடன்கொண்டு
முளைமுதிர்பருவத்துப்பதியெனவழங்கியு
மருளாவயவரம்பிடைநடந்து
மிருளுறுபவ்வத்தெந்திரங்கடாஅய்த்
துன்றுதிரைப்பரப்பிற்குன்றுபார்த்தியங்கியு
மாற்றல்வேந்தற்குச்சோற்றுக்கடன்பூண்டுந்
தாளுழந்தோடியும்வாளுழந்துண்டு
மறியாவொருவனைச்செறிவந்துதெருட்டியுஞ்
சொற்பலபுனைந்துங்கற்றனகழறியுங்
குடும்பப்பாசநெடுந்தொடர்ப்பூட்டி
யைவரைந்திடத்திர்ப்பநொய்திற்

பிறந்தாங்கிறந்துமிறந்தாங்குபிறந்துங்
கணத்திடைத்தோன்றிக்கணத்திடைக்கரக்குங்
கொப்புட்செய்கையொப்பின்மின்போ
லுலப்பில்யோனிக்கலக்கத்துமயங்கியு
நெய்யெரிவளர்த்துப்பெய்முகிற்பெயறருந்
தெய்வவேதியர்தில்லைமூதா
ராடகப்பொதுவினாடகநவிற்றுங்
கடவுட்கண்ணுதனடமுயன்றெடுத்த
பாதப்போதும்பாய் புலிப்பட்டு
மீதியாத்தசைத்தவெள்ளெயிற்றரவுஞ்
சேயுயரகலத்தாயிரங்குடுமி
மணிகிடந்திமைக்குமொருபேராரமு
மருள்பொதிந்தலர்ந்ததிருவாய்மலரு
நெற்றியிற்றிகழ்ந்தவொற்றைநாட்டமுங
கங்கைவழங்குந்திங்கள்வேணியுங்
கண்ணிடைப்பொறித்துமனத்திடையழுத்தியாங்
குண்மகிழ்ந்துரைக்கவுறுதவஞ்செய்தன
ன்முகன்பதத்தின்மேனிகழ்பதத்தா
னுறுதற்கரியதுமுண்டோ
பெறுதற்கரியதோர்பேறுபெற்றேற்கே (உ०)

## வெண்பா.

பெற்றோர்பிடிக்கப்பிழைத்துச்செவிலியர்கள்
சுற்றோடவோடித்தொழாநிற்கு—மொற்றைக்கை
மாமறுகச்சீறியசிற்றம்பலத்தான்மான்றேர்போங்
கோமறுகிற்பேதைக்குழாம். (உக)

## கட்டளைக்கலித்துறை.

பேதையெங்கேயினித்தேறியுய்வாள்பிரமன்றனக்குத்
தாதைதன்றாதையென்றேத்தும்பிரான்றண்புலிசைப்பிரான்

கோதையந்தாமத்தண்கொன்றைகொடானின்று கொல்லவெண
பூதையுங்காருந்துளியொடுங்கூடியுலாவியவே. [ணி

## ஆசிரியவிருத்தம்.

உலவுசலதிவாழ்விடமமரர்தொழவுணவென
நுகருமொருவருழியினுறுதியொருவராழிட
புலவுகமழ்கரோடிகையுடையபுனிதர்பூசுரர்
புலிசையமர்செய்போதணிபொழிலினிழலின்வாழ்வரே
கலவமயிலனார்சுருள்கரியகுழலினார்குயில்
கருதுமொழியினார்கடைநெடியவிழியினாரித
ழிலவிலெழுகிடாரிடைகொடியின்வடிவினார்வடி
வெழுதுமருமையாரெனநிதயமுழுதுமாள்வரே. (௨௯)

## இணைக்குறளாசிரியப்பா.

ஆளெனப்புதிதின்வந்தடைந்திலமத்தநின்
றாளிணைவழலையினியற்றி
வழிவழிவந்தமரபினமொழிவது
னைந்தெழுத்தவையெஞ்சிந்தையிற்கிடத்தி
நனவேபோலநாடொறும்பழகிக்
கனவினுநவிற்றுங்காதலேம்வினைகெடக்
கேட்பதுநின்பெருங்கீர்த்திமீட்பது
நின்னெறியல்லாப்புன்னெறிபடர்ந்த
மதியினெஞ்சத்தைவரைந்தநிதியென
வருந்திசெய்திடுவதுருத்திரசாதனங்
காலையுமாலையுங்கால்பெயர்த்திடுவதுன்
றலையம்வலம்வருதற்கேசால்பினிற்
கைகொடுசெயிற்றுவதையநின்னது
கோயிற்பல்பணிகுறித்தேயோயா
தருகிநின்னினைந்தருவிசோரக்
கண்ணிற்காண்பதெவ்வுலகினுங்காண்பனவெல்லா
நீயேயாகிநின்றதோர்நிலையேநாயேன்

நிலைகொடுசோர்வதுன்சரண்வழியல்லா
மலைகடப்பிறழினுமடாதேயநூற்
பொய்க்கவவேடர்கைத்தகப்படுத்தற்கு
வஞ்சச்சொல்லின்வார்வலைபோக்கிச்
சமயப்படுகுழிசமைத்தாங்கமையவின்
மாறுபடாக்களைவலியப்புகுந்து
மாறுவிரதத்தகப்படுத்தாழ்த்து
விளையணர்வெனக்குவருமோவுளர்நரு
ஞ்சரையுந்திரையுமொப்புறுகொட்பும்
வரம்பில்சாரவாரிபுஞ்சரைகடற்
மிடைந்துமுற்சிறுத்தும்பிறங்குவதோன்றி
யெண்ணிலவாகியிருங்கடலடங்குந்
தன்மைபோலச்சராசரமனைத்து
நின்னிடைத்தோன்றிநின்னிடையடங்குநீ
யொன்றினுந்தோன்றாயொன்றினுமடங்காய்
யாரேர்க்கரியாயமறைகளுக்கெட்டாய
நானமுடையாளர்நடுவுபுக்கடங்கிச்
செம்பொற்றில்லைமூதூ
ரம்பலத்தாடுநம்பர்நாயகனே. (உச)

## வெண்பா.

நாயனையவென்னைப்பொருட்படுத்திநன்களித்துத்
தாயனையனாயருளுந்தம்பிரான்—றூயவிரை
மென்றுழாயமாலொடயன்றேடவரியன்றில்லை
மன்றுளாடுமணி. (உரு)

## கட்டளைக்கலித்துறை.

மணிவாய்முகிழ்ப்பத்திருமுகம்வேர்ப்பவம்மன்றுக்கெல்லா
மணியாயருணடமாடும்பிரானையடைந்துருகிப்
பணியாதபுலன்வழிபோநெஞ்சமேயினிப்பையப்பையப்
பிணியாட்கடைவழிசாதியெல்லோரும்பிணமென்னவே. (உசா)

## ஆசிரியவிருத்தம்.

என்றுமின்மடவரலாய்செய்குவ
தினமாய்வண்டுகண்மலர்கிண்டித்
தென்றுவெனமுரல்பொழில்சூழ்தில்லையு
ளரனூர்திருமுடியணிதாமந்
தன்றலைல்லதுதிராதென்னிடர்
தகையாதுயிர்கருமுகிலேறி
மின்றுநின்றதுதுளிவாடையும்வர
வீசாநின்றதுபேசாயே. (உள)

## இணைக்குறளாசிரியப்பா.

பேசுவாழிபேசுவாழி
யாசையொடுமயங்கிமாசுறுமனமே
பேசுவாழிபேசுவாழி
கண்டனமறைபுமுண்டனமலமாம்
பூசினமாசாம்புணர்ந்தனபிரியு
நிறைந்தனகுறையுமுயர்ந்தனபணியும்
பிறந்தனவிறக்கும்பெரியனசிறுக்கு
மொன்றென்றொருவழிநில்லாவன்றியுஞ்
செல்வமொடுபிறந்தோர்தேசொடுதிகழ்ந்தோர்
கல்வியிற்சிறந்தோர்கடுந்திறன்மிகுந்தோர்
கொடையிற்பொலிந்தோர்படையிற்பயின்றோர்
குலத்திலுயர்ந்தோர்நலத்தினின்வந்தோ
ரெனையரெங்குலத்தினரிறந்தோரனையவர்
பேருநின்றிலபோலுந்தேரி
னீயுமஃதறிதியன்றேமாயப்
பேய்த்தேர்போன்றுநீப்பருமுறக்கத்துக்
கனவேபோன்றுநனவுபெயர்பெற்ற
மாயவாழ்க்கையைமதித்துக்காயத்தைக்
கல்லினும்வலிதாக்கருதிப்பொல்லாத்

னமையரிழிவுசார்ந்தனை நீயு
னமையிறநிரிந்தபுன்மையையாதலி
னூழ்க்குடைப்புலன்வழியிழுக்கத்தினொழுகி
வ வாய்த்தூண்டிலினுள்ளிரைவிழுங்கும்
டன்மீனபோலவு
மினலுபுவிளக்கத்துவிட்டில்போலவு
மாசைபரம்பரிசத்தியானைபோலவு
மோசையின்விளிந்தபுள்ளுப்போலவும்
சியபட்டணத்தின்வண்டுபோலவு
முறுவதுணராச்செறுவழிச்சேர்ந்தனை
ண்ணூலூற்றுத்தன்னகப்படுக்கு
மறிவிலகிடத்துநந்துழிபோல
வாசைச்சங்கிலிப்பாசத்தொடர்பபட்
டிடர்கெழுமனத்தினோடியற்றுவதறியாது
குடர்கெழுசிறையறைக்குறங்குபுடைத்தி
சறைவநினைர்தகன்றெனவிரங்கி
மறவாமனத்துமாசறுமடியார்க்
கருள்சுரந்தளிக்குமற்புதக்கூத்தனை
மறைபவர்தில்லைமன்றுளாடு
மிறையவனென்கிலையென்னினைாதனையே. (௨௫)

## வெண்பா.

நினையார்மெலியார்நிறையழியார்வாளாப்
புனைவார்க்குக்கொன்றைபொதுவோ—வினையொரு
மெச்சியேகாணவியன்றில்லையானருளென
பிச்சியேநானைப்பெறும். (௨௬)

## கட்டளைக்கலித்துறை.

பெறுகின்றவெண்ணிலிதாயரும்பேறுறும்யாறுமென்னை
யுறுகின்றதுன்பங்களாயிரகோடியுமோயவொடுஞ்சென்

நிறுகின்றநாள்களுமாகிக்கிடந்தவிடுக்கணெல்லா
மறுகின்றனதில்லையாளுடையான்செம்பொனம்பலத்தே. (௩௦)

## ஆசிரியவிருத்தம்.

அம்பலவரங்கணரடைந்தவர்தமக்கே
யன்புடையரென்றுமிதெனுனையயுரிக்துக்
கம்பலமுவந்தருளுவீர்மதனன்வேவக்
கண்டருளுவீர்பெரியகாதலறியாதே
வம்பலர்நிறைந்துவசைபேசவொருமாடே
வாடையுயிரீரமணிமாமையுமிழந்தென்
கொம்பலமரூர்தளைகைகண்டுதகவின்றிக்
கொன்றையருளீர்கொடியிரென்றருளுவீரே. (௩௧)

## இணைக்குறளாசிரியப்பா.

உருளுவாழியருளுவாழி
புரிசடைக்கடவுளருளுவாழி
தோன்றழித்தோன்றிநிலைதவச்சுழங்கும்
புற்புதச்செவ்வியின்மக்களியாக்கைக்கு
நினைப்பினுங்கடிதேயிளமைநீக்க
மதனினுங்கடிதேமூப்பின்ருெடர்ச்சி
யதனினுங்கடிதேகதுமெனமரணம்
வாறுள்பருகியுடம்பைவறிதாக்கி
நாறுள்பயின்றநல்காக்கூற்ற
மினையதன்மையதிதுவேயிதனை
யெனதெனக்கருதியிதற்கென்றுதொடங்கிச்
செய்தனசிலவேசெய்வனசிலவே
செய்யாநிற்பனசிலவேயவற்றிடை
நன்றென்பசிலவேதீதென்பசிலவே
யொன்றினும்படாதனசிலவேயென்றிவை
கணத்திடைநினைந்துகளிப்பவுங்கலுழ்பவுங்

கணக்கில்கோடித்தொகுதியவைதா
மொன்றென்றுணர்வுழிவருமோவனைத்து
மொன்றாவுணர்வுழிவருமோவென்றென்று
தெளிவுழித்தேறல்செல்லேமளிய
மனத்தின்செய்கைமற்றிதுவேநீயே
யரியைசாலவெம்பெருமதெரிவுறி
னுண்டாய்த்தோன்றுவயாவையுநீயே
கண்டனையவைநினைக்காலைவருதா
னின்வயின்மறைத்தோயல்லையுன்னை
மாயாய்மன்னினைநீயேவாழி
மன்னியுஞ்சிறுமையிற்கரந்தோயல்லை
பெருமையிற்பெரியோய்பெயர்த்துநீயே
பெருகியுஞ்சேணிடைநின்றோயல்லை
சேர்வோர்க்குத்தம்மினுமணியைநீயே
நண்ணியுமிடையொன்றின்மறைந்தோயல்லை
யிடையிட்டுநின்னைமறைப்பதுமில்லை
மறைப்பினுமதுவு
நீயேயாகிநின்றதொர்நிலையேயஃதான்று
நினைப்பருங்காட்சிநின்னிலையிதுவே
நினைப்புறுங்காட்சியெந்நிலையதுவே
யினிநனியிரப்பதொன்றுடையமனமருண்டு
புன்மையினினைத்துப்புலன்வழிபடரினு
நின்வயினினைந்தேமாகுதனின்வயி
னினைக்குமாநினைக்கப்பெறுதலனைத்தொன்று
நீயேயருளல்வேண்டும்வேய்முதிர்
கயிலைபுல்லெனவெறிவிசும்புவறிதாக
விம்பருய்யவம்பலம்பொலியத்
திருவளர்தில்லைமூதூ
ரருநடங்குயிற்றுமாதிவானவனே. (௩௨.)

## வெண்பா.

வானோர்பணியமணியாசனத்திருக்கு
மானதசெல்வத்தரசன்றே—மானுகம்
பந்திப்பார்நின்றுடும்பைம்பொன்னினம்பலத்தே
வந்திப்பார்வேண்டாதவாழ்வு. (௩௩)

## கட்டளைக்கலித்துறை.

வாழ்வாகவுந்தங்கள்வைப்பாகவுமறையோர்வணங்க
வாள்வாய்திருத்தில்லையம்பலத்தாயுன்னையன்றியொன்றைத்
தாழ்வாரறியாச்சடிலநஞ்சுண்டிலையாகிலன்றே
மாள்வார்சிலரையன்றேதெய்வமாகவணங்குவதே. (௩௪)

## ஆசிரியவிருத்தம்.

வணங்குமிடையீர்வறிதுவல்லியிடையாண்மேன்
மாரசரமாரிபொழியப்பெறுமனத்தோ
டுணங்கியிவடானுமெலியப்பெறுமிடர்க்கே
யுதையெரிதூவியுலவப்பெறுமடுத்தே
பிணங்கியரவோடுசடையாடநடமாடும்
பித்தரெனவும்மிதயமித்தனையுமோரீ
ரணங்குவெறியாடுமறியாடுமதுவிரு
மையலையுமல்லலையுமல்லதறியீரே. (௩௫)

## நேரிசையாசிரியப்பா.

ஈரவேரித்தார்வழங்குசடிலத்துக்
குதிகொள்கங்கைமதியின்மீதசைய
வண்டியங்குவரைப்பினெண்டோட்செல்வ
வொருபாற்றோடுமொருபாற்குழையு
மிருபாற்பட்டமேனியெந்தை
யொல்லொலிப்பழனத்தில்லைமூதூ
ராடகப்பொதுவினாடகநவிற்று
மிமையாநாட்டத்தொருபெருங்கடவுள்

வானவர்வணங்குந்தாதையானே
மதுமழைபொழியும்புதுமந்தாரத்துத்
தேனியங்கொருசிறைக்கானகத்தியற்றிய
தெய்வமண்டபத்தைவகையமளிச்
சிங்கஞ்சுமப்பவேறிமங்கைய
ரிமையாநாட்டத்தமையாநோக்கந்
தம்மார்புபருகச்செம்மாந்திருக்கு
மாறுச்செல்வத்துவானோரின்ப
மதுவேயெய்தினுமெய்துகவதுமெனத்
தெறுசொலாளருறுசினந்திருகி
யெற்றியுமீர்த்துங்குற்றங்கொளீஇ
யீர்ந்தும்போழ்ந்துமெற்றுபுகுடைந்தும்
வார்ந்துங்குறைத்துமதநாய்க்கீந்துஞ்
செக்குரற்பெய்துந்தீநீர்வாக்கியும்
புழுக்குடையழுவத்தழுக்கியல்சேற்றுப்
பன்னெடுங்காலமழுத்தியின்று
வரையிறண்டத்துமாறாக்கடுந்துயர்
நிரயஞ்சேரினுஞ்சேர்கவுரையிடை
யேனோரென்னையாறுதுவிரும்பி
நல்லனெனினுமென்கவவரே
யல்லனெனினுமென்கநில்லா
திருவொடுதிளைத்துப்பெருவளஞ்சிறையா
தின்பத்தழுந்தினுமழுந்துகவல்லாத்
துன்பந்துறையினுந்துதைகமுன்பி
னிளமையொடுபழகிக்கழிமூப்புக்குறுகா
தென்றுமிருக்கினுமிருக்கவன்றி
யின்றேயிறக்கினுமிறக்கவொன்றினும்
வேண்டலுமிலனேவெறுத்தலுமிலனே
யாண்டகைக்குரிசினின்னடியரொடுங்குழீஇத்
தெய்வக்கூத்துநின்செய்யபாதமு

மடையவுமனுகவும்பெற்ற
கிடையாச்செல்வங்கிடைத்தலானே. (௯௬)

வெண்பா.

ஆனேறேபோந்தாழிவுண்டேயன்புடைய
நானேதான்வாழ்ந்திடினுநன்றன்றே—வானோர்கு
வாமாண்பொழிற்றில்லைமன்றைப்பொலிவித்த
கோமானையித்தெருவேகொண்டு. (௯௭)

கட்டளைக்கலித்துறை.

கொண்டல்வண்ணத்தவனான்முகனிந்திரன்கோமுடந்
தண்டார்மிண்டித்தொழுமம்பலக்கூத்தனுக்கன்புசெய்யா
மிண்டர்மிண்டித்திரிவாரெனக்கென்னினிநானவன்றன்
றொண்டர்தொண்டர்க்குத் தொழும்பாயத்திரியத்தொடங்கினேன்.

ஆசிரியவிருத்தம்.

தொடரரைத்தங்கமுன்புளவாயின
தொழில்கண்மருத்தொன்றுமொன்றியிடாதொரு
சுளியுதலைக்கொண்டுபுன்புலைவாரிக
டுளையொழுகக்கண்டுசிந்தனையோயவொடு
நடைகெடமுற்கொண்டபெண்டிர்பொருவொரு
நடலைநமக்கென்றுவந்தனபேசிட
நலியிருமற்கஞ்சியுண்டிவெருவிழு
நரகவுடற்கன்புகொண்டலைவேனிவி
திடலொடியப்பண்டிலங்கையர்கோனொரு
விரலினமுக்குண்டுபண்பலபாடிய
விரகுசெவிக்கொண்டுமுன்புளதாகிய
வெருளிதவிர்த்தன்றுபொன்றியிடாவகை
திடமருள்வைக்குஞ்செழுஞ்சுடரூறிய
தெளியமுதத்தின்சொழுஞ்சுவைநீடிய
தில்லைநகரிற்செம்பொனம்பலமேவிய
சிவனைநினைக்குந்தவஞ்செதுராவதே. (௯௮)

## நேரிசையாசிரியப்பா.

சதுர்முகன் றந்தைக்குக்கதிர்விடுகடவு
ளாழிகொடுத்தபேரருள்போற்றி
முயற்சியொடுபணிந்தவியக்கர்கோனுக்கு
மாநிதியிரண்டுமாளுப்பெருவளத்
தளகையொன்றுதளர்வின்றிநிறுவிய
செல்வங்கொடுத்தசெல்வம்போற்றி
தாணிழலடைந்தமாணிக்காக
நான்முறையிறழாதகோன்முறைவலித்துப்
பதைத்துவருங்கூற்றைப்படிமிசைத்தெறிக்க
வுதைத்துயிரளித்தவுதவிபோற்றி
குலகுலகுலந்தநிலையாத்தேவர்
படுபேரவலமிடையின்றிவிலக்கிக்
கடல்விடமருந்தினகருணைபோற்றி
தவிராச்சீற்றத்தவுணர்மூவெயி
லொல்லனல்கொளுவியொருநொடிபொடிபட்ட
வில்லொன்றுவளைத்தவீரம்போற்றி
பூமென்கரும்பொடுபொடிபடநிலத்துக்
காமனைப்பார்த்தகண்ணுதல்போற்றி
தெய்வயானைகைமுயன்றுகிழித்தெனக்
கரியொன்றுரித்தபெருவிறல்போற்றி
பண்டுபெரும்போர்ப்பார்த்தனுக்காகக்
கொண்டுநடந்தகோலம்போற்றி
விரற்பதமொன்றில்வெள்ளிமலையெடுத்த
வரக்கனைநெரித்தவாண்மைபோற்றி
விலங்கல்விண்டுவிழுந்தெனமுன்னாட்
சலந்தரற்றடிந்ததண்டம்போற்றி
தாதையையெறிந்தவேதியச்சிறுவற்குப்
பரிகலங்கொடுத்ததிருவுளம்போற்றி

நின்முதல்வழிபடத்தன்மகற்றடிந்த
தொண்டர்மனையிலுண்டல்போற்றி
வெண்ணெயுண்ணவெண்ணூஉபுவந்து
நந்தாவிளக்கைநுந்துபுபெயர்த்த
தாவுபுல்லெலிக்குமூவுலகாள
நொய்தினிலளித்தகைவளம்போற்றி
பொங்குளையழல்வாய்ப்புகைவிழியொருதனிச்
சிங்கங்கொன்றசேவகம்போற்றி
வரிமிடற்றெழும்வலிமணியுகுபகுவா
யரகம்பூண்டவொப்பனைபோற்றி
கங்கையுங்கடுக்கையுங்கலர்துழியொருபாற்
றிங்கள்சூடியசெஞ்சடைபோற்றி
கடவுளிருவரடியுமுடியுங்
காண்டல்வேண்டக்கனற்பிழம்பாகி
நீண்டுநின்றநீளம்போற்றி
பாலம்பில்குநின்கூலம்போற்றி
கூறுதற்கரியநின்னீறுபோற்றி
வேகவெற்பன்மகிழ்மகட்கிடப
பாகங்கொடுத்தபண்புபோற்றி
தில்லைமாநகர்போற்றிதில்லையுட்
செம்பொனம்பலம்போற்றியம்பலத்
தாடுநாடகம்போற்றியென்றுங்
கென்றும்போற்றினுமென்றனக்கிறைவ
வாற்றலில்லையாயினும்
போற்றிபோற்றிநின்பொலம்பூவடிக்கே. (௪0)

திருச்சிற்றம்பலம்.



உ

திருச்சிற்றம்பலம்.

பட்டணத்துப்பிள்ளையார்

அருளிச்செய்த

# திருக்கழுமலமும்மணிக்கோவை.



## இணைக்குறளாசிரியப்பா.

திருவளர்பவளப்பெருவரைமணந்த
மரகதவல்லிபோலவொருகூ
றிமையச்செல்விபிரியாதுவிளங்கச்
பாயதிரைப்பரவைமீமிசைமுகிழ்த்த
வலைகதிர்ப்பரிதியாயிரந்தொகுத்த
வரன்முறைதிரியாதுமலர்மிசையிருந்தெனச்
சதிவிடுநின்முகங்காண்டொறுங்காண்டொறு
முதிராவிளமுலைமுற்றாக்கொழுந்தின்
திருமுகத்தாமரைசெவ்வியின்மலரநின
றையல்வாணுதற்றெய்வச்சிறுபிறை
யிளநிலாங்காண்டொறுமொளியொடும்புணர்ந்துநின்
செவ்வாய்க்குமுதஞ்செவ்விசெய்யநின
செங்கைக்கமலமங்கைவனமுலை
யமிர்தகலசமமைவின்றேந்த
மலைமகடனது நயனக்குவளைநின்
பொலிவினொடுமலரமறையோர்
கழுமலநெறிநின்றுபொலிய
நாகர்நாடுமீமிசைமிதந்து
மீமிசையுலகங்கீழ்முதற்றாழ்ந்திங்
கொன்றுவந்தகுன்றுவெள்ளத்
துலகமூன்றுக்குங்களைகணாகி
முதலில்காலமினிதுவீற்றிருந்துழித்

தாதையொடுவந்தவேதியச்சிறுவன்
றளர்நடைப்பருவத்துவளர்பசிவருத்த
வன்னையோவென்றழைப்பமுன்னின்று
ஞானபோனகத்தருளட்டிக்குழைத்த
வானாத்திரளையவன்வயினருள
வந்தணன்முனிந்துதந்தாரியாரென
வவனைக்காட்டுவனப்பவாறோர்
தோடுடையசெவியனென்றும்
பீடுடையபெம்மானென்றுங்
கையிற்சுட்டிக்காட்ட
வையநீவெளிப்பட்டருளினையாங்கே. (க)

வெண்பா.

அருளின்கடலடியேனன்பென்றுமாறு
பொருளின்றிரள்புகலிநாத—னிருள்புகுதுங்
கண்டத்தானென்பாரைக்காதலித்துக்கைதொழுவா
ரண்டத்தார்நாமாரதற்கு. (உ)

கட்டளைக்கலித்துறை.

ஆரணநான்கிற்குமப்பாலவனறியத்துணிந்த
நாரணனான்முகனுக்கரியானடுவாய்நிறைந்த
பூரணனெந்தைபுகலிப்பிரான்பொழிலேத்தனைக்குங்
காரணனந்தக்கரணங்கடந்தகருப்பொருளே. (ங)

இணைக்குறளாசிரியப்பா.

கருமுதற்றொடங்கிப்பெருநாளெல்லாங்
காமம்வெகுளிகழிபெரும்பொய்யெனுந்
தூய்மையில்குப்பைதொலைவின்றிக்கிடந்ததனை
யரிதினிகழ்ந்துபோக்கிப்பொருதிறன்
மைம்மிருணிறத்துமதனுடையடுசினத்
தைவகைக்கடாவும்யாப்பவிழ்த்தகற்றி
யன்புகொடுமெழுகியருள்விளக்கேற்றித்

துன்பவிருளைத்துரந்துமுன்புற
மெய்யெனும்விதானம்விரித்துநொய்ய
கீழ்மையிற்றொடர்ந்துகிடந்தவென்சிந்தைப்
பாழறையுனக்குப்பள்ளியறையாக்கிச்
சிந்தைத்தாமரைச்செழுமலர்ப்பூந்தவி
செந்தைநீயிருக்கவிட்டனனிந்த
நெடுநிலவளாகமுமடுகதிர்வானமு
மடையப்பரந்தவாதிவெள்ளத்து
நுரையெனச்சிதறியிருசுடர்மிதப்ப
வரைபறித்தியங்குமாருதங்கடுப்ப
மாலும்பிரமனுமுதலியவானவர்
காலமிதுவெனக்கலங்காநின்றுழி
மற்றவருய்யப்பற்றியபுணையாய்
மிகநனிமிதந்தபுகலிநாயக
வருணனிசூரக்கும்பிரளயவிடங்கநின்
செல்வச்சிலம்புமெல்லெனமிழற்ற
வமையாக்காட்சியிமையக்
கொழுந்தையுமுடனேகொண்டிங்
கெழுந்தருளத்தகுமெம்பெருமானே. (௪)

## வெண்பா.

மானுமழுவுந்திருமிடற்றில்வாழுமிரு
டானும்பிறையுந்தரித்திருக்கும்—வானவர்க்கு
வெள்ளத்தேதோன்றிக்கழுமலத்தேவீற்றிருந்தென்
னுள்ளத்தேநின்றவொளி. (௫)

## கட்டளைக்கலித்துறை.

ஒளிவந்தவாபொய்மனத்திருணீங்கவென்னுள்ளவெள்ளந்
தெளிவந்தவாவந்துதித்தித்தவாசிந்தியாததொரு
களிவந்தவாவன்புகைவந்தவாகடைசாரமையத்
தெளிவந்தவாறங்கழுமலவாணர்தமின்னருளே. (௬)

## இணைக்குறளாசிரியப்பா.

அருள்பழுத்தளிந்தகருணைவான்கனி
யாராவின்பத்திராக்காத
லடியவர்க்கமிர்தவாரிநெடுநிலை
மாடக்கோபுரத்தாடகக்குடுமி
மழைவயிறுகிழிக்குங்கழுமலவாணநின்
வழுவாக்காட்சிமுதிராவிளமுலைப்
பாவையுடனிருந்தபரமயோகி
யாறொன்றுணர்ந்துவனெந்தைமேலு
ளகிலலோகமுமனந்தயோனியு
நிகிலமுந்தோன்றநீநினைந்தநாட்டொடங்கி
யெனைப்பலயோனியுநினைப்பரும்பேதத்
தியாரும்யாவையுமெனக்குத்தனித்தனித்
தாயராகியுந்தந்தையராகியும்
வந்திலாதவரில்லையானவர்
தந்தையராகியுந்தாயராகியும்
வந்திராததுமில்லைமுந்து
பிறவாநிலனுமில்லையவ்வயி
னிறவாநிலனுமில்லைபிறிதி
லென்னைத்தின்றுவுயிர்களுமில்லையானவை
தம்மைத்தின்றொழிந்ததுமில்லையனைத்தே
காலமுஞ்சென்றதியானிதன்மேலினி
யிளைக்குமாறிலனேநாயே
னந்தாச்சோதிநின்னஞ்செழுத்துநவிலுந்
தந்திரம்பயின்றதுமிலனேதந்திரம்
பயின்றவர்ப்பயின்றதுமிலனேயாயினு
மியன்றதோர்பொழுதினிட்டதுமலராச்
சொன்னதுமந்திரமாகவென்னையு
மிடர்ப்பிறப்பிறப்பெனுமிரண்டின்
கடற்படாவகைகாத்தனின்கடனே. (எ)

## வெண்பா.

சடலான காமத்தேகாமுழ்வர் துன்ப
மடலாழுபாயமறியா—ருடலா
மும்மலத்தையோர்கிலார்முக்கட்பெருமான்
கழுமலத்தைக்கைதொழாதார். (அ)

## கட்டளைக்கலித்துறை.

தொழுவாளிவள்வளைதோற்பாளிவளிடர்க்கேயலர்கொண்
டெழுவாளெழுகின்றதென்செயவோவென்மனத்திருந்துங்
கழுவாமணியையச்சுழுமலவாணனைக்கையிற்கொண்—
மழுவாளனைக்கண்டுவந்ததென்றுசொர்வசையில்லையே. (கூ)

## நேரிசையாசிரியப்பா.

வசையில்காட்சியிசைநனிவிளங்க
முன்றுணிகழ்ந்தபன்னீருகத்து
வேறுவேறுபெயரினுறின்றியன்ற
மையறுசிறப்பிற்றெய்வத்தன்மைப்
புகலிநாயகவிகல்விடைப்பாக
வமைநாண்மென்றோளுமையாள்கொழுந
குன்றுகுனிவித்துவன்றோவுணர்
மூவெயிலெரித்தசேவகத்தேவ
விளங்கிலாமுகிழ்க்குப்வளர்சடைக்கடவுளை
நெற்றியிற்சிறந்தவொற்றைநாட்டத்துக்
காமனைவிழித்தமாமுதுதலைவ
வானவரறியாவாதியானே
கல்லாமனத்துப்புல்லறிவுதொடர
மறந்துநோக்கும்வெறுந்தண்ணூட்டத்துக்
காண்டொறுங்காண்டொறுமெல்லாமியாண்டை—
யாயினும்பிறவுமென்னதும்பிறரது
மாவனபலவுமழிவனபலவும்

போவதும்வருவதுநிகழ்வதுமாகித்
தெண்ணீர்ஞாலத்துத்திரண்டமணலினு
மெண்ணில்கோடியெனைப்பலவாகி
யில்லனவுளவாயுள்ளதுகாணாது
பன்னாளிருள்வயிற்பட்டேனன்னது
மன்னதாதலினடிக்குமதென்னெனிற்
கட்புலன்றெரியாதுகொட்புறுமொருவர்க்குக்
குழிவழியாகிவழிகுழியாகி
யொழிவின்றொன்றினொன்றுதடுமாற
வந்தாற்போலவந்ததெருளைதநின்
றிருவருணாட்டங்கருணையிற்பெறலும்
யாவையுமெனக்குப்பொய்யெனத்தோன்றி
மேவருநீயேமெய்யெனத்தோன்றினை
போவியப்புலவன்சாயல்பெறவெழுதிய
சிற்பவிகற்பமெல்லாமொன்றித்
தவிராதுதடவினர்தமக்குச்
சுவராய்த்தோன்றுநுணிவுபோன்றனவே. (௧0)

## வெண்பா.

எனவேயெழுந்திருந்தாளென்செய்வாளின்னஞ்
சினவேறுகாட்டுதிரேற்றிரு—மினவேகப்
பாம்புகலியாணிமிரும்பன்னசசடைமுடிநம்
பூம்புகலியாணிதழிப்போது. (௧௧)

## கட்டளைக்கலித்துறை.

போதும்பெறாவிடிற்பச்சிலையுண்டுபுனலுண்டெங்கு
மேதும்பெறாவிடினெஞ்சுண்டன்றேயிணையாகச்செப்புஞ்
சூதும்பெறுமுலைபங்கர்தென்றோணிபுரேசர்வண்டின்
றுதும்பெறுதவடித்தாமரைசென்றுசார்வதற்கே. (௧௨)

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

பட்டணத்துப்பிள்ளையார்

அருளிச்செய்த

# திருவிடைமருதூர் மும்மணிக்கோவை.

## இணைக்குறளாசிரியப்பா.

தெய்வத்தாமரைச்செவ்வியின்மலர்ந்து
வாடாப்புதுமலர்த்தோடெனச்சிவந்து
சிலம்புங்கழலுமலம்பப்புனைந்து
கூற்றிஞற்றன்மாற்றிப்போற்றுது
வலம்புரிநெடுமாலேனமாகிநிலம்புக்
காற்றலினகழ்த்தோற்றுதுமிர்ந்து
பத்தியடியவர்பச்சிலையிடினு
முத்திகொடுத்துமுன்னின்றருளித்
திகழ்ந்துளதொருபாற்றிருவடியகஞ்சேர்ந்து
மறுவில்கற்பகத்துறுதளிர்வாங்கி
நெய்யிற்றோய்த்தசெவ்வித்தாகி
ஆபுரங்கடப்பினுநொந்துதேவர்
மடவரன்மகளிர்வணங்குபுவீழ்த்த
சின்னப்பன்மலர்தீண்டிடச்சிவந்து
பஞ்சியுமனிச்சமுமெஞ்சவெஞ்சாத்
திருவொடும்பொலியுமொருபாற்றிருவடி
நீலபுள்ளிவாளுகிர்வேங்கைத்
தோலின்கலிங்கமேல்விரித்தசைத்து
நச்செயிற்றரவக்கச்சையாப்புறுத்துப்
பொலிந்துளதொருபாற்றிருவிடையிலங்கொளி
யரத்தவாடைவிரித்துமீதுறீஇ
யிரங்குமணிமேகலையொருங்குடன்சாத்திய
மருங்கிற்றுகுமொருபாற்றிருவிடை

செங்கணரவும்பைங்கணுமையுங்
கேழற்கோடும்வீழ்திரளக்கு
நுடங்குநூலுமிடங்கொண்டுபுனைந்து
தவளநீறணிந்ததோர்பவளவெற்பென்ன
வொளியுடன்றிகழுமொருபாலாகம்
வாரும்வடமுமோர்பெறப்புனைந்து
செஞ்சாந்தணிந்துகுங்குமமெழுதிப்
பொற்றாமரையின்முற்றாமுகிழென
வுலகேழீன்றநிலையிற்றளரா
முலையுடன்பொலியுமொருபாலாக
மயில்வாயரவம்வயின்வயினணிந்து
மூவிலைவேலும்பூவாய்மழுவுந்
தமருகப்பறையுமமர்தரத்தாங்கிச்
சிறந்துளதொருபாற்றிருக்கரஞ்செறிந்த
சூடகம்விளங்கியவாடகக்கழங்குட
னும்மென்பந்துமம்மென்கிள்ளையுந்
தரித்தேதிகழுமொருபாற்றிருக்கர
மிரவியுமெரியும்விரவியவெம்மையி
னொருபால்விளங்குந்திருநெடுநாட்ட
நவ்விமானின்செவ்வித்தாகிப்
பாலிற்கிடந்தநீலம்போன்று
குண்டுநீர்க்குவளையிற்குளிர்ந்துநிறம்பயின்
றெம்மனோர்க்கடுத்தவெம்மைநோய்க்கிரங்கி
யுலகேழ்புரக்குமொருபாளுட்ட
நொச்சிப்பூவும்பச்சைமத்தமுங்
கொன்றைப்போதுமென்றுணர்த்தும்பையுங்
கங்கையாறும்பைங்கட்டலையு
மரவுமதியமும்விரவித்தொடுத்துச்
சூடாமாலைசூடிப்பீடுகெழு
நெருப்பிற்றிரித்தனையவுருக்கிளர்சடிலமொடு

நான்முகங்கரந்தபாணிறவன்னங்
காணுவண்ணங்கருத்தையுங்கடந்து
சேணிகந்துளதேயொருபாற்றிருமுடிபேணிட
கடவுட்கற்பின்மடவரன்மகளிர்
கற்பகவனத்துப்பொற்பூவாங்கிக்
கைவைத்துப்புனைந்ததெய்வமாலை
நீலக்குழன்மிசைவளைஇமேனிவந்து
வண்டுந்தேனுங்கிண்டுபுதிளைப்பத்
திருவொடுபொலியுமொருபாற்றிருமுடி
யிணையவண்ணத்துஙினைவருங்காட்சி
யிருவயினுருவுமொருவயிற்றாகி
வலப்பாலுட்டமிடப்பாலுக்க
வாணுதல்பாகநாணுதல்செய்ய
வலப்பாற்றிருக்கரமிடப்பால்வனமுலை
தைவந்துவருடமெய்ம்மயிர்பொடித்தாங்
குலகமேழும்பன்முறையீன்று
மருதிடங்கொண்டவொருதனிக்கடவுணின்
றிருவடிபரவுதும்யாமேநெடுநா
ளிறந்தும்பிறந்துமிளைத்தனமறந்துஞ்
சிறைக்கருப்பாசயஞ்சேரா
மறித்தும்புகாஅவாழ்வுபெறற்பொருட்டே. (க)

வெண்பா.

பொருளுங்குலனும்புகழுந்திறனு
மருளுமறிவுமனைத்து—மொருவர்
கருதாவென்பார்க்குங்கறைமிடற்றுயதொல்லை
மருதாவென்பார்க்குவரும். (உ)

கட்டளைக்கலித்துறை.

வருந்தேனிறந்தும்பிறந்துமயக்கும்புலன்வழிபோயப்
பொருந்தேனரகிற்புகுகின்றிலேன்புகழ்மாமருதிற்

பெருந்தேன்முகந்துகொண்டுண்டுபிறிதொன்றிலாசையின்றி
யிருந்தேனினிச்சென்றிரவேனொருவரையாதொன்றுமே. (௩)

## நேரிசையாசிரியப்பா.

ஒன்றினொன்றொன்றுசென்றுமுகிறடவி
யாடுகொடிநுடங்கும்பீடுகெழுமாளிகை
தெய்வக்கம்மியர்கைம்முயன்றுவகுத்த
வோவநூற்செம்மைப்பூவியல்வீதி
குயிலெனமொழியுமயிலியலாயத்து
மான்மாறவிழிக்குமானுச்செல்வத்
திடைமருதிடங்கொண்டிருந்தவெந்தை
சுடர்மழுவலங்கொண்டிருந்ததோன்ற
லாரணந்தொடராப்பூரணபுராண
நாரணனறியாக்காரணக்கடவுள்
சோதிச்சுடரொளியாதித்தனிப்பொரு
ளேகநாயகயோகநாயக
யானொன்றுணர்த்துவதுளதேயான்முன்
னனந்தலையுலகத்தனந்தயோனியிற்
பிறந்துழிப்பிறவாதுகறங்கெனச்சுழன்றுழித்
தோற்றும்பொழுதினீற்றுத்துன்பத்
தியாயுறுதுயரமுமியானுறுதுயரமு
மிறக்கும்பொழுதினறப்பெருந்துன்பமு
நீயலதறிகுநர்யாரேயதனா
லியானினிப்பிறத்தலாற்றேனஃதான்
றுற்பவந்துடைத்தனிற்பிடித்தல்லது
பிறிதொருநெறியினில்லையந்நெறிக்கு
வேண்டலும்வெறுத்தலுமாண்டொன்றிற்படாஅ
வுள்ளமொன்றுடைமைவேண்டுமஃதன்றி
யைம்புலனேவலாணைவழிநின்று
தானலதொன்றைத்தானெனநினையு

மிதுவெனதுள்ளமாதலினிதுகொடு
நின்னைநினைப்பதெங்ஙனமுன்னங்
சற்புனையாகக்கடனீர்நீந்தின
ரெற்பிறருளரோவிறைவகற்பங்
கடத்தல்யான்பெறவும்வேண்டுங்கடத்தற்கு
நினைத்தல்யான்பெறவும்வேண்டுநினைத்தற்கு
நெஞ்சுநெறிநிற்கவும்வேண்டுநெஞ்சுபொதி
யுறையெயிற்றுரகம்பூண்ட
கறைகெழுமிடற்றெங்கண்ணுதலோயே (௪)

## வெண்பா.

கண்ணென்றுநந்தமக்கோர்காப்பென்றுங்கற்றிருக்கு
மெண்ணென்றுமூலவெழுத்தென்று—மொண்ணனை
மருதவப்பாவென்றுமுனைவாழ்த்தாரேன்மற்றுங்
கருதவப்பாலுண்டோசதி (௫)

## கட்டளைக்கலித்துறை.

கதியாவதுபிறிதியாதொன்றுமில்லைகளேவரத்தின்
பொதியாவதுசுமந்தான்விழப்போமிதுபோனபின்னர்
விதியாமெனச்சிலர்நோவதல்லாலிதைவேண்டுநர்யார்
மதியாவதுமருதன்கழலேசென்றுவாழ்த்துவதே. (௬)

## நேரிசையாசிரியப்பா.

வாழ்ந்தனமென்றுதாழ்ந்தவர்க்குதவாது
தன்னுயிர்க்கிரங்கிமன்னுயிர்க்கிரங்கா
துண்டிப்பொருட்டாற்கண்டனவெஃகி
யவியடுநர்க்குச்சுவைபகர்ந்தேவி
யாராவுண்டியயின்றனராகித்
தூராக்குழியைத்தூர்த்துப்பாரா
விழுப்பமுங்குலனுமொழுக்கமுங்கல்வியுந்
தன்னிற்சிறந்தநன்மூதாளரைக்
கூஉய்முன்னின்றுதன்னேவல்கேட்குஞ்

சிறுஅர்த்தொகுதியினுறுஅப்பேசியும்
பொய்யொடுபுன்மைதன்புல்லர்க்குப்புகன்று
மெய்யுமானமுமேன்மையுமொரீஇத்
தன்னைத்தேறிமுன்னையோர்கொடுத்த
நன்மனைக்கிழத்தியாகியவந்நிலைச்
சாவுழிச்சாஅந்தகைமையளாயினு
மேவுழிமேவல்செல்லாதுகாவலொடு
கொண்டோளொருத்தியுண்டிவேட்டிருப்ப
வெள்ளுக்கெண்ணெய்போலத்தள்ளாது
பொருளினளவைக்குப்போகம்விற்றுண்ணு
மருளின்மடந்தையராகந்தோய்ந்து
மாற்றல்செல்லாதுவேற்றோர்மனைவயிற்
கற்புடைமடந்தையர்பொற்புநனிகேட்டுப்
பிழைவழிபாராதுநுழைவழிநோக்கியு
நச்சிவந்தநல்கூர்மாந்தர்தம்
விச்சையிற்படைத்தவெவ்வேறுகாட்சியி
னகமலர்ந்தீவார்போலமுகமலர்ந்
தினிதுமொழிந்தாங்குதவுதலின்றி
நாளுநாளுநாள்பலகுறித்தவர்
தாளிறுறறலுந்தவிர்த்துக்கேளிகழ்ந்
திகழும்பரமுமில்லையென்று
பயமின்றொழுகிப்பட்டிமைபயிற்றி
மின்னினையதன்செல்வத்தைவிரும்பித்
தன்னையுமொருவராகவுன்னு
மேனையோர்வாழும்வாழ்க்கையுநனைமலர்ந்
தியோசனைகமழுமுற்பலவாவியிற்
பாசடைப்பரப்பிற்பானிறவன்னம்
பார்ப்புடன்வெருவப்பகுவாய்வாளைகள்
போர்த்தொழில்புரியும்பொருகாவிரியு
மருதமுஞ்சூழ்ந்தமருதவாண

சுருதியுந்தொடராச்சுருதிநாயக
பத்தருக்கெய்ப்பினில்வைப்பெனவுதவு
முத்தித்தாளமூவாமுதல்வநின்
றிருவடிபிடித்துவெருவரல்விட்டு
மக்களுமனைவியுமொக்கலுந்திருவும்
பொருளெனநினையாதுன்னருளினைநினைந்
திந்திரச்செல்வமுமெட்டுச்சித்தியும்
வந்துழிவந்துழிமறுத்தனரொதுங்கிச்
சின்னச்சீரைதுன்னற்கோவண
மறுதற்கிளொடுபெறுவதுபுனைந்து
சிதவலோடொன்றுதவுழியெடுத்தாங்
கிடுவோருளரெனினிலையினின்றயின்று
படுதரைப்பாயலிற்பள்ளிமேவியோவாத்
தகவெனுமரிவையைத்தழீஇமகவெனப்
பல்லுயிரனைத்தையுமொக்கப்பார்க்குநின்
செல்வக்கடவுட்டொண்டர்வாழ்வும்
பற்றிப்பார்க்கினுற்றநாயேற்குக்
குளப்படிநீருமளப்பருந்தன்மைப்
பிரளயசலதியுமிருவகைப்பொருளு
மொப்பினுமொவ்வாத்துப்பிற்றுதலி
னின்சீரடியார்தஞ்சீரடியார்க்
கடிமைபூண்டுநெடுநாட்பழகி
முடலையாக்கையொடுபுடைபட்டொழுகியவர்
காற்றலைபேவலென்னுய்த்தலையேற்றுக்
கண்டதுகாணினல்லதொன்
றுண்டோமற்றெனக்குள்ளதுபிறிதே. (எ)

## வெண்பா.

பிறிந்தேனரகம்பிறவாதவண்ண
மறிந்தேனநங்கவேளம்பிற்—செறிந்த

பொருதவட்டவிற்பிழைத்துப்போந்தேன்புராணன்
மருதவட்டந்தன்னுளேவந்து. (அ)

## கட்டளைக்கலித்துறை.

வந்திக்கண்டாயடியாரைக்கண்டான்மறவாதுநெஞ்சே
சிந்திக்கண்டாயரன்செம்பொற்கழறிருமாமருதைச்
சந்திக்கண்டாயில்லையாயினமன்றமர்தாங்கொடுபோ
யுந்திக்கண்டாய்நிரயத்துன்னைவீழ்த்தியுழக்குவரே. (கூ)

## நேரிசையாசிரியப்பா.

உழப்பின்வாராவுறுதிகளுளவோ
கழப்பின்வாராக்கையறவுளவோ அதனால்
நெஞ்சப்புனத்துவஞ்சக்கட்டையை
வேரறவகழ்ந்துபோக்கித்தூர்வைசெய்
தன்பென்பாத்திகோலிமுன்புற
மெய்யெனுமெருவைவிரித்தாங்கையமில்
பத்தித்தனிவித்திட்டுநித்தலு
மார்வத்தெண்ணீர்பாய்ச்சிநேர்நின்று
தடுக்குநர்க்கடங்காதிடுக்கண்செய்யும்
பட்டியஞ்சினுக்கஞ்சியுட்சென்று
சாந்தவேலிகோலிவாய்ந்தபின்
ஞானப்பெருமுளைநந்தாதுமுளைத்துக்
கருணையிளந்தளிர்காட்டவருகாக்
காமக்குரோதக்களையறக்களைந்து
சேமப்படுத்துழிச்செம்மையினோங்கி
மெய்ம்மயிர்ப்புளகமுகிழ்த்திட்டம்மெனக்
கண்ணீரரும்பிக்கடிமலர்மலர்ந்துபுண்ணிய
வஞ்செழுத்தருங்காய்தோன்றிநஞ்சுபொதி
காளகண்டமுங்கண்ணொருமூன்றுந்
தோளொருநான்குஞ்சுடர்முகமைந்தும்

பவளநிறம்பெற்றுத்தவளநீறுபூசி
யறுசுவையதனினுமுறுசுவையுடைத்தாய்க்
காணினுங்கேட்பினுங்கருதினுங்களிதருஞ்
சேணுயர்மருதமாணிக்கத்தீங்கனி
பையப்பையப்பழுத்துக்கைவர
வெம்மனோர்களினிதினருந்திச்
செம்மாந்திருப்பச்சிலரிதின்வாராது
மனமெனும்புனத்தைவறும்பாழாக்கிக்
காமக்காடுமூடித்தீமைசெய்
யைம்புலவேடராறலைத்தொழுக
வின்பப்பேய்த்தேரெட்டாதோடக்
கல்லாவுணர்வெனும்புல்வாயலமர
விச்சைவித்தாருத்துழியானெனப்பெயரிய
நச்சுமாமரநனிமிகமுளைத்துப்
பொய்யென்கவடுகள்போக்கிச்செய்யும்
பாவப்பஃறழைபரப்பிப்பூவெனக்
கொடுமையரும்பிக்கடுமைமலர்ந்து
துன்பப்பல்காய்தூக்கிப்பின்பு
மரணம்பழுத்துநரகிடைவீழ்ந்து
தமக்கும்பிறர்க்குமுதவா
திமைப்பிற்கழியுமியற்கையோருடைத்தே. (க0)

## வெண்பா.

உடைமணியினோசைக்கொதுங்கியரவம்
படமொடுங்கப்பையவேசென்றங்—கிடைமருத
ரையம்புகுவதணியிழையார்மேலநங்கன்
கையம்புகவேண்டிக்காண். (கக)

## கட்டளைக்கலித்துறை.

காணீர்கதியொன்றுங்கல்லீரெழுத்தஞ்சும்வல்லவண்ணம்
பேணீர்திருப்பணிபேசீரவன்புகழாசைப்பட்டுப்

பூணீ ருருத்திரசாதன நீறெங்கும்பூசுகிலீர்
வீணீரெளிதோ மருதப்பிரான்கழன் மேவுதற்கே. (கஉ)

## நேரிசையாசிரியப்பா.

மேவியபுன்மயிர்த்தொகையோவம்மயிர்
பாவியதோலின்பரப்போதோலிடைப்
புகவிட்டுப்பொதிந்தபுண்ணோபுண்ணிடை
யூறுமுதிரப்புனலோகூறுசெய்
திடையிடைநிற்குமெலும்போவெலும்பிடை
முடைகெழுமூளைவிழுதோவழுவழுத்
துள்ளிடையொழுகும்வழும்போமெள்ளநின்
றூரும்புழுவினொழுங்கோநீரிடை
வைத்தமலத்தின்குவையோவைத்துக்
கட்டியநரம்பின்கயிறோவுடம்பிற்குட்
பிரியாதொழுக்கும்பிணியோதெரியா
தின்னதியானென்றறியேனென்னை
யெங்குந்தேடினன்யாதிலுங்காணேன்முன்னம்
வரைத்தனிவில்லாற்புரத்தையழலூட்டிக்
கண்படையாகக்காமனையொருநா
ளுண்பொடியாகநோக்கியண்டத்து
வீயாவமரர்வியவந்தெழுந்த
தீவாய்நஞ்சைத்திருவமுதாக்கி
யிருவர்தேடிவெருவரநிமிர்ந்து
பாலனுக்காகக்காலனைக்காய்ந்து
சந்தனசரளசண்பகவகுள
நந்தனவனத்திடைஞாயிறுவழங்காது
நவமணிமுகிழ்த்தபுதுவெயிலெறிப்ப
வெண்ணருங்கோடியிருடிகணங்கட்குப்
புண்ணியம்புரக்கும்பொன்னிசூழ்ந்த
திருவிடைமருதபொருவிடைப்பாக

மங்கைபங்ககங்கைநாயகநின்
றெய்வத்திருவருள்கைவந்துகிடைத்தலின்
மாயப்படலங்கிறித்தூய
ஞானநாட்டம்பெற்றபின்யானு
நின்பெருந்தன்மையுங்கண்டேன்காண்டலு
மென்னையுங்கண்டேன்பிறரையுங்கண்டே
னின்னிலையனைத்தையுங்கண்டேனென்னே
நின்னைக்காணுமாந்தர்
தன்னையுங்காணுந்தன்மையோரே. (௪௩)

## வெண்பா.

ஓராதேயஞ்செழுத்துமுன்னுதேபச்சிலையு
நேராதேநீருநிரப்பாதே—யாராயோ
வெண்ணுவாருள்ளத்திடைமருதர்பொற்பாத
நண்ணுவாமென்னுமது நாம். (௪௪)

## கட்டளைக்கலித்துறை.

நாமேயிடையுள்ளவாறறிவாமினிநாங்கள்சொல்ல
லாமேமருதன்மருதவனத்தன்னமன்னவரைப்
பூமேலணிந்துபிழைக்கச்செய்தாரொருபொட்டுமிட்டார்
தாமேதளர்பவரைப்பாரமேற்றுதறக்கதன்றே. (௪௫)

## நேரிசையாசிரியப்பா.

அன்றினர்புரங்களழலிடையவியக்
குன்றுவளைத்தெய்தகுன்றாக்கொற்றத்து
நுண்பொடியணிந்தவெண்கோட்செல்வ
கயிலைநடந்தனையவுயர்நிலைநோன்றாட்
பிறைசெறிந்தன்னவிருகோட்டொருதிமிற்
பானிறச்செங்கண்மால்விடைப்பாக
சிமையச்செங்கோட்டிமையச்செல்வன்

மணியெனப்பெற்றவணியியலன்னம்
வெள்ளைச்சிறுநகைக்கிள்ளைப்பிள்ளை
குயிலெனப்பேசுமயிலிளம்பேடை
கதிரொளிநீலங்கமலத்துமலர்ந்தன
மதரரிநெடுங்கண்மானின்கன்று
வருமுலைதாங்குந்திருமார்புவல்லி
வையமேழும்பன்முறையீன்ற
வையதிருவயிற்றம்மைப்பிராட்டி
மறப்பருஞ்செய்கையறப்பெருஞ்செல்வி
யெமையாளுடையவுமையாணங்கை
கடவுட்கற்பின்மடவரல்கொழுந
பவளமால்வரைப்பணைக்கைபோந்தனைய
தழைசெவியெண்டோட்டலைவன்றந்தை
பூவலர்குடுமிச்சேவலம்பதாகை
மலைதுளைபடுத்தகொலைகெழுகூர்வே
லமரர்த்தாங்குங்குமரன்றாதை
பொருதிடங்கொண்டபொன்னிபுரக்கு
மருதிடங்கொண்டமருதவாண
நின்னதுகுற்றமுளதோநின்னைத்
தெண்ணருங்கோடியிடர்ப்பகைகடந்து
கண்ணுறுதீத்திறத்துக்காலினைவதையா
திறப்பையும்பிறப்பையுமிகந்துசிறப்பொடு
தேவராவின்கன்றெனத்திரியாப்
பாவிகடமதேபாவம்யாதெனின்
முறியாப்பெறுக்[illegible]ன்முப்பழங்கலந்த
வறுசுவையம[illegible]னிதிருப்பப்
புசியாதொரு[illegible]சியால்வருந்துத
லையினியின்[illegible]றுவெயிலின்வைத்
தாற்றியசெ[illegible]காற்றமிட்டிருப்ப
மடாஅவொ[illegible]விடாஅவேட்கை

தெண்ணீர்க்குற்றமன்றுகண்ணகன்று
தேந்துளிசிதறிப்பூந்துணர்துறுமி
வாலுகங்கிடந்தசோலைகிடப்ப
வெள்ளிடைவெயிலிற்புள்ளிவெயர்பொடிப்ப
வடிபெயர்த்திடுவாரொருவ
னெடிதுவருந்துதனிழற்றீங்கன்றே. (கசு)

வெண்பா.

அன்றென்றுமாமென்றுமாறுசமயங்க
ளொன்றொன்றொடொவ்வாதுரைத்தாலு—மென்று
மொருதனையேநோக்குவாருள்ளத்திருக்கு
மருதனையேநோக்கிவரும். (கஎ)

கட்டளைக்கலித்துறை.

நோக்கிற்றுச்காமனுடல்பொடியாகநுதிவிரலாற்
றாக்கிற்றரக்கன்றலைகீழ்ப்படத்தன்சுடர்வடிவா
ளோக்கிற்றுத்தக்கன்றலையுருண்டோடச்சலந்தரனைப்
போக்கிற்றுயிர்பொன்னிசூழ்மருதாளுடைப்புண்ணியமே. (கஅ)

நேரிசையாசிரியப்பா.

புண்ணியபுராதனபுதுப்பூங்கொன்றைக்
கண்ணிவேய்ந்தகைலைநாயக
காளகண்டகந்தனைப்பயந்த
வாளரிநெடுங்கண்மலையாள்கொழுந
பூதநாதபொருவிடைப்பாக
வேதகீதவிண்ணோர்தலைவ
முத்திநாயகமூவாமுதல்வ
பத்தியாகிப்பணைத்தமெய்யன்பொடு
நொச்சியாயினுங்கரந்தையாயினும்
பச்சிலையிட்டுப்பரவுந்தொண்டர்

கருவிடைப்புகாமற்காத்தருள்புரியுந்
திருவிடைமருததிரிபுராந்தக
மலர்தலையுலகத்துப்பலபலமாக்கண்
மக்களைமனைவியையொக்கலையொரீஇ
மலையும்பிறவுந்துறந்துநினைவருங்
காடுமலையும்புக்குக்கோடையிற்
கைம்மேனிமிர்த்துக்காலொன்றுமுடக்கி
யைவகைநெருப்பினழுவத்துநின்று
மாரிநாளினும்வார்பனிநாளினு
நீரடைமூழ்கிநெடிதுகிடந்துஞ்
சடையைப்புனைந்துந்தலையைப்பறித்து
முடையைத்துறந்துமுண்ணாதுழன்றுங்
காயுங்கிழங்குங்காற்றுதிர்சருகும்
வாயுவுநீரும்வந்தனவருந்தியுங்
களரிலுங்கல்லிலுங்கண்படைகொண்டுந்
தளர்வுறுமியாக்கையைத்தளர்வித்தாங்கவ
ரம்மைமுத்தியடைவதற்காகத்
தம்மைத்தாமேசாலவுமொறுப்ப
ரிங்கிவைசெய்யாதியாங்களெல்லாம்
பழுதின்றுயர்ந்தவெழுநிலைமாடத்துஞ்
செந்தாதுதிர்ந்தநந்தனவனத்துந்
தென்றலியங்குமுன்றிலகத்துந்
தண்டாச்சித்திரமண்டபமருங்கிலும்
பூவிரிதரங்கவாவிக்கரையிலு
மயிற்பெடையாலக்குயிற்றியகுன்றிலும்
வேண்டுழிவேண்டுழியாண்டாண்டிட்ட
மருப்பிணியன்றவாளரிசுமந்த
விருப்புறுகட்டின்மீமிசைப்படுத்த
வைவகையமளியணைமேற்பொங்கத்
தண்மலர்கமழும்வெண்மடிவிரித்துப்

பட்டினுட்பெய்தபகருண்பஞ்சி
னெட்டணையருகாக்கொட்டைகள்பரப்பிப்
பாயன்மீதுபரிபுரமிழற்றச்
சாயலன்னத்தின்றளாநடைபயிற்றிப்
பொற்றேரணத்தைச்சுற்றிப்புறங்கலென
வம்மென்குறங்கெனும்மென்கலிங்கங்
கண்ணுமனமுங்கவற்றப்பண்வர
விரங்குமணிமேகலைமருங்கிற்பூட்டப்ப
வாடரவல்குலரும்பெறலுவசுபபு
வாடவீங்கியவனமுலைகளிப்ப
வணியியல்கழுத்தையலங்கரித்ததுபோன்
மணியியலாரங்கதிர்விரித்தொளிர்தர
மணிவளைதாங்கியவணிகெழுமென்றோள்
வரித்தசாந்தின்மிசைவிரித்துமீப்பட்ட
வுத்தரியப்பட்டொருபாலொளிர்தர
வள்ளைவாட்டியவொளிருகாதொடு
பவளத்தருசாதுரமாநிரைத்தாங்
கொழுங்கண்டகுமிழ்போனறுபதித்துக்
காலன்வேலுஞ்சாபபாணமு
மாலகாலமுமனைத்துமிட்டமைத்த
விரண்டுநாட்டமுப்புரண்டுகடைமிளிர்தர
மதியெனமாசறுவதனம்விளங்கப்
புதுவிரையலங்கல்சூழனமிசைப்பொலியு
மஞ்சொன்மடநடையராகநதோயந்து
சின்னம்பரப்பிப்பொன்னின்கலத்தி
னறுசுவையடிசில்வறிதினிதருந்தா
தாடினர்க்கென்றும்பாடினர்க்கென்றும்
வாடினர்க்கென்றும்வரையாதுகொடுத்தும
பூசுவனபூசியும்புனைவனபுனைந்துந்
தூசுநல்லனதொடையிறச்சேர்த்தியு

மைந்துபுலன்களுமாரவார்ந்து
மைந்தருமொக்கலுமகிழமனமகிழ்ந்
திவ்வகையிருந்தோமாயினுமவ்வகை
மந்திரவெழுத்தைந்தும்வாயிடைமறவாது
சிந்தைநின்வழிசெலுத்தலினந்த
முத்தியுமிழந்திலமுதல்வவத்திற
நின்னதுபெருமைபண்றேவென்னெனின்
வல்லானொருவன்கைம்முயன்றெறியினு
மாட்டாவொருவன்வாளாவெறியினு
நிலத்தின்வழாஅக்கல்லேபோ
லலத்தின்வழார்நின்னுமநவின்றோரே. (கக)

## வெண்பா.

நாமநவிற்றாய்மனனேநாரியர்சடோடோய்ந்து
காமநவிற்றிக்கழிநதொழிய —ஏமமா
பொருதவனத்தானையுரிபோர்த்தருளுமெங்கண்
மருதவனத்தானைவளைத்து. (உ0)

## கட்டளைக்கலித்துறை.

வளையார்பசியின்வருந்தார்பிணியின்மதனனம்புக்
கிளையார்தனங்கண்டிரங்கிநில்லாரிப்பிறப்பினில்வந்
தளையார்நரகினுக்கென்கடவார்பொன்னலர்ந்தகொன்றைந்
தளையாரிடைமருதன்னடியாரடிசார்ந்தவரே. (உக)

## நேரிசையாசிரியப்பா.

அடிசார்ந்தவர்க்குமுடியாவின்ப
நிறையக்கொடுப்பினுங்குறையாச்செல்வ
மூலமுநடுவுமுடிவுமிகந்து
காலமூன்றையுங்கடந்தகடவு
ளுளக்கணுக்கல்லாதூன்கணுக்கொளித்துத்
துளக்கறநிமிர்ந்தசோதித்தனிச்சுடர

ரெறுப்புத்துளையினிருசெவிக்கெட்டா
தூறுப்பினின்றெழுதருமுள்ளத்தோசை
வைத்தநாவின்வழிமறுத்தகத்தே
தித்தித்தூறுந்தெய்வத்தேற
லுண்டத்துளையிற்பண்ணைவழியன்றி
யறிவினுறுநறியநாற்ற
மேனையுந்தன்மையுமெய்தாதெவற்றையுந்
தானேயாகிநின்றதற்பர
தோற்றுவதெல்லாந்தன்னிடைத்தோற்றித்
தோற்றம்பிறிதிற்றோற்றுச்சுடர்முளை
விரிசடைமீமிசைவெண்மதிகிடப்பினு
மிருள்புரைகண்டத்தேகநாயக
ஈருதியுமிருவருந்தொடர்ந்துநின்றலமர
மருதிடங்கொண்டமருதமாணிக்க
யமையாள்கொழுநவொருமூன்றாகிய
விமையாநாட்டத்தென்றலிநாயக
வடியேனுறுகுறைமுனியாதுகேண்மதி
நின்னடிபணியாக்கன்மனக்கயவரொடு
நெடுநாட்பழகியகொடுவினையீர்ப்பக்
கருப்பாசயமெனுமிருட்சிறையறையிற்
குடரென்சங்கிலிபூண்டுதொடர்பட்டுக்
கூட்டுச்சிறைப்புழுவினீட்டுமலத்தழுந்தி
யுடனேவருந்திநெடுநாட்கிடந்து
பல்பிணிப்பெயர்பெற்றல்லற்படுத்துந்
தண்டலாளர்மிண்டிவந்தலைப்ப
வுதரநெருப்பிற்பதைபதைபதைத்தும்
வாதமத்திகையின்மோதமொத்துண்டுங்
கிடத்தனிற்றனடத்தல்செல்லா
திடங்குறைவாயிலின்முடங்கியிருந்துழிப்
பாவப்பகுதியிலிட்டுக்காவற்

கொடியோரைவரையேவிநெடிய
வாசைத்தளையிலென்னையுமுடலையும்
பாசப்படுத்திப்பையெனவிட்டபின்
யானும்போந்துதீதினுக்குழன்றும்
பெரியோர்ப்பிழைத்துப்பிறர்பொருள்வௌவியும்
பரியாதொழிந்தும்பல்லுயிர்செகுத்தும்
வேற்றோர்மனைவியர்தோற்றம்புகழ்ந்தும்
பொய்பலகூறியும்புல்லினம்புல்லியு
மைவருங்கடுப்பவவாவதுகூட்டி
யீண்டினகொண்டுநீண்டுவந்துழி
யிட்டுழியிடாதுபட்டுழிப்படாஅ
திந்நாளிடுக்கணெய்திப்பன்னாள்
வாடுபுகிடப்பேன்வீடுநெறிகாணே
ணின்னையடைந்தவடியாரடியார்க்
கென்னையுமடிமையாகக்கொண்டே
யிட்டபச்சிலைகொண்டொட்டியறிவித்
திச்சிறைபிழைப்பித்தினிச்சிறைபுகாமற்
காத்தருள்செய்யவேண்டுந்
தீத்திரண்டன்னசெஞ்சடையோனே. (உஉ)

## வெண்பா.

சடைமேலொருத்திசமைந்திருப்பமேனிப்
புடைமேலொருத்திபொலிய—விடையேபோய்ச்
சங்கேகலையேமருதற்குத்தான்கொடுப்ப
தெங்கேயிருக்கவிவள். (உ௩)

## கட்டளைக்கலித்துறை.

இருக்குமருதினுக்குள்ளிமையோர்களுநான்மறையு
நெருக்குநெருக்கத்தூநீளகத்துச்சென்றுமீளவொட்டாத்
திருக்குமருத்தைதவர்தீமையுந்தீர்த்துச்செவ்வேமனத்தை
யொருக்குமொருக்கத்தினுள்ளேமுளைக்கின்றவொண்சுடரே. ()

## நேரிசையாசிரியப்பா.

சுடர்விடுசூலப்படையினையென்றும்
விடையுகந்தேறியவிமலவென்று
முண்ணுநஞ்சமுண்டனையென்றுங்
கண்ணுற்காமனைக்காய்ந்தனையென்றுந்
திரிபுரமெரித்தசேவகவென்றுங்
கரியுரிபோர்த்தகடவுளென்று
முரகம்பூண்டவுரவோவென்றுஞ்
சிரகஞ்செந்தழலேந்தினையென்றும்
வலந்தருகாலனைவதைத்தனையென்றுஞ்
சலந்தரனுடலந்தடிந்தனையென்று
மயன்சிரமொருநாளரிந்தனையென்றும்
வியந்தவாளரக்கனைமிதித்தனையென்றுந்
தக்கன்வேள்விதகர்த்தனையென்று
முக்கிரப்புலியுரியுடுத்தனையென்று
மேனமுமன்னமுமெட்டாதிளைப்ப
வானநீழ்ப்படவளர்ந்தனையென்றுஞ்
செழுநீர்ஞாலஞ்செகுத்துயிருண்ணு
மழல்விழிக்குறளையமுக்கினையென்று
மினையனவினையனவெண்ணில்கோடி
நினைவருங்கீர்த்திநின்வயிற்புகழ்த
லுளக்குறுசிந்தையேன்சொல்லளவாதலி
னளப்பரும்பெருமைநின்னளவலதாயினு
மென்றன்வாயிற்புன்மொழிகொண்டு
நின்னைநோக்குவனாதலினென்னை
யிடுக்கண்களையாவல்லற்படுத்தா
வெழுநிலைமாடத்துச்செழுமுகிலுறங்க
வடித்துத்தட்டியெழுப்புவபோல
நுண்டுகிற்பதாகைகொண்டுகொண்டுகைப்பத்
துயிலினீங்கிப்பயிலும்வீதித்

திருமருதமர்ந்ததெய்வச்செழுஞ்சுட
ரருள்சுரந்தளிக்குமற்புதக்கூத்த
சல்லாமெலறிந்தபொல்லாப்புத்த
ளின்னினைந்தெறிந்தவருளு
லன்னவன்றனக்குமருள்பிழைத்தின்றே. (உ௫)

## வெண்பா.

இன்றிருந்துநாளையிறக்குந்தொழிலுடைய
புன்றலையமாக்கள்புகழ்வரோ—வென்றிமழு
வாளுடையான்றெய்வமருதுடையானுடையேனை
யாளுடையான்செம்பொனடி. (உ௬)

## கட்டளைக்கலித்துறை.

ஆடியாயிரந்தொழிலாயினவாயிரமாயிரம்பேர்
முடியாயிரங்கண்கண்மூவாயிரமுற்றுநீறணிந்த
தொடியாயிரங்கொண்டதோளிரண்டாயிரமென்றுநெஞ்சே
படியாயிராப்பசற்றென்மருதாளியைப்பற்றிக்கொண்டே. (உ௭)

## நேரிசையாசிரியப்பா.

கொண்டலினிருண்டகண்டத்தெண்டோட
செவ்வானுருவிற்பையரவார்த்த
சிறுபிறைகிடந்தநெறிதருபுன்சடை
மூவாமுதல்வமுக்கட்செல்வ
தேவதேவதிருவிடைமருத
மாசறுசிறப்பின்வானவராடும்
பூசத்தீர்த்தம்புரக்கும்பொன்னி
யயிராவணத்துறையாடுமப்ப
கைலாயவாணகௌரிநாயக
நின்னைவணங்கிப்பொன்னடிபுகழ்ந்து
பெரும்பதம்பிழையாவரம்பலபெற்றோ
ரிமையாநெடுங்கணுமையாணங்கையு
மழைக்கட்டடத்துப்புழைக்கைப்பிள்ளையு

மமரர்த்தாங்குங்குமரவேளுஞ்
சுரிசங்கேந்தியதிருநெடுமாலும்
வான்முறைபடைத்தநான்முகத்தொருவனுந்
தாரகற்செற்றவீரக்கன்னியும்
பூவின்கிழத்தியுநாவின்மடந்தையும்
பீடுயர்தோற்றத்துக்கோடியுருத்திரரு
மாணப்பெருந்திறல்வானோர்தலைவனுஞ்
செயிர்தீர்நாற்கோட்டயிராவதமும்
வாம்பரியருக்கர்தாம்பன்னிருவருஞ்
சந்திரனொருவனுஞ்செந்தீக்கடவுளு
நிருதியுஞ்சமனுஞ்சுருதிசனுன்கும்
வருணனும்வாயுவுமிருநிதிக்கிழவனு
மெட்டுநாகமுமட்டவசுக்களு
மூன்றுகோடியான்றமுனிவரும்
வசிட்டனுங்கபிலனுமகத்தியன்றனுந்
தும்புருநாரதரென்றிருசிறத்தரும்
வித்தகப்பாடன்முத்திறத்தடியருந்
திருந்தியவன்பிற்பெருந்துறைப்பிள்ளையு
மத்தகுசெல்வத்தவமதித்தருளிய
சித்தமார்சிவவாக்கியதேவரும்
வெள்ளைநீறுமெய்யிற்கண்டு
கள்ளன்கையிற்கட்டவிழ்ப்பித்து
மோடும்பன்னரியூளைகேட்டரனைப்
பாடினவென்றுபடாம்பலவளித்துங்
குவளைப்புனலிற்றவளையரற்ற
வீசன்றன்னையேத்தினவென்று
காசும்பொன்னுங்கலந்துதூவியும்
வழிபடுமொருவன்மஞ்சனத்தியற்றிய
செழுவிதையெள்ளைத்தின்னக்கண்டு
பிடித்தலுமவனிப்பிறப்புக்கென்ன

விழுந்துக்கொண்டவனைச்சிலைநுகர்ந்து
மருதவட்டத்தொருதனிக்கிடந்த
தலையைக்கண்டுதலையுறவணங்கி
யும்மைப்போலவெம்மித்தலையுங்
கிடக்கவேண்டுமென்றடுத்தடுத்திரந்துங்
கோயின்முற்றத்துமீமிசைக்கிடப்ப
வாய்த்ததென்றுநாய்க்சட்டமெடுத்துங்
காம்பவிழ்த்துதிர்ந்தகனியுருக்கண்டு
வேம்புகட்கெல்லாம்விதானமமைத்தும்
விரும்பினகொடுக்கைபரம்பரற்கென்று
புரிகுழற்றேவியைப்பரிவுடன்கொடுத்த
பெரியவன்பின்வரருணதேவரு
மினையதன்மையரெண்ணிறந்தோரே
யனையவர்நிற்கயானுமொருவன்
பத்தியென்பதோர்பாடின்றிச்
சுத்தனுயினுந்தோன்றுக்கடையேனின்னை
யிறைஞ்சிலனுயினுமேத்திலனுயினும்
வருந்திலனுயினும்வாழ்த்திலனுயினுங்
கருதியிருப்பன்கண்டாய்பெரும
நின்னுலகளைத்துநன்மைதீமை
யானவைநின்செயலாதலி
னேனையமையுநலமில்வழிக்கே. (உ௮)

## வெண்பா.

வழிபிழைத்துநாமெல்லாம்வந்தவாசெய்து
பழிபிழைத்தபாவங்களெல்லாம்—பொழில்சூழ்
மருதிடத்தானென்றொருகால்வாய்கூப்பவேண்டா
கருதிடத்தாநில்லாகரந்து. (உ௯)

### கட்டளைக்கலித்துறை.

கரத்தினின்மாலவன்கண்கொண்டுநின்கழல்போற்றநல்ல
வரத்தினையீயுமருந்தவப்பாமதியொன்றுமில்லேன்
சிரத்தினுமாயென்றன்சிந்தையுளாகிவெண்காடனென்னுந்
தரத்தினுமாயதுநின்னடியார்தெய்வத்தாமரையே. (௩௦)

திருச்சிற்றம்பலம்.



௨

திருச்சிற்றம்பலம்.

பட்டணத்துப்பிள்ளையார்

அருளிச்செய்த

## திருவேகம்பமுடையார் திருவந்தாதி.



மெய்த்தொண்டர்செல்லுநெறியறியேன்மிகநற்பணிசெய்
கைத்தொண்டர்தம்மிலுநற்றொண்டுவந்திலனுண்பதற்கே
பொய்த்தொண்டுபேசிப்புறம்புறமேயுன்னைப்போற்றுகின்ற
வித்தொண்டனேன்பணிகொள்ளுதியோகச்சியேகம்பனே. (௧)

ஏகம்பனேயென்னையாள்பவனேயிமையோர்க்கிரங்கிப்
போகம்பன்னாளுங்கொடுக்கின்றநாயகபொங்குமைவாய்
நாகம்பொன்னாரமெனப்பொலிவுற்றுநன்னீறணியு
மாகம்பொன்மாமலையொப்பவனேயென்பனாதரித்தே. (௨)

தரித்தேன்மனத்துன்றிகழ்தருநாமந்தடம்பொழில்வாய்
வரித்தேன்முரல்கச்சியேகம்பனேயென்றன்வல்வினையை
யரித்தேனுனைப்பணியாதவரேழைமைகண்டவரைச்
சிரித்தேனுனக்கடியாரடிபூணத்தெளிந்தனனே. (௩)

தெளிதருகின்றதுசென்றென்மனநின்றிருவடிவந்
தளிதருநின்னருட்கையமினியில்லையந்திச்செக்க
ரொளிதருமேனியெம்மேகம்பனேயென்றுகந்தவர்தாட்
டளிதருதூளியென்றன்றலைமேல்வைத்ததன்மைபெற்றே. (௪)

பெற்றுகந்தேனென்றுமர்ச்சனைசெய்யப்பெருகுநின்சீர்
கற்றுகந்தேனென்கருத்தினிதாகக்கச்சியேகம்பத்தின்
பற்றுகந்தேறுமுகந்தவனேபடநாகக்கச்சின்
சுற்றுகந்தேர்விடைமேல்வருவாய்நின்றுணையடியே. (௫)

அடிநின்றசூழலகோசரமாலுக்கயற்கலரின்
முடிநின்றசூழ்முடிகாண்பரிதாயிற்றுக்கார்முகிலி
னிடிநின்றசூழ்குரலேறுடையேகம்பயாமெங்ஙனே
வடிநின்றசூலப்படையுடையாயைவணங்குவதே. (௬)

வணக்கந்தலைநின்றிருவடிக்கேசெய்யுமையல்கொண்டோ
ரிணக்கன்றிமற்றோரிணக்கறியோமல்லம்வல்லரவின்
குணக்குன்றவில்லிகுளிர்கச்சியேகம்பங்கூடினல்லாற்
சணக்கன்றுமற்றொருதேவரைப்பாடுங்கவிநலமே. (௭)

நலந்தரநானொன்றுசொல்லுவன்கேண்மினல்லீர்களன்பு
கலந்தரனார்கச்சியேகம்பங்கண்டுகனற்றிகிரி
சலந்தரனாகமொழிக்கவைத்தாய்தக்கன்வேள்வியெல்லா
நிரந்தரமாகச்செய்தாயென்றுபூசித்துநின்மின்களே. (௮)

மின்களென்றார்சடைகொண்டலென்றார்கண்டமேனிவண்ணம்
பொன்களென்றார்வெளிப்பாடுதம்பொன்னடிபூண்டுகொண்ட
வென்களென்றாலும்பிரிந்தறியார்கச்சியேகம்பத்தான்
றன்களென்றாருலகெல்லாநிலைபெற்றதன்மைகளே. (௯)

தன்மையிற்குன்றாத்தவத்தோரிமையவர்தாம்வணங்கும்
வன்மையிற்குன்றாமதிற்கச்சியேகம்பர்வண்கயிலைப்
பொன்மயிற்சாயலுஞ்சேயரிக்கண்ணும்புரிகுழலு
மென்மையிற்சாயுமருங்குலுங்காதல்விளைத்தனவே. (௧௦)

தனமிட்டுமைதழுவத்தழும்புற்றவர்தம்மடியார்
மனம்விட்டகலாமதிற்கச்சியேகம்பர்வான்கயிலைச்
சினம்விட்டகலாக்களிறுவினாவியொர்சேயனையார்
புனம்விட்டகலார்பகலாம்பொழுதுநம்பூங்கொடியே. (௧௧)

பூங்கொத்திருந்தழையார்பொழிற்கச்சியேகம்பர்பொற்பார்
கோங்கத்திருந்தகுடுமிக்கயிலையெம்பொன்னொருத்தி
பாங்கொத்திருந்தனையாரணங்கேபடர்கல்லருவி
யாங்கத்திருந்திழையாடிவந்தாற்கண்டடிவருத்தே. (௧௨)

வருத்தந்தருமெய்யுங்கையிற்றழையும்வன்மாவினவுங்
கருத்தந்தரிக்குநடக்கவின்றையகழனினையத்
திருத்தந்தருளுந்திகழ்கச்சியேகம்பர்சீர்க்கயிலைத்
அருத்தந்திருப்பதன்றிப்புனங்காக்குந்தொழிலெமக்கே. (௧௩)

எம்மையுமெம்மைப்பணிகொள்ளுங்கம்பரெழிற்கயிலை
யும்மையுமாணிடமிப்புனத்தேவிற்றுவந்தமைந்தர்
தம்மையுமானையுஞ்சிந்தையுநோக்கங்கவர்வவென்றே
வும்மையுமம்மலர்க்கண்ணும்பெரியீரருளுமினே. (௧௪)

அருளைத்தருகம்பரம்பொற்கயிலையுளெம்மையரம்
பிருளைக்கரிமறிக்கும்மிவரையருறுத்தியெய்ய
வெருளக்கலைகணைதன்னொடும்போயினவில்லிமைக்கு
மருளைத்தருசொல்லியெங்கோவிலையுண்டிவ்வையகத்தே. (௧௫)

வையார்மழுப்படையேகம்பரீங்கோய்மலைப்புனத்து
ளய்யாவருகலையேனங்கரிதொடர்வேட்டையெல்லாம்
பொய்யானவையர்மனத்ததெம்பூங்கொடிகொங்கைபொருப்
பையாரரவிடையாயிற்றுவந்துபரிணமித்தே. (௧௬)

பருமுத்துதிர்த்திடுஞ்சீர்மத்தயானைநுதல்பகுந்திட்
டுருமொத்ததிண்குரற்சீயந்திரிநெறியோங்குவைவாய்ப்
பொருமுத்தலைவேற்படைச்கம்பர்பூங்கயிலைப்புனத்துட்
டருமுத்தனநகைத்தன்னசையால்வெற்பசார்வரிதே. (௧௭)

அரிதன்றிருக்கண்ணிடநிரம்பாயிரம்போதணிய
வரிதன்றிருவடிக்கர்ச்சித்தகண்ணுக்கருளுசம்ப
ரரிதன்றிருக்கங்குலியாலழிந்தகயிலையல்லிங்
கரிதென்றிருப்பதெம்பால்வெற்பவெம்மையர்க்கஞ்சுதுமே. ()

அஞ்சரத்தான்பொடியாய்விழத்தீவிழித்தன்புசெய்வோர்
நெஞ்சரத்தாழ்வுகந்தோர்கச்சியேகம்பர்நீள்கயிலைக்
குஞ்சரத்தாழ்வரைவீழநுங்கொம்புய்யக்கும்பமூழ்கும்
வெஞ்சரத்தாரனவோவல்லவோவிவ்வியன்முரசே. (க௯)

செய்தந்தகைமையுமைகணவன்றிருவேகம்பத்தான்
றாய்தந்தையாயுயிர்காப்போன்கயிலைத்தயங்கிருள்வாய்
வேய்தந்ததோளிநம்மூசலொடும்விரைவேங்கைதன்னைப்
பாய்தந்துபூசலுண்டாங்கொண்டதோசைபகடுவந்தே. (உ0)

வந்துமணம்பெறிற்பொன்னனையீர்மன்னுமேகம்பர்தம்
முந்துமருவிக்கயிலைமலையுயர்தேனிழிச்சித்
தந்துமலர்கொய்துந்தண்டினைமேயுங்கிளிகடிந்துஞ்
சிந்தும்புகர்மலைகைச்சுமிச்சாரற்றிரிகுவனே. (உக)

திரியப்புரமெய்தவேகம்பனூர்திகழுங்கயிலைக்
கிரியக்குறவர்பருவத்திடுதாளம்வினையோம்
விரியச்சுருண்முதலானுமடைந்தோம்விரைவிரைந்து
பிரியக்கதிர்முற்றினீர்பெற்றதென்னங்குப்பேசுமினே. (உஉ)

பேசுகயாவருமைக்கணியாரென்றுபித்தரெங்கும்
பூசுகையார்திருநீற்றெழிலேகம்பர்பொற்கயிலைத்
தேசுகையார்சிலைவெற்பன்பிரியும்பரிசிலராக்
கூசுகையாதுமில்லாக்குலைவேங்கைப்பெயர்நும்மையே. (உ௩)

பெயராநலத்தெழிலேகம்பனூர்பிறைதோய்கயிலை
பெயராதிருக்கப்பெறுகிளிகாள்புனமேபிரிவின்
றுயரால்வருத்திமனமுமிங்கோடித்தொழுதுசென்ற
தயராதுரையும்வெற்பர்க்கடியேற்கும்விடைதமினே. (உ௪)

தம்மைப்பிறவிக்கடல்கடப்பிப்பவர்தாம்வணங்கு
மும்மைத்திருக்கண்முகத்தெழிலேகம்பர்மொய்கயிலை
யம்மைக்கருங்கண்ணிதன்னொடின்பந்தருந்தண்புனமே
யெம்மைக்கவலைசெயச்சொல்லியோவல்லியெய்தியதே. (உ௫)

இயங்குந்திரிபுரமெய்தவேகம்பரெழிற்கயிலைத்
தயங்குமலர்ப்பொழில்காடையலாடருவித்தடங்காண்
முயங்குமணியறைகாண்மொழியீரொழியாறுநெஞ்ச
மயங்கும்பரிசுபொன்னூர்சென்றசூழல்வகுத்தெமக்கே. (உ௬)

வகுப்பாரிவர்போன்மணத்துக்குநாண்மணந்தன்னொடின்ப
மிருப்பார்களாருமிரொன்றுமிருவரைவிள்ளக்கள்வாய
நெருப்பான்மலர்கொண்டினொன்றுகிடக்கநிலாவுகம்பர்
தொகுப்பான்மணிசிந்தருவிக்கயிலையிச்சூழ்புனத்தே. (உ௭)

புனங்குழையயாதென்றுமென்றினைகொய்யதும்போகலுற்ற
கனங்குழையாடரிபியநமக்குறுங்கையறவான்
மனங்குழையாவருங்கண்கனிபண்பலபாடுற்தொண்ட
ரினங்குழையாத்தொழுமேகம்பரிக்கயிலாயத்துள்ளே. (உ௮)

உள்ளம்பெரியரல்லாச்சிறுமானுடருற்றசெல்வங்
கள்ளம்பெரியசிறுமனத்தார்க்கன்றிக்கங்கையென்னும்
வெள்ளம்பெரியசடைத்திருவேகம்பர்விண்ணரணந்
தள்ளம்பெரிகொண்டமைத்தாரடியவர்சார்வதன்றே. (உ௯)

அன்றும்பகையடர்க்கும்பரிமாவுமதவருவிக்
குன்றும்பதாதியுந்தேருங்குலவிக்குடைநிழற்கீழ்
நன்றும்பொலிவினுங்கம்பர்நன்னீறுநுதற்கிலரே
லென்றும்மரசுமுரசும்பொலியாவிருநிலத்தே. (௩௦)

நிலத்திமையோரிற்றலையாய்ப்பிறந்துமறையொடங்கம்
வலத்திமைப்போதும்பிரியாரெரிவளர்த்தாலும்வெற்பன்
குலத்துமையோர்பங்கர்கச்சியுளேகம்பங்கூடித்தொழு
நலத்தலையாதவர்வேட்டுவர்தம்மினடுப்படையே. (௩௧)

படையாலுயிர்கொன்றுதின்றுபசுக்களைப்போலச்செல்லு
நடையாலறிவின்றிநட்பிடைப்பொய்த்துக்குலங்களினுங்
கடையாய்ப்பிறக்கினுங்கச்சியுளேகம்பத்தெங்களையா
ளுடையான்கழற்கன்பரேலவர்யாவர்க்குமுத்தமரே. (௫௨)

உத்துங்கயானையுரியார்விரலாலரக்கன்சென்னி
பத்துங்கையானவிருபதுஞ்சோர்தரவைத்திலய
மொத்துங்கையாலவன்பாடக்கயிலையினூடுகைவா
ளொத்துங்கையானென்றுகந்தளித்தார்கச்சியேகம்பரே. (௫௩)

அம்பரங்காலனனீர்நிலந்திங்களருக்கனனு
வம்பரங்கொள்வதொர்வேழத்துரியவன்றன்னுருவா
மெம்பரன்கச்சியுளேகம்பத்தானிடையாசடைவா
னம்பரன்றன்னடியாரறிவார்கட்குநற்றுணையே. (௫௪)

துணைத்தாமரையடியும்பவளத்திரணன்குறங்கும்
பணைத்தோளகலமுஞ்சண்டத்துநீலமுமண்டத்துமின்
பிணைத்தாலனசடையுந்திருமுக்கணும்பெண்ணொர்பக்கத்
தணைத்தாரெழிற்கம்பரெங்கள்பிரானார்க்கழகியவே. (௫௫)

அழகறிவிற்பெரிதாகிய வேகம்பரத்தர்கொற்றம்
பழகறிவிற்பெரியோர்தமைப்பற்றலர்பற்றுமன்பின்
குழகறிவேற்பினுளொன்றறியாரறியாமைதெய்வங்
கிழகெறியப்பட்டுலந்தாருலகிற்கிடந்தனரே. (௫௬)

கிடக்குமொருபாலிரைக்கின்றபாம்பொருபான்மதியந்
தொடக்குண்டிலங்குமலங்குந்திரைக்கங்கைகுடுங்கொன்றை
வடக்குண்டுகட்டத்தலைமாலையாளான்மலைந்தவெம்போர்
கடக்கும்விடைத்திருவேகம்பர்கற்றைச்சடைமுடியே. (௫௭)

கற்றைப்பவளச்சடைவலம்பூக்கமழ்கொன்றையந்தார்
முற்றுற்றிலாமதியின்கொழுந்தேகம்பர்மொய்குழலா
மற்றைத்திசையின்மணிப்பொற்கொழுந்தத்தரங்கழுநீர்
தெற்றிப்பொலிகின்றகூட்டழகாகித்திகழ்தருமே. (௫௮)

தருமருட்டன்மைவலப்பாற்கமலக்கணெற்றியின்மேற்
றிருமலர்க்கண்பிளவின்றிகழுந்தழல்செல்வக்கம்பர்
கருமலர்க்கண்ணிடப்பாலதுநீலங்கனிமதத்து
வருநுதற்பொட்டணங்குக்குயர்ந்தோங்குமலர்க்குழலே. (௩௯)

மலர்ந்தபடத்துச்சியைந்திலுஞ்செஞ்சுடர்மாமணிவிட்
டலர்ந்தமணிக்குண்டலம்வலக்காதினிலாடிவரு
நலந்திருநீள்வயிரம்வெயிற்பாயநகுமணிகள்
கலந்தசெம்பொன்மகரக்குழையேகம்பர்காதிடமே. (௪0)

காதலைக்கும்வலத்தோள்பவளக்குன்றமங்குயர்ந்து
போதலைக்கும்பணிப்பொன்மலைநீற்றின்பொலியகலந்
தாதலைக்குங்குழல்சேர்பணைத்தோணறுஞ்சாந்தணிந்து
ருதலைக்கும்முலைமார்பிடமேகம்பர்சுந்தரமே. (௪௧)

தரம்பொற்பழியுமுலகட்டியெய்த்துத்தரந்தளரா
வுரம்பொற்புடையதிருவயிறும்வலமும்பர்மும்மைப்
புரம்பொற்பழித்தகம்பர்க்குத்தரத்திடும்பூண்முலையு
நிரம்பப்பொருநுதளரிளவஞ்சியுநேர்வுடைத்தே. (௪௨)

உடைப்புலியாடையின்மேலுரகக்கச்சுவீக்கிமுஞ்சி
வடத்தொருகோவணந்தோன்றுமரைவலமற்றையல்குற்
றெருடக்குறுகாஞ்சித்தொடுத்தவரசிலைதூநுண்டுகி
லடற்பொலியேறுடையேகம்பமேயவடிகளுக்கே. (௪௩)

அடிவலப்பால்துசெந்தாமரையொத்ததிர்கழல்சூழ்ந்
திடிகுரற்கூற்றினெருத்திறவைத்ததிளந்தளிரின்
படியிடப்பாலதுபஞ்சுறவஞ்சுஞ்சிலம்பணிந்த
வடிவுடைத்தார்கச்சியேகம்பமேயவரசருக்கே. (௪௪)

தருக்கவற்றின்மிக்கமுப்புரமெய்தயன்றன்றலையை
நெருக்கவற்றேடமழுவாள்விசைத்ததுநெற்கனென்றும்
பருக்கவற்றுங்கச்சியேகம்பரத்தர்தம்பாம்புகளின்
திருக்கவற்றுலிட்டருளுங்கடகத்திருக்கரமே. (௪௫)

கரத்தத்தமருகத்தோசைகடுத்தண்டமீபிளப்ப
வரத்தத்தபாதநெரித்திட்டவனிதலநெரியத்
தரத்தத்திசைகளுக்கப்புறம்போர்ப்பச்சடைவிரித்து
வரத்தைத்தருகம்பராடுவரெல்லியுமாநடமே. (சசு

நடனம்பிரானுகந்துய்யக்கொண்டானென்றுநன்மறையோ
ருடன்வந்துமூவாயிரவரிறைஞ்சிநிறைந்தவுண்மைக்
கடனன்றிமற்றறியாத்தில்லையம்பலங்காளத்தியா
மிடமெம்பிரான்கச்சியேகம்பமேயாற்கினியனவே. (சஎ)

இனியவரின்னாவரையொப்பார்பிறரென்னவொண்ணாத்
தனியவர்தையலுடனுமவர்தருமம்பணித்த
முனியவரேறுமுகந்தமுக்கண்ணவர்சண்டியன்புக்
கினியவர்காய்மழுவாட்படையார்கச்சியேகம்பரே. (சஅ)

பரவித்தனைநினையக்கச்சியேகம்பர்பண்ணுமையல்
வரவித்தனையுள்ளதெங்கறிந்தேன்முன்னவர்மகனார்
புரவித்தனையடிக்கக்கொடிதாய்விடியாவிரவி
லரவித்தனையுங்கொண்டார்மடவார்முன்றிலாட்டிடவே. (சகூ)

இடவஞ்சுறுக்கெனப்பாயுமுஞ்சென்னிநகுதலைகண்
டிடவஞ்சுவர்மடவாரிரிகின்றனரேகம்பத்தீர்
படமஞ்சுவாயதுநாகமிரைக்குமதனுக்குமுற்
படவஞ்சுவரெங்ஙனேபலிவந்திடும்பாங்குகளே. (ருo)

பாங்குடைகோட்புலியின்னதள்கொண்டீர்நும்பாரிடங்க
டாங்குடைகொள்ளப்பலிகொள்ளவந்தீர்தடங்கமலம்
பூங்குடைகொள்ளப்புனற்கச்சியேகம்பங்கோயில்கொண்டீ
ரீங்கிடைகொள்ளக்கலைகொள்ளவந்தீரிடைக்குமின்றே. (ருக)

இடைக்குமின்றேற்குமிணைமுலையாய்முதியார்கடஞ்சொற்
கடைக்கண்ணன்றாங்கச்சியேகம்பரையங்கொளக்கடவும்
விடைக்குமுன்றேற்றநில்லேனின்றிணியிந்தமொய்குழலார்
கிடைக்குமுன்றேற்றநஞ்சங்கிதுவோதங்கிறித்துவமே. (ருஉ)

இறிபலபேசிச்சதிரானடந்துவிடங்குபடக்
குறிபலபாடிக்குளிர்கச்சியேகம்பரையங்கொள்ள
நெறிபலவார்குழலார்மெலிவுற்றநெடுந்தெருவிற
செறிபலவெள்வளைபோயினதாயர்கடேடுவரே. (ருங)

தேடுற்றிலகள்ளநோக்கந்தெரிந்திலசொற்கண்முடி
கூடிற்றிலகுழல்கொங்கைபொடித்திலகூறமிவண்
மாடுற்றிலமணியின்மடவல்குலுமற்றிவள்பா
னாடுற்றிலவெழிலேகம்பனார்க்குள்ளநல்கிடத்தே. (ருச)

நல்கும்புகழ்க்கடவூர்நன்மறையவனுய்யநண்ணிக்
கொல்கின்றகூற்றைக்குமைத்தவெங்கூற்றங்குளிர்திரைகண்
மல்குந்திருமறைக்காட்டமிர்தென்றுமலைமகடான
புல்கும்பொழிற்கச்சியேகம்பமேவியபொன்மலையே. (ருரு)

மலைபத்தகத்தியனார்ச்சிக்கமன்னிவடகயிலை
நிலையத்தமரர்தொழவிருந்தானெடுமேருவென்னுஞ்
சிலையத்தன்பைம்பொனமதிற்றிருவேகம்பத்தான்றிகழ்நீ
ரலையத்தடம்பொன்னிசூழ்திருவையாற்றருமணியே. (ருகா)

மணியாரருவித்தடவிமையங்குடகொல்லிகல்லின்
றிணியாரருவியினார்த்தசிராமலையையனங்க
ளணியாரருவிகவர்கிளியோப்புமின்சாரல்விந்தம்
பணிவாரருவினைதீர்க்குமேகம்பர்பருப்பதமே. (ருஎ)

பருப்பதங்கார்தவழ்மந்தரமிந்திரநீலம்வெள்ளை
மருப்பதங்கார்கருங்குன்றியங்கும்பரங்குன்றம்வில்லார்
நெருப்பதங்காகுதிநாறுமகேந்திரமென்றிவற்றி
லிருப்பதங்காவுகர்தான்கச்சியேகம்பத்தெம்மிறையே. (ருஅ)

மிறைத்தார்புரமெய்தவில்லிமைநல்லிமவான்மகட்கு [ன்ற
மறைத்தார்கருங்குன்றம்வெண்குன்றஞ்செங்குன்றமன்னற்கு
நிறைத்தார்நெடுங்குன்றநீள்கழுக்குன்றமென்றீவினைகள்
குறைத்தார்முதுகுன்றமேகம்பர்குன்றென்றுகூறுமினே. (ருகூ)

கூறுமின் றொண்டர்குற்றாலநெய்த்தானந்துருத்தியம்பேர்
தேறுமின் வேள்விக்குடி திருத்தோணிபுரம்பழன
மாறுமின் போல்சடைவைத்தவனூரிடைமருதென்
றேறுமினீரெம்பிரான்கச்சியேகம்பமுன்னினைந்தே. (கூ0)

நினைவார்க்கருளும்பிரான் றிருச்சோற்றுத்துறைநியமம்
புனைவார்சடையோன் புகலூர்புறம்பயம்பூவணநீர்
புனைவார்பொழிற்றிருவெண்காடுபாச்சிலாச்சிராமமென்று
நினைவார்தருநெஞ்சினீர்கச்சியேகம்பநண்ணுமினே. (கூக)

நண்ணிப்பரவுந்திருவாவடுதுறைநல்லநல்லூர்
மண்ணிற்பொலிகடம்பூர்கடம்பந்துறைமன்னுபுன்கூ
ரெண்ணற்கரியபராய்த்துறையேர்கொளெதிர்கொள்பாடி
கண்ணிப்பிறைச்சடையோன்கச்சியேகம்பங்காண்மின்சென்றே

சென்றேறிவிண்ணூறுமண்ணுமலைதிகழ்வல்லமென்பூ
வின்றேறல்பாய்திருமாற்பேறுபாசூரெழிலமுந்தூர்
வன்றேரவன்றிருவிற்பெரும்பேறுமதிலொற்றியூர்
நின்றோர்தருகச்சியேகம்பமேயார்நிலாவியவே. (கூரு)

நிலாவுபுகழ்த்திருவோத்தூர்திருவாமாத்தூர்நிறைநீர்
சுலாவுசடையோன்புலிவலம்வில்வலங்கொச்சைதொண்டர்
குலாவுதிருப்பனங்காடுநன்மாகறல்கூற்றம்வந்தா
லலாவென்றடியார்க்கருள்புரியேகம்பராலயமே. (கூச)

ஆலயங்கார்கருகாவைகச்சூர்திருக்காரிகரை
வேலையங்கேறுதிருவான்மியூர்திருவூறன்மிக்க
சோலையங்கார்திருப்போந்தைமுக்கோணந்தொடர்கடுக்கை
மாலையன்வாழ்திருவாலங்காடேகம்பம்வாழ்த்துமினே. (கூரு)

வாழப்பெரிதெமக்கின்னருள்செய்யுமலர்க்கழலோர்
தாழச்சடைத்திருவேகம்பர்தம்மைத்தொழாதவர்போய்
வாழப்பரற்சுரமாற்றுதளிரடிபூங்குழலெம்
மேழைக்கிடையிருக்குங்குயபாரமியக்குறினே. (கூசா)

ஆறுகின்றவெவ்வழலக்கடமிக்கொடிக்குன்பின்வரப்
பெறுகின்றவண்மையிருலையபேரருளேகம்பனார்
நாறுகின்றமென்மலர்த்தண்பொழிற்கச்சியைச்சூழ்ந்திளைபோர்
ஏறுகின்றநடுங்குவளைக்குறுந்தண்பணையென்றுகொளே. (௬௭)

கொள்ளுங்கடுங்கதிர்கள்ளிதீச்சிலவேயுலறி
விள்ளுநெம்வெடிபரம்பாலையென்பாவைவிடலையின்னே
தெள்ளும்புனற்கச்சியுட்டிருவேகம்பர்சேவடியை
யுள்ளும்மறமறஞ்சாரெனப்போவதுரைப்பரிதே. (௬௮)

பரிப்பருந்திண்மைப்படையாதுகானரெனிற்சிறகு
விரிப்பருந்துக்கிரையாக்கும்வெயயோனஞ்சல்செஞ்சடைமேற்
றரிப்பருந்திண்கங்கையார்திருவேகம்பமன்னபொன்னே
வரிப்பருந்திண்சிலைக்கேயுமராயின்மறைகுவனே. (௬௯)

வனவரிதரிப்புலியின்னதளேகம்பமன்னருளே
யெனவரிதாம்பொன்னனையகென்னனங்கிற்கெனெழிற்கழங்குந்
தனவரிபாதுங்கொடுதெனைப்புல்லியுமிற்பிரிந்த
வினவரிக்கல்லதர்செல்வதெங்கேயொல்குமேழைநெஞ்சே. (௭௦)

நெஞ்சார்தரவின்பஞ்செய்கழலேகம்பர்கச்சியன்னாள்
பஞ்சாரடிவைத்தபாங்கிவையாங்கவள்பெற்றெடுத்த
வெஞ்சார்வொழியத்தன்பின்செலமுன்செல்வெடுவெடென்ற
வஞ்சாவடுதிறற்காளைதன்போக்கிவையந்தத்திலே. (௭௧)

ழலவெங்கானுனையல்லாற்றெருமுஞ்சரணேகம்பனார்
நிலவுஞ்சுடரொளிவெய்யவனேதண்மலர்மிதித்துச்
செலவும்பருக்கைகுளிரத்தளிரடிசெல்சுரத்துன்
றலவுஞ்சதிர்தணிவித்தருள்செய்யுன்னறுதுணைக்கே. (௭௨)

துணையொத்தகோவையும்போலெழிற்பேதையுந்தோன்றலு
முன், னிணையொத்தகொங்கையொடேயொத்தகாதலொடேகின
ரே, டனையத்தரேரொத்தகாளையைக்கண்டனமற்றவரேற், பிணை
யொத்தநோக்குடைப்பெண்ணிவடன்னொடும்பேசுமினே. (௭௩)

மின்னலிக்கும்வணக்கத்திடையாளையுமீளிளையு
மென்னலிப்பாக்கைவந்தெய்திடுவீரெம்மனையிற்கண்டோர்
பின்னரிப்போக்கருங்குன்றுகடந்தவரின்றுகம்பர்
மன்னரிதேர்ந்துதொழுங்கச்சிநாட்டிடைவைகுவரே. (எச)

உவரச்சொல்வேடுடைக்காடுகந்தாடிய வேகம்பனு
ரவுக்கன்போனவிமானத்தையாயிரமுண்மைசுற்றுந்
துவரச்சிகரச்சிவாலயஞ்சூலந்துலங்குவின்மேற்
கவரக்கொடிதிளைக்குங்கச்சிகாணினுங்காமயிலே. (எரு)

கார்மிக்ககண்டத்தெழிற்றிருவேகம்பர்கச்சியின்வா
யேர்மிக்கசேற்றெழினென்னடுவோரொலிபொன்மலைபோற்
போர்மிக்கசெந்நெல்குவிப்போரொலிகருப்பாலையொலி
நீர்மிக்கமாக்கடலின்னொலியேயொக்குநேரிழையே. (எசு)

சேர்ந்தமையாமைவிறற்கொடுவேடர்நெடுஞ்சுரத்தைப்
பார்த்தமையாலிமைநிந்தகண்பொன்னேபகட்டுரிவை
போர்த்தமையாலுமைநோக்கருங்கம்பர்கச்சிப்பொழிலுட்
சேர்த்தமையாலிமைப்போதணிசீதஞ்சிறந்தனவே. (எஎ)

சிறைவண்டுபாடுங்கமலக்கிடங்கிலைசெம்பழுக்காய்
நிறைகொண்டபாளைக்கமுகின்பொழிலிலைதிங்கனியின்
பொறைகொண்டவாழைப்பொதும்பிலைபுன்சடையேகம்பனூர்
நறைகொண்டபூங்கச்சிநாடெங்குமிவ்வண்ணநன்னுதலே. (எஅ)

நன்னுதலார்கருங்கண்ணுஞ்செவ்வாயுமிவ்வாறெனப்போய்
மன்னிதழார்திருநீலமுமாம்பலும்பூப்பவள்ளை
டென்னவெல்லாமொப்புக்காதென்றுவீறிடுமேகம்பனூர்
பொன்னுதலார்விழிடார்கச்சிநாட்டுளிப்பொய்கையுளே. (எகூ)

உள்வார்குளிரிநெருங்கிக்கருங்கிடங்கிட்டநன்னீர்
வள்வாளைகளொடுசெங்கயன்மேய்கின்றவெங்களையாட்
கொள்வார்பிரவிகொடாதவேகம்பர்குளிர்குவளை
கள்வார்தருகச்சிநாட்டெழிலேரிகளப்பரப்பே. (அ0)

பரப்பார்விசும்பிற்படிந்தகருமுகிலன்னநன்னீர்
கரப்பாசிகண்மிகுபண்பொடுசேம்படர்தண்பணைவாய்ச்
சுரப்பாரெருமைமலர்தின்னத்தன்னுகராவொருத்தல்
பொரப்பார்பொலிநுதலாய்செல்வக்கம்பர்தம்பூங்கச்சியே. ()

கச்சார்முலைமலைமங்கைகண்ணாரவெண்ணான்கறமும்
வைச்சார்மகிழ்திருவேகம்பர்தேவிமகிழவிண்ணோர்
விச்சாதரர்தொழுகின்றவிமானமுந்தன்மமரு
வச்சாலையும்பரப்பாங்கணிமாடங்களோங்கினவே. (அஉ)

ஓங்கினவூரகமுள்ளகமும்பருருகிடமாம்
பாங்கினினின்றதரியுறைபாடகந்தெவ்விரிய
வாங்கினவாட்கண்ணிமற்றவர்மைத்துனிவான்கவிக
டாங்கினநாட்டிருந்தாளதுதன்மனையாயிழையே. (அங)

இழையாரரவணியேகம்பர்நெற்றிவிழியின்வந்த
பிழையாவருணம்பிராட்டியத்தின்னபிறங்கலுன்னு
நுழையாவருதிரிசூலத்தனேக்கரும்பொன்கடுக்கைத்
தழையார்பொழிலுதுபொன்னேநமக்குத்தளர்வில்லையே.(அச)

தளராமிகுவெள்ளங்கண்டுமையோடித்தமைத்தழுவக்
கிளையார்வளைக்கைவடுப்படுமீங்கோர்கிறிபடுத்தார்
வளமாப்பொழிற்றிருவேகம்பமற்றதுவந்திறைஞ்சி
யுளராவதுபடைத்தோமடவாயிவ்வுலகத்துள்ளே. (அரு)

உலவியமின்வடம்வீசியுருமதிர்வுண்முழங்கிச்
சலவியமாமதம்பாய்முகில்யானைகள்வானில்வந்தாற்
சுலவியவார்குழல்பின்னரென்பாரிரெனநினைந்து
நிலவியவேகம்பர்கோயிற்கொடியன்னநீர்மையனே. (அசு)

நீரென்னிலுமழுங்கண்முகில்காணெஞ்சமஞ்சலையென்
றூரென்னிலுந்தமராயுரைப்பாரமராவதிக்கு
நேரென்னிலுந்தகுங்கச்சியுளேகம்பர்நீண்மதில்வாய்ச்
சேரென்னிலுந்தங்கும்வாட்கண்ணிதானன்பர்தேர்வரவே. ()

வரங்கொண்டிமையோர்நலங்கொள்ளுமேகம்பர்கச்சியன்
னாய், பரங்கொங்கைதூவன்மிளிர்முத்தமன்பர்தந்தேரின்முன்
னே, தரங்கொண்டுபூக்கொண்டுகொன்றைபொன்னாகத்தண்கா
ந்தள்கொத்தின், கரங்கொண்டுபொற்சுண்ணமேந்தவும்போந்த
னகார்முகிலே. (௮௮)

கார்முகமாரவண்கைக்கொண்டகம்பர்கழற்றொழுது
போர்முகமாப்பகைவெல்லச்சென்றார்நினையார்புணரி
நீர்முகமாகவிருண்டுசுரந்துநேரிழைநா
மார்முகமாகவினைக்கடனீந்துமயர்வுயிர்ப்பே. (௮௯)

உயிராயினவன்பர்தேர்வரக்கேட்டுமுன்வாட்டமுற்ற
பயிரார்புயல்பெற்றதென்னநம்பல்வளைபான்மைகளாந்
தயிரார்பானெய்யொடுமாடியவேகம்பர்தம்மருள்போற்
கையிராவளையழுந்தக்கச்சிறுத்தனகார்மயிலே. (௯0)

கார்விடைவண்ணத்தனன்றேழ்தழுவினுமின்றுதனிப்
போர்விடைபெற்றெதிர்மாண்டாரெனவண்டர்டோதவிட்டார்
தார்விடையேகம்பர்கச்சிப்புறவிடைதம்பொனன்பூண்
மார்விடைவைகல்பெறுவார்தழுவமழவிடையே. (௯௧)

விடைபாய்கொடுமையெண்ணாதுமேலாங்கன்னிவேற்கருங்கட்
கடைபாய்மனத்தினங்காளையர்புல்கொலிகம்பர்கச்சி
மடைபாய்வயலிளமுல்லையின்மான்கன்றொடான்கன்றினங்
கடைபாய்தொறும்பதிமன்றிற்கடல்போற்கலந்தெழுமே. (௯௨)

எழுமலர்த்தண்பொழிலேகம்பர்கச்சியிருங்கடல்வாய்க்
கொழுமணப்புன்னைக்குரவான்மணற்குன்றிற்பாதர்கொம்பே
செழுமலர்ச்சேலல்லவாளல்லவேலல்லநீலமல்ல
முழுமலர்க்கூரம்பிணேரிரண்டாலுமுகத்தனவே. (௯௩)

முகம்பாகம்பண்டமும்பாகமென்றோதியமூதுரையை
யுகம்பார்த்திரேலென்னலமுயரேகம்பர்கச்சிமுன்னீ

ரகம்பாகவரர்வினைளவில்லையென்னின்பவளச்செவ்வாய்
நகம்பாற்பொழிற்பெற்றநாமுற்றவாகொள்கநன்மயலே. (கூச)

மயக்கத்தநல்லிருட்கொல்லுஞ்சுறவொடெறிமகர
மியக்கத்திடுசுழியோதங்கழிகளரக்கழித்தார்
துயக்கத்தவர்க்கருளாக்கம்பர்கச்சிக்கடலர்பொன்னூன்
முயக்கத்தகல்வுபொருள்கொண்கநீர்வருமூர்க்கஞ்சமே. (கூரு)

மேயிரைவைகக்குருகுணராமதுவுண்டுபுன்னை
நீயிரையவண்டோதமர்புக்கடியவிரிகடல்வாய்ப்
பாயிரைநாகங்கொண்டோன்றொழுங்கம்பர்கச்சிப்பவ்வநீர்
தூயிரைகானன்மற்றுராறிவார்நந்துறைவர்பொய்யே. (கூகூ)

பொய்வருநெஞ்சினர்வஞ்சனையாரையும்போகவிடா
மெய்வரும்பேரருளேகம்பர்கச்சிவிரையினவாய்க்
கைவரும்புள்ளொடுசங்கினமார்ப்பநஞ்சேர்ப்பர்திண்டே
ரவ்வருதாமங்களினம்வந்தார்ப்பவணைகின்றதே. (கூஎ)

இன்றுசெய்வோமிதனிற்றிருவேகம்பர்க்கெத்தனையு
நன்றுசெய்வோம்பணிநாளையென்றுள்ளிநெஞ்சேயுடலிற்
சென்றுசெயாரைவிடுந்துணைநாளும்விடாதடிமை
நின்றுசெய்வாரவர்தங்களினீணெறிகாட்டுவரே. (கூஅ)

காட்டிவைத்தார்தம்மையாங்கழிப்பூப்பெய்யக்காதல்வெள்ள
நீட்டிவைத்தார்தொழுமேகம்பரேதமிலாதவெம்மைப்
பூட்டிவைத்தார்தமக்கன்பதுபெற்றுப்பதிற்றுப்பத்துப்
பாட்டிவைத்தார்பரவித்தொழுதாமவர்பாதங்களே. (கூகூ)

பாதம்பரவியொர்பித்துப்பிதற்றிலும்பல்பணியு
மேதம்புகுதாவகையருளேகம்பரேத்தெனவே
போதம்பொருளாற்பொலியாதபுன்சொற்பனுவல்களும்
வேதம்பொலியும்பொருளாமெனக்கொள்வர் மெய்த்தொண்டரே.

திருச்சிற்றம்பலம்.

—oo—

திருச்சிற்றம்பலம்.

பட்டணத்துப்பிள்ளையார்

அருளிச்செய்த

# திருவொற்றியூரொருபாவொருபஃது.

## அகவல்.

இருநிலமடந்தையியல்பினினுடுத்த
பொருகடன்மேகலைமுகமெனப்பொலிந்த
வொற்றிமாநகருடையோயுருவின்
பெற்றியொன்றாகபெற்றோரியாரே
மின்னின்பிறக்கந்துன்னுநின்சடையோ
மன்னியவண்டநின்சென்னியின்வடிவே
பாவகன்பரிதிபனிமதிதன்னொடு
மூவகைச்சுடருநின்னுதனேர்காட்டக்
தண்ணொளியாரந்தாரகணமே
விண்ணவர்முதலாவேறோரிடமாக்
கொண்டுறைவிசும்பேகோலநின்றாக
மெண்டிசைதிண்டோளிருங்கடலுடையே
யணியுடையல்குலவனிமண்டலமே
மணிமுடிப்பாந்தணின்றாளிணைவழக்கே
யொழியாதோடியமாருதமுயிர்ப்பே
வழுவாவோசைமுழுதுநின்வாய்மொழி
வானவர்முதலாமன்னுயிர்பரந்த
வூனமின்ஞானத்தொகுதிநின்னுணர்வே
நெருங்கியவுலகினினீர்மையுநிற்றலுஞ்
சுருங்கலும்விரிதலுந்தோற்றநிற்றொழிலே
யமைத்தலுமழித்தலுமாங்கதன்பெயர்ச்சிய
மிமைத்தலும்விழித்தலுமாகுநின்னியல்பே
யென்றிவைமுதலாவியல்புடைவடிவினோ

டொன்றியதப்புருவிருவகையாகி
முத்திறக்குணத்துநால்வகைப்பிறவி
யத்திறத்தைம்பொறியறுவகைச்சமயமோ
டேழுலகாகியெண்வகைமூர்த்தியோ
டேழியோடேழியெண்ணிறந்தோங்கி
யெவ்வகையளவினிற்கூடிநின்
றவ்வகைப்பொருளுநீயாகியவிடத்தே. (௧)

இடந்துறைமாதரோடிருடம்பென்று
நடத்தினைநள்ளிருணவிற்றினையென்றும்
புலியதளொன்பொடிபுனைந்தோயென்றும்
பலிதிரிவாழ்க்கைபயின்றோயென்று
மருவமுமுருவமுமானாயென்றுந்
திருவமர்மாலொடுதிசைமுகனென்று
முளனேயென்றுமிலனேயென்றுந்
தளரானென்றுந்தளர்வோனென்று
மாதியென்றுமசோகினனென்றும்
போதியிற்பொலிந்தபுராணனென்று
மின்னவைமுதலாத்தாமறியளவையின்
மன்னியநூலின்பன்மையுண்மயங்கிப்
பிணங்குமாந்தர்பெற்றிமைநோக்கி
யணங்கியவவ்வவர்க்கவ்வவையாகியடையப்
பற்றியபளிங்குபோலு
மொற்றிமாநகருடையோயுருவே. (௨)

உருவாமுலகுக்கொருவனாகிய
பெரியோய்வடிவின்பிறிதிங்கின்மையி
னெப்பொருளாயினுமிங்குளதாமெனி
னப்பொருளுனக்கேயவயவமாதலின்
முன்னியமூவெயின்முழங்கெரியூட்டித்
தொன்னீர்வையகந்துயர்கெடச்சூழ்ந்ததும்

வேள்விமூர்த்திதன் றலையினைவிடுத்தது
நீள்விசும்பாளிதன் ருேளினைநெரித்தது
மோங்கியமறையோற்கொருமுகமொழித்ததும்
பூங்கணைவேளைப்பொடிபடவிழித்ததுந்
திறல்கெடவரக்கனைத்திருவிரலூறுத்ததுங்
குறைபடக்கூற்றினைக்குறிப்பினிலடர்த்தது
மென்றிவைமுதலாவாள்வினையெல்லா
நின்றுழிச்செறிந்தநின்செயலாதலி
னுலவாத்தொல்புகழொற்றியூர
பகர்வோர்நினக்குவேறின்மைகண்டவர்
நிகழ்ச்சியினிகழினல்லது
புகழ்ச்சியிற்படுப்பரோபொருளுணர்ந்தோரே. (௩)

பொருளுணர்ந்தோங்கியபூமகன்முதலா
விருடிணையாக்கையிலியங்குமன்னுயி
ருருவினுமுணர்வினுமுயர்வினும்பணியினுந்
திருவினுந்திறலினுஞ்செய்தொழில்வகையினும்
வெவ்வேருகிவினையொடும்பிரியா
தொவ்வாப்பன்மையுண்மற்றவரொழுக்க
மன்னியவேலையுள்வான்றிரைபோல
நின்னிடையெழுந்துநின்னிடையாகியும்
பெருகியுஞ்சுருங்கியும்பெயர்ந்துந்தோன்றியும்
விரவியும்வேருய்நின்றனைவிளக்க
மோவாத்தொல்புகழொற்றியூர
மூவாமேனிமுதல்வநின்னருள்
பெற்றவரறியினல்லது
மற்றவரறிவரோநின்னிடைமயக்கே. (௪)

மயக்கமில்சொன்னீயாயினுமற்றவை
துயக்கநின்றிறமறியாச்சூழலு
முறைவிடமுள்ளமாயினுமற்றது

கறைபடவாங்கேகரந்தகள்ளமுஞ்
செய்வினையுலகினிற்செய்வோரெனினு
மவ்வினைப்பயனீயனுகாவண்மையு
மினத்திடையின்பம்வேண்டிநிற்பணிவோர்
மனத்திடைவாரியாகியவனப்பு
மன்பினடைந்தவர்க்கணிமையுநாடொறு
மென்பினையுருக்குமியற்கையவாதலிற்
கண்டவர்தமக்கேயூனுடலழித
லுண்டெனவுணர்ந்தனமொற்றியூர
மன்னியபெரும்புகழ்மாதவத்
துன்னியசெஞ்சடைத்தூமதியோயே.

தூமதிசடைமிசைசூடுதறாநெறி
யாமதியாளெனவமைத்தவாறே
யறனுருவாகியவானேறூர்த
லிறைவனியானெனவியற்றுமாறே
யதவவளவனெனநின்றமையாக்கும்
பொதுநிலையானெனவுணர்த்தியபொருளே
முக்கணனென்பதுமுத்தீவேள்வியிற்
றொக்கதென்னிடையென்பதோர்சுருக்கே
வேதமான்மறியேந்துதன்மற்றத
னாதநானெனநவிற்றுமாறே
மூவிலையொருதாட்சூலமேந்துதன்
மூவரும்யானெனமொழிந்தவாறே
யெண்வகைமூர்த்தியென்பதிவ்வுலகினி
லுண்மையானெனவுணர்த்தியவாறே
நிலநீர்தீவளியுயர்வானென்று
முலவாத்தொல்புகழுடையோயென்றும்
பொருளுநற்பூதப்படையோயென்றுந்
தெருளநின்றுலகினிற்றெருட்டுமாறே
யீங்கிவைமுதலாவெண்ணரும்வடிவு

மோங்குநின்பெருமையுணர்த்தவுமுணராத்
தற்கொலிமார்தர்தம்மிடைப்பிறந்த
சொற்பொருள்வன்மையிற்சுழலுமாந்தர்
காரியாகியவறுதொழிலாள
ரோதலோவாவொற்றியூர
சிறுவர்தஞ்செய்கையிற்படுந்து
முறுவலித்திருத்திநீமுகப்படுமாலே. (௬)

ஆரவினிலிறந்தபெருமையையடாயினு
மௌன ஞானமகலாதொடுங்கிநின்றனையே
மெ யினையிறந்தமெய்யினையாயினும
வையகமுழுதுநின்வடிவெனப்படுமே
கைவலத்தினைநீயெனினுங்காதல்
செய்வோர்வேண்டுஞ்சிறப்பொழியாயே
சொல்லியவகையாற்றுணையலையாயினு
நல்லுயிர்க்கூட்டநாயகனீயே
மயங்குமுள்ளோயெனினும்வஞ்சனை
தங்கியவவரைச்சாராய்நீயேயஃதான்று
பிறவாயபிறவியைபெருகாப்பெருமை
துறவாத்துறவியைதொடராத்தொடர்ச்சியை
நுகராநுகர்ச்சியைநுணுகாநுணுக்கினை
யகலாவகற்சியையணுகாவணிமையை
செய்யாச்செய்கையைசிறவாச்சிறப்பினை
வெய்யைதண்ணியைவிழுமியைநொய்யை
செய்யைபசியைவெளியைகரியை
யாக்குதியழித்தியானபல்பொரு
ணீக்குதிதொகுத்திநீங்குதியடைதி
யேனையவாகியவெண்ணில்பல்குண
நினைதொறுமயக்குநீர்மையவாதலி
னோங்குகடலுடுத்தவொற்றியூர
வீங்கிதமொழிவார்யாஅர்தாஅஞ்

சொன்னிலைசுருங்கினல்லது
நின்னியலறிவோரியாரிருநிலத்தே.

நிலத்திடைப்பொறையாயவாவினினீண்டு
சொலத்தகுபெருமைத்தூராவாக்கை
மெய்வளியையொடுபித்தொன்றாக
வைவகைநெடுங்காற்றுங்குடனடிப்பா
நரையெனுநுரையேநாடொறும்வெளுப்ப
திரையுடைத்தோலேசெழுந்திரையாகக்
கூடியகுருதிநீருணிறைந்து
மூடியவிருமலோசையின்முழங்கிச்
சுடுபசிவெகுளிச்சுறவினமெறியக்
குடரெனுமரவக்கூட்டம்வந்தொலிப்ப
வூன்றடியெலும்பிருட்டிடலடைத்து
தோன்றியபல்பிணிப்பின்னகஞ்சுழலக்
கால்கையினரம்பேசண்டமாக
மேதகுநிணமேமெய்ச்சாலாக
முழக்குடைத்துளையேமுகங்களாக
வழுக்குடைமூக்காரேருதம்வந்தொலிப்ப
விப்பரிசியற்றியவுடலிருங்கடலுட்
டுப்புரவென்னுஞ்சுழித்தலைப்பட்டுழி
யாவாவென்றுநின்னருளினைப்பெற்றவர்
நாவாயாகியநாதநின்பாத
மூந்திச்சென்றுமுறைமையின்வணங்கிச்
சிந்தைக்கூம்பினைச்செவ்விதினிறுத்தி
யுருகியவார்வப்பாய்விரித்தார்த்துப்
பெருகியநிறைவெனுங்கயிற்றிடைப்பிணித்துத்
துன்னியசுற்றத்தொடர்க்கயிறறுத்து
மன்னியவொருமைப்பொறியினைமுறுக்கிக்
காமப்பாரெனுங்கடுவெளியற்ற
தூமச்சோதிச்சுடர்க்குறிநிறுத்திச்

சுருங்காவுணர்ச்சித்துடுப்பினைத்துழாவி
நெருங்காகவளவினீள்கரையேற்ற
வாங்கயாத்திரைபோக்குதிபோலு
மோங்குகடலுடுத்தவொற்றியூரோயே. (௮)

ஒற்றியூரவுலவாநின்குணம்
பற்றியாரப்பரவுதல்பொருட்டா
லென்னிடைப்பிறந்தவின்றுப்புன்மொழி
நின்னிடையணுகாநீர்மையவாதலி
னுவலித்தழுதவினகன்றவம்மனை
கேவலஞ்செயமையிற்கேளாளாயினும்
பிரித்தற்கரியபெற்றியதாகிக்
குறைவினிலார்த்துங்குழவியதியல்பினை
யறியாதெண்ணிறூழிப்பிறவியின்
மயங்கிக்கண்ணிலார்கண்பெற்றாங்கே
தாயதலைப்படநின்றாளிணைவணக்கம்
வாயதலையறியாமடக்குறும்வினையேன்
மல்கியவின்பத்தோடுடன்கூடிய
வெல்லையிலவாவினிவியற்றியவாகக்
கட்டியநீயேயவிழ்க்கினல்ல
செட்டனையாயினுமியானவிழ்க்கறியேன்
றன்னிடையிருளெனுந்தூற்றிடையொதுங்கி
வெள்ளிடைகாணாவிருப்புறுவினையேன்
றந்தையுந்தாயுஞ்சாதியுமறிவுநஞ்
சிந்தையுந்திருவுஞ்செல்கதித்திறனுந்
துன்பமுந்துறவுந்தூய்மையுமறிவு
மின்பமும்புகழுமிவைபலபிறவுஞ்
சுவையொளியூறோசைநாற்றந்தோற்ற
மென்றிவைமுதலாவிளங்குவவெல்லா
மொன்றநின்னடிக்கேயொருங்குடன்வைத்து
நின்றனன்றமியேனின்னடியல்லது

சாவு மறந்தனமையிற் றளர்ந்தோர் காட்சிச்
சோயிட மதனைக் கதிர்ப்பட நாடி
யெய்துதற் கரியோ யாணினிச்
செய்வனு மறிவன்றோ தெரியுங் காலே. (௩௯)

காலற் சீறிய கழலோய் போற்றி
மூலக் கொழுந்தின் முதல்வ போற்றி
ஒற்றி மாநகருடையோய் போற்றி
முற்றுமாகிய முதல்வ போற்றி
அணைதொறுஞ் சிறக்கும் அமிர்தே போற்றி
பிணைபிரி யில்லாய் ஈச போற்றி
[illegible]ாவந் செய்ய பவளக் கணியோய் போற்றி
தீவினைச் சுவை தகர்ந்தனே போற்றி
வஞ்சனை மாந்தரை மறந்தோய் போற்றி
நஞ்சினை மிடற்றில் நயந்தாய் போற்றி
விரிகடல் வையக விளக்கே போற்றி
புரியுடை யனமாடப் புணர்ந்தோய் போற்றி
காணுமுன் பொருளாகக் கருத்துறை செம்மைக்
காணி யாகிய வரனே போற்றி
வெண்மைத் தண்மையென் றிவை குணமுடைமையிற்
றெண்ணெ றாணொறும் பெயரோய் போற்றி
மேவிய வாதமை வீட்டினிற் படுக்குந்
தீபமாகிய சிவனே போற்றி
மாலோய் போற்றி மறையோய் போற்றி
மேலோய் போற்றி வேதி போற்றி
சந்திர போற்றி கழலோய் போற்றி
இந்திர போற்றி இறைவ போற்றி
அமரா போற்றி அழகா போற்றி
குமரா போற்றி கூத்தா போற்றி
பொருளே போற்றி போற்றி யென்றுனை
நாத்தழும் பிருக்க நவிற்றினல்லால்
தேத்துதற் குரியோர் யாரிருநிலத்தே. (௪௦)

திருச்சிற்றம்பலம்.



உ

திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பி

அருளிச்செய்த

# திருநாரையூர்

# விநாயகர் திருவிரட்டைமணிமாலை.



என்னைநினைந்தடிமைகொண்டென்னிடர்கெடுத்துத்
தன்னைநினையத்தருகின்றான் — புன்னை
விரசுமகிழ்சோலைவியனாரையூர்முக்க
ணரசுமகிழத்திமுகத்தான். (க)

முகத்தாற்கரியனென்றாலுந்தனையேமுயன்றவர்க்கு
மிகத்தான்வெளியனென்றேமெய்மையுன்னும்விரும்படியா
ரகத்தான்றிகழ்திருநாரையூரம்மான்பயந்தவெம்மா
னுகத்தானவனறனுடலம்பிளந்தவொருகொம்பனே. (உ)

கொம்பனையவள்ளிகொழுநன் குறுகாமே
வம்பனையமாங்கனியைநாரையூர் — நம்பனையே
தன்னவலஞ்செயதுகொளுந்தாழ்தடக்கையாயென்னோய்
பின்னவலஞ்செயவதெனோபேசு. (௩)

பேசத்தகாதெனப்பேபெருதும்பெருச்சாளியுமென்
றேசத்தகும்படியேறுவதேயிமையாதமுக்கட்
கூசத்தகுந்தொழிலுங்கையுநுந்தையுநீயுமிந்தத்
தேசத்தவர்தொழுநாரைப்பதியுட்சிவக்களிறே. (௪)

களிறுமுகத்தவனுக்காயஞ்செந்தீயி
னொளிறுமுருக்கொண்டதென்னே — வளறுதொறம்
பின்னாரையூராரலொரும்பெரும்படுகர்
மன்னாரையூரான்மகன். (௫)

மகத்தினின்வானவர்பற்கண்சிரந்தோணெரித்தருளுஞ்
சுகத்தினினீள்பொழினாரைப்பதியுட்சுரன்மகற்கு
முகத்ததுகையதுமூக்கந்தமூக்கதுவளி
னகத்ததுவாயந்தவாயதுபோலுமடுமருப்பே. (௬)

மருப்பையொருகைக்கொண்டுநாரையூர்மன்னும்
பொருப்பையடிபோற்றத்துணிந்தா — னெருப்பை
யருந்தவேண்ணுகின்றவெறும்பன்றேயவ்வா
றருந்தவெண்ணுகின்றமனம். (௭)

மலஞ்செய்தவல்வினைநோக்கியுலகைவலம்வருமப்
புலஞ்செய்தகாட்சிக்குமரற்குமுன்னேபுரிசடையோற்
சலஞ்செய்தநாரைப்பதியரன்றன்னைக்கனிதரவே
வலஞ்செய்துகொண்டமதக்களிறேயுன்னைவாழ்த்துவனே. (௮)

வனஞ்சாயவல்வினைநோய்நீக்கியுவகைத்
தனஞ்சாலத்தருவானன்றே — வினஞ்சாயத்
தேனாரையூர்நம்பர்மகன்றிண்டோணெரித்தருளு
நாரையூர்நம்பர்மகனும். (௯)

நாரணன்முன்பணிந்தேத்தநின்றெல்லைநடாவியவத்
தேரணையுந்திருநாரையூர்மன்னுசிவன்மகனே
காரணனேயெங்கணபதியேநற்கரிவதனா
வாரணநுண்பொருளேயென்பவர்க்கில்லையல்லல்களே. (௧0)

அல்லல்களைந்தான்றனம்பொனுலகத்தி
னெல்லைபுகுவிப்பானீண்டுழவா — னெல்லல்களா
செங்கழுநீர்கட்குந்திருநாரையூர்ச்சிவன்சேய
கொங்கெழுதாரைங்கரத்தகோ. (௧௧)

கோவிற்கொடியநமன்றமர்கூடாவகைவிடுவன்
காவிற்றிகழ்திருநாரைப்பதியிற்கரும்பனைக்கை
மேவற்கரியவிருமதத்தொற்றைமருப்பின்முக்க
ணேவிற்புருவத்திமையவன்றன்பெற்றயானையையே. (௧௨)

யானேத்தியவெண்பாவென்னைநினைந்தடிமை
தானேசனார்த்தனற்குநல்கினான்—றேனே
தொடுத்தபொழினாரையூர்ச்சூலம்வலனேந்தி
யெடுத்தமதமுகத்தவேறு. (கங)

எறியசீர்வீரணக்குடியேர்திழைக்கும்பிருந்தே
நாறியபூந்தார்க்குமரற்குமுன்னினைநண்ணலரைச்
சீறியவெம்பணைச்சிங்கத்தினுக்கிளையானைவென்றோர்
வேறியல்வாற்றொழுநாரைப்பதியுள்விநாயகனே. (கச)

கனமதில்சூழ்நாரையூர்மேவிச்கசிந்தார்
மனமருவினான்பயந்தவாய்ந்த—சினமருவு
கூசாரம்பூண்டமுகக்குஞ்சரக்கன்றென்றார்க்கு
மாசாரமோசொல்லுவான். (கரு)

வானிற்பிறந்தமதிதவழும்பொழின்மாட்டளிகுழ்
தேனிற்பிறந்தமலர்த்திருநாரைப்பதிதிகழுங்
கோனிற்பிறந்தகணபதிதன்னைக்குலமலையின்
மானிற்பிறந்தகளிறென்றுரைப்பரிவ்வையகத்தே (கசு)

வையகத்தாரேத்தமதினாரையூர்மகிழ்ந்து
பொய்யகத்தாருள்ளம்புகலொழிந்து—கையகத்தோர்
மாங்கனிதன்கொம்பண்டம்பாசமழுமல்குவித்தா
னாங்கனிநஞ்சிந்தையமர்வான். (கஎ)

அமராவமரர்தொழுஞ்சரணாரைப்பதியமர்ந்த
குமராகுமரற்குமுன்னவனேகொடித்தேரவுணர்
தமராசறுத்தவன்றன்னுழைத்தோன்றினனேயெனநின்
றமராமனத்தவராழ்நரகத்திலழுந்துவரே. (கஅ)

அவமதியாதுள்ளமேயல்லலறநல்ல
தவமதியாலேத்திச்சதுர்த்தோ—நவமதியாங்
கொம்பன்விநாயகன்கொங்கார்பொழில்சூழ்நாரையூர்
நம்பன்சிறுவன்சீர்நாம். (ககூ)

நாந்தனமாமனமேத்துகண்டாயென்றுநாண்மலராற்
ருந்தனமாகவிருந்தனனுரைப்பதிதன்னுளே
சேர்ந்தனனையைந்துசெங்கையனேநின்றிரண்மருப்பை
யேந்தினனேயென்னையாண்டவனேயெனக்கென்னையனே. ()

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பி

அருளிச்செய்த

# கோயிற்றிருப்பண்ணியர்விருத்தம்.



நெஞ்சந்திருவடிக்கீழ்வைத்துநீண்மலர்க்கண்பனிப்ப
வஞ்சங்கடிந்துன்னைவந்தித்திலேனன்றுவானருய்ய
நஞ்சங்கருந்துபெருந்தகையேநல்லதில்லைநின்ற
வஞ்செம்பவளவண்ணவருட்கியானினியாரென்பரே. (க)

என்புந்தழுவியவூனுநெகவகமேயெழுந்த
வன்பின்வழிவந்தவாரமிர்தேயடியேனுரைத்த
வன்புன்மொழிகள்பொறுத்திகொலாம்வளர்தில்லைதன்னுண்
மின்புன்மிளிர்சடைவீசிநின்றாடியவிண்ணவனே. (உ)

அவநெறிக்கேவிழப்புக்கவிந்நானமுந்தாஉமவாங்கித்
தவநெறிக்கேயிட்டதத்துவனேயத்தவப்பயனுஞ்
சிவநெறிக்கேயென்னையுய்ப்பவனேசெனனத்தொறுஞ்செய்
பவமறுத்தாள்வதற்கோதில்லைநட்டம்பயில்கின்றதே. (ங)

பயில்கின்றிலேனின்றிறத்திருநாமம்பணிமலர்த்தார்
முயல்கின்றிலேனுன்றிருவடிக்கேயப்பமுன்னுதில்லை
யியல்கின்றநாடகச்சிற்றம்பலத்துளெந்தாயிங்கனே
யயர்கின்றனாளெங்ஙனேபெறுமாறுநின்னருளே. (ச)

அருதிக்குவிம்மிநிவந்ததோவெள்ளிக்குவடதன்சு
பருதிக்குழவியுமிழ்கின்றதேயொக்கும்பற்றுவிட்டோர்
கருதித்தொழுகழற்பாதமுங்கைத்தலநான்குமெய்த்த
சுருதிப்பதமுழங்குந்தில்லைமேயசுடரினுக்கே. (௫)

சுடலைப்பொடியும்படுதலைமாலையுஞ்சூழ்ந்தவென்பு
மடலைப்பொலிமலர்மாலைமென்றோண்மேன்மயிர்க்கயிறு
மடலைப்பொலியயின்மூவிலைவேலுமணிகொடில்லை
விடலைக்கென்னாணைச்சழகிதுவேதவிரோதத்தையே. (௬)

வேதமுதல்வன்றலையுந்தலையாயவேள்விதன்னு
ளாதனவனெச்சன்றலையுந்தக்கனார்தலையுங்
காதியதில்லைச்சிற்றம்பலத்தான்கழல்சூழ்ந்துநின்று
மாதவரென்றுமறைமொழியாலேவழுத்துவதே. (௭)

வழுத்தியசீர்த்திருமாலுலகுண்டுவன்பாம்புதன்னின்
கழுத்தருகேதுயின்றானுக்கப்பாந்தளைக்கங்கணமாச்
செழுந்திரணீர்த்திருச்சிற்றம்பலத்தான்றிருக்கையிட
வழுத்தியகல்லொத்தனனாயனாகியமாயவனே. (௮)

மாயவன்முந்நீர்த்துயின்றவனன்றுமருதிடையே
போயவன்காணாதபூங்கழனல்லபுலத்தினர்நெஞ்
சேயவன்சிற்றம்பலத்தானின்றாடுங்கழலெவர்க்குந்
தாயவன்றன்பொற்கழலென்றலைமறைநன்னிழலே. (௯)

நிழல்படுபூணெடுமாலயன்காணாமைநீண்டவரே
தழல்படுபொன்னகலேந்தித்தமருகந்தாடித்தமைத்
தெழில்படவீசிக்கரமெறிநீர்த்தில்லையம்பலத்தே
குழல்படுசொல்வழிபாடுவர்யாவர்க்குங்கூத்தினையே. (௧௦)

கூத்தனென்றுந்தில்லைவாணனென்றுங்குழுமிட்டிமையோ
ரேத்தனென்றுஞ்செவிமாட்டிசையாதேயிடுசுணங்கை
மூத்தவன்பெண்டீர்குணலையிட்டாலுமுகினிறத்த
சாத்தனென்றாலும்வருமோவிவளுக்குத்தண்ணெனவே. (௧௧)

தண்ணார்புனற்றில்லைச்சிற்றம்பலந்தன்னின்மன்னிநின்ற
விண்ணாளனைக்கண்டநாள்விருப்பாயென்னுடன்முழுதுங்
கண்ணாங்கிலோதொழக்கையாங்கிலோதிருநாமங்கள்கற்
றெண்ணும்பரிசெங்கும்வாயாங்கிலோவெனக்கிப்பிறப்பே. ()

பிறவியிற்பெற்றபயனொன்றுகண்டிலம்பேரொலிநீர்
நறவிபல்பூம்பொழிற்றில்லையுணாடகமாடுகின்ற
துறவிடற்சோதியைச்சுந்தரக்கூத்தனைத்தொண்டர்தொண்ட
முறவிடல்வாற்கண்கள்கண்டுகண்டின்பத்தையுண்டிடவே. ()

உண்டேனவரருளாரமிர்த்தினைப்புண்டலுமே
கண்டேனெடுத்தகழாலுங்கனலுங்கவித்தகையு
கொண்டேன்மொழியினைநோக்கியநோக்குமொளிநகையும்
வண்டேன்மலர்த்தில்லையம்பலத்தாடுமணியினையே. (கச)

மணியொப்பனதிருமான்மருட்டுமலர்க்கமலத்
தணியொப்பனவவன்றன்முடிமேலடியேனிடர்க்குந்
தணிடச்சமைந்தநல்லீர்வாளனையனசூழ்பொழில்க
ணணிடத்திகழ்தில்லையம்பலத்தான்றன்றிருந்தடியே. (கரு)

அடியிட்டகண்ணினுக்கோவவனன்பினுக்கோவுணர
செடியிட்டவான்றுயர்சேர்வதற்கோதில்லையம்பலத்து
முடியிட்டகொன்றைநன்முக்கட்பிரானன்றுமூவுலகு
மடியிட்டகண்ணனுக்கீந்ததுவாய்ந்தவரும்படையே. (க௬)

படைபடுகண்ணிதன்பங்கதென்றில்லைப்பரம்பரவல்
விடைபடுகேதுகவிண்ணப்பங்கேளென்விதிவசத்தாற்
கடைபடுசாதிபிறக்கினுநீவைத்தருளுசண்டாய்
நடைபடுகிங்கிணித்தாட்செய்யபாதமென்னுள்புகவே. (கஎ)

புகவுகிர்வாளெயிற்றுணிலங்கீண்டுபொறிகலங்கி
மிகவுகுமாற்கரும்பாதத்தனேல்வியன்றில்லைதன்னு
ளகவுகுலாமதிக்கண்ணிடற்கங்கணனென்றனன்றுந்
தகவுகொலாந்தகவன்றுகொலாமென்றுசங்கிப்பனே. (கஅ)

சங்கோர்கரத்தன்மகன்றக்கன்றானவர்நான்முகத்தோன்
செங்கோலவிந்திரன்றோடலையூர்வேள்விசீருடல
மங்கோலவெவ்வழலாயிட்டழிந்தெரிந்தற்றனவா
லெங்கோனெழிற்றில்லைக்கூத்தன்கடைக்கண்சிவந்திடவே. ()

ஏவுசெய்மேருத்தடக்கையெழிற்றில்லையம்பலத்து
மேவுசெய்மேனிப்பிரானன்றியங்கணர்மிக்குளரே
காவுசெய்காளத்திக்கண்ணுதல்வேண்டும்வரங்கொடுத்துத்
தேவுசெய்வான்வாய்ப்புனலாட்டியதிறல்வேடுவனே. (௨௦)

வேடனென்றாள்வில்விசயற்குவெங்கணையன்றளித்த
கோடனென்றாள்குழைக்காதனென்றாளிடக்காதிலிட்ட
தோடனென்றாடொருசீர்த்தில்லையம்பலத்தாடுகின்ற
சேடனென்றாண்மங்கையங்கைச்சரிவளைசிந்தினவே. (௨௧)

சிந்திக்கவுரைபாடவுஞ்செம்மலராற்கழல்கள்
வந்திக்கவுமனம்வாய்கரமென்னும்வழிகள்பெற்றுஞ்
சந்திக்கிலர்சிலர்தெண்ணர்தஞ்ஞர்தில்லையம்பலத்து
ளந்திக்கமர்திருமேனியெம்மான்றனருள்பெறவே. (௨௨)

அருடருசீர்த்தில்லையம்பலத்தான்றனருளினன்றிப்
பொருடருவானத்தரசாதலிற்புழுவாதனன்றாஞ்
சுருடருசெஞ்சடையோனருளேற்றுறவிக்குநன்று
மிருடருகீழேழ்நரகத்துவீழுமிருஞ்சிறையே. (௨௩)

சிறைப்புளவாம்புனல்சூழ்வயற்றில்லைச்சிற்றம்பலத்துப்
பிறைப்பிளவார்சடையோன்றிருநாமங்களேபிதற்ற
மிறைப்புளவாகிவெண்ணீறணிந்தோடேந்தும்வித்தகர்தம்
முறைப்புளவோவயன்மாலினொடும்பர்தநாயகற்கே. (௨௪)

அகழ்சூழ்மதிற்றில்லையம்பலக்கூத்தவடியமிட்ட
முகிழ்சூழிலையுமுகைகளுமேயுங்கொல்கற்பகத்தின்
றிகழ்சூழ்மலர்மழைதூவித்திறம்பயில்சிந்தையராய்ப்
புகழ்சூழிமையவர்போற்றித்தொழுநின்பூங்கழற்கே. (௨௫)

பூந்தண்பொழில்சூழ்புலியூர்ப்பொலிசெம்பொனம்பலத்து
வேந்தன்றனக்கன்றியாட்செய்வதென்னேவிரிதுணிமே
லாந்தண்பழையவலிழையன்பாகியபண்டைப்பறைச்
சேந்தன்கொடுக்கவதுவுந்திருவமிர்தாகியதே. (உசு)

ஆகங்கனகனைக்கீறியகோளரிக்கஞ்சிவிண்ணோர்
பாகங்கனங்குழையாயருளாயெனத்தில்லைப்பிரான்
வேகந்தருஞ்சிம்புள்விட்டரிவெங்கதஞ்செற்றிலனேன்
மோகங்கலந்தன்றுலந்தநன்றேவிந்தமூவுலகே. (உஎ)

மூவுலகத்தவரேத்தித்தொழுதில்லைமுக்கட்பிராற்
கேவுதொழிற்செய்யப்பெற்றவர்யாரெனிலேர்விடையாய்த்
தாவுதொழிற்பட்டெடுத்தனன்மாலயன்சாரதியா
மேவிரதத்தொடுபூண்டதொன்மாமிக்கவேதங்களே. (உஅ)

வேதகச்சிந்தைவிரும்பியவன்றில்லையம்பலத்து
மேதகக்கோயில்கொண்டோன்சேயவன்வீரணக்குடிவாய்ப்
போதகப்போர்வைப்பொறிவாளரவரைப்பொங்குசினச்
சாதகப்பெண்பிள்ளைதன்னையன்றந்ததலைமகனே. (உகூ)

தலையவன்பின்னவன்றாய்தந்தையிந்தத்தராதலத்து
நிலையவநீக்குதொழில்புரிந்தோனடுவாகிநின்ற
கொலையவன்சூலப்படையவனலத்தெழுகொழுந்தி
னிலையவன்காண்டற்கருந்தில்லையம்பலத்துள்ளிறையே. (௩௦)

இறையுந்தெளிகிலர்கண்டுமெழிற்றில்லையம்பலத்து
ளுறையும்புனற்சென்னியோனருளாலன்றடுகரிமே
னிறையும்புகழ்த்திருவாரூரனுநிறைதார்ப்பரிமே
லறையுங்கமழ்தொங்கல்வில்லவனும்புக்கநல்வழியே. (௩௧)

நல்வழிநின்றார்பகைநன்றுநொய்யருறவிலென்னுஞ்
சொல்வழிகண்டனம்யாந்தொகுசீர்த்தில்லையம்பலத்து
வில்வழிதானவரூரெரித்தோன்வியன்சாக்கியனார்
கல்வழிநேர்நின்றளித்தனன்காண்கசிவகதியே. (௩௨)

கதியேயடியவரெய்ப்பினில்வைப்பாக்கருதிவைத்த
நிதியேநிமிர்புன்சடையமிர்தேநின்னையென்னுள்வைத்த
மதியேவளர்தில்லையம்பலத்தாய்மகிழ்மாமலையாள்
பதியேபொறுத்தருளாய்கொடியேன்செய்தபல்பிழையே. (௩௩)

பிழையாயினவேபெருக்கிநின்பெய்கழற்கன்புதன்னி
னுழையாதசிந்தையினேனையுமந்தாகினித்துவலை
முழையார்தருதலைமாலைமுடித்தமுழுமுதலே
புழையார்கரியுரித்தோன்றில்லைநாதபொறுத்தருளே. (௩௪)

பொறுத்திலனேனும்பன்னஞ்சினைப்பொங்கெரிவெங்கதத்தைச்
செறுத்திலனேனுநந்தில்லைப்பிரானத்திரிபுரங்கள்
கறுத்திலனேனுங்கமலத்தயன்கதிர்மாமுடியை
யறுத்திலனேனுமமரருக்கென்கொலடுப்பனவே. (௩௫)

அடுக்கியசீலையராயகலேந்தித்தசையெலும்பி
லொடுக்கியமேனியொடுணிரப்பாரொள்ளிரணியனை
நடுக்கியமாநரசிங்கனைச்சிம்புளதாய்நரல
விடுக்கியபாதன்றன்றில்லைதொழாவிட்டவேழையரே. (௩௬)

ஏழையென்புன்மைகருதாதிடையறுவன்பெனக்கு
வாழிநின்பாதமலர்க்கேமருவவருளுகண்டாய்
மாழைமென்னோக்கிதன்பங்கவளர்தில்லையம்பலத்துப்
போழிளந்திங்கள்சடைமுடிமேல்வைத்தபுண்ணியனே. (௩௭)

புண்ணியனேயென்றுபோற்றிசெயாதுபுலன்வழியே
நண்ணியனேற்கினியாதுகொலாம்புகலென்னுள்வந்திட்
டண்ணியனேதில்லையம்பலவாவலர்திங்கள்வைத்த
கண்ணியனேசெய்யகாமன்வெருப்பக்கறுத்தவனே. (௩௮)

கறுத்தகண்டாவண்டவாணுவருபுனற்கங்கைசடை
செறுத்தசிந்தாமணியேதில்லையாயென்னைத்திவினைக
ளொறுத்தல்கண்டாற்சிரியாரோபிறரென்னுறுதுயரை
யறுத்தல்செய்யாவிடினார்க்கோவருஞ்சொலரும்பழியே. (௩௯)

பழித்தக்கவுமிகழான்றில்லையான்பண்டுவேட்டுவனும்
பழித்திட்டிறைச்சிகலையனளித்தவிருக்குழங்கன்
மொழித்தங்கசிரதிபத்தன்படுத்திட்டமீன்முழுது
மிழித்தக்கவென்றுதமிர்துசெய்தானென்றியம்புவரே. (ச0)

வரந்தருமாறிதன்மேலுமுண்டோவயற்றில்லைதன்னுட்
புரந்தரன்மாறொழுநின்றபிரான்புலைப்பொய்ம்மையிலே
நிரந்தரமாய்நின்றவென்னையுமெம்மையிற்றன்னடியார்
தரந்தருவான்செல்வத்தாழ்ந்தினன்பேசருந்தன்மையிதே. (சக)

தன்றாடரித்தாரியாவர்க்குமீளாவழிதருவான்
குன்றாமதிற்றில்லைமூதூர்க்கொடிமேல்விடையுடையோன்
மன்றாடவும்பின்னுமற்றவன்பாதம்வணங்கியங்கே
யொன்றாரிரண்டில்விழுவரந்தோசிலவூமர்களே. (ச௨)

களைகணிலாமையுந்தன்பொற்கழலிணையாதன்மையுந்
துளைகணிலாமுகக்கைக்கரிப்போர்வைச்சுரனிலையான்
றளைகணிலாமலர்க்கொன்றையன்றண்புலியூரதென்றேன்
வளைகணிலாமைவணங்குமநங்கன்வரிசிலையே. (ச௩)

வரித்தடந்திண்சிலைமன்மதனுதலுமாழிவட்டந்
தரித்தவன்றன்மகனென்பதோர்பொற்புந்தவநெறிக
டெரித்தவன்றில்லையுட்சிற்றம்பலவன்றிருப்புருவ
நெரித்தலுங்கண்டதுவெண்பொடியேயன்றிநின்றிலவே. (சச)

நின்றிலவேவிசயன்றொடுஞ்சிந்தைசளிப்புறநீ
டென்றில்லைமாநடமாடும்பிரான்றன்றிருமலைமேற்
றன்றலையானடந்தேறிச்சரங்கொண்டிழிந்ததென்பர்
கன்றினையேவிளமேலெறிந்தார்க்கரியவனே. (ச௫)

சருப்புருவத்திருவார்த்தைகள்கேட்டலுங்கண்பனியேன்
விருப்புருவத்தினொடுள்ளமுருகேன்விதிர்விதிரே
னிருப்புருவச்சிந்தையென்னைவந்தாண்டதுமெவ்வணமோ
பொருப்புருவப்புரிசைத்தில்லையாடல்புரிந்தவனே. (ச௬)

புரிந்தவன்பின்றியும்பொய்ம்மையிலேயுந்திசைவழியே
விரிந்தகங்கைம்மலர்சென்னியிற்கூப்பில்வியாநமனூர்
பரிந்தவனூர்புகலில்லைபதிமூன்றெரியவம்பு
தெரிந்தவெங்கோன்றன்றிரைபார்புனல்வயற்சேண்டில்லையே.

சேண்டில்லைமாநகர்த்திப்பியக்கூத்தனைக்கண்டுமன்பு
பூண்டிலைநின்னைமறந்திலையாங்கவன்பூங்கழற்கே
மாண்டிலையின்னம்புலன்வழியேவந்துவாழ்ந்திடுவான்
மீண்டனையென்னையென்செய்திடவோசிந்தைநீவிளம்பே. (௪௮)

விளைவைத்தளர்வித்தவிண்டுவுந்தாமரைமேலயனு
மளவிற்கறியாவகைநின்றவன்றுமடுக்கல்பெற்ற
தளர்விற்றிருநகையாளுநின்பாகங்கொறண்புலியூர்க்
களவிற்கனிபுரையுங்கள்ளவார்சடைக்கங்கையனே. (௪௯)

கங்கைவலமிடம்பூவலங்குண்டலந்தோடிடப்பாற்
றங்குங்கரம்வலம்வெம்மழுவீயிடம்பாந்தள்வலஞ்
சங்கமிடம்வலந்தோலிடமாடைவலமக்கிட
மங்கஞ்சரியம்பலவன்வலங்காணிடமணங்கே. (௫0)

அணங்காடகக்குன்றமாதறவாட்டியவாலமர்த்தாட்
கிணங்காயவன்றில்லையெல்லைமிதித்தலுமென்புருகா
வணங்காவழுத்தாவிழாவெழும்பாவைத்தவாமதர்த்த
குணங்காணிவளென்னவென்றுகொலாம்வந்துகூடுவதே. (௫௧)

கூடுவதம்பலக்கூத்தனடியார்குழுவுதொறுந்
தேடுவதாங்கவர்க்கமச்செவ்வழியவ்வழியே
போடுவதுள்ளத்திருத்துவதொண்சுடரைப்பிறவி
வீடுவதாகநினையவல்லோர்செய்யும்வித்தகமே. (௫௨)

வித்தகச்செஞ்சடைவெண்மதிக்கார்நிறக்கண்டத்தெண்டோண்
மத்தகக்கைம்மலைப்போர்வைமதிற்றில்லைமன்னனைத்தஞ்
சித்தகக்கோயிலிருத்துந்திறத்தாகமிகார்க்கல்லாற்
புத்தகப்பேய்களுக்கெங்கித்ததோவரன்பொன்னடியே. (௫௩)

பொன்னம்பலத்துறைபுண்ணியனென்பர்புயன்மறந்த
கன்னன்மைதிரப்புனிற்றுக்கலிக்காமற்கன்றுபுன்கூர்
மன்னுமழைபொழிந்திரறுவேலிகொண்டாங்கவற்கே
பின்னும்பிழைதவிர்ந்திரறுவேலிகொள்பிஞ்ஞகனே. (நிச)

நேசனல்லேனினையேன்வினைதீர்க்குந்திருவடிக்கீழ்
வாசநன்மாமலரிட்டிறைஞ்சேனென்றன்வாயதனாற்
றேசனென்னேனைபொன்னார்திருச்சிற்றம்பலநிலவு
மீசனென்னேன்பிறப்பென்னாய்க்கழியுங்கொலென்றனக்கே. ()

தனந்தலைசக்கரம்வானத்தலைமைகுபேரன்றக்கன்
வனந்தலையேறடர்த்தோன்வாசவனுயிர்பல்லுடலூர்
சினந்தலைகாலன்பகல்காமன்றனவர்தில்லைவிண்ணோ
ரினந்தலைவன்னருளான்முனிவாற்பெற்றிகந்தவரே. (நிசு)

அவமதித்தாழ்நரகத்திலிடப்படுமாதர்களுந்
தவமதித்தொப்பிலரென்னவிண்ணோருந்தகைமையரு
நவநிதித்தில்லையுட்சிற்றம்பலத்துநடம்பயிலுஞ்
சிவநிதிக்கேநினையாருநினைந்திட்டசெல்வருமே. (நிஎ)

வருவாசகத்தினின்முற்றுணர்ந்தோனைவண்டில்லைமன்னைத்
திருவாதவூர்ச்சிவபாத்தியன்செய்திருச்சிற்றம்பலப்
பொருளார்தருதிருக்கோவைகண்டேயுமற்றப்பொருளைத்
தெருளாதவுள்ளத்தவர்கவிபாடிச்சிரிப்பிப்பரே. (நிஅ)

சிரித்திட்டசெம்பவளத்தின்றிரளுஞ்செழுஞ்சடைமேல்
விரித்திட்டபைங்கதிர்த்திங்களும்வெங்கதப்பாந்தளுந்தீத்
தரித்திட்டவங்கையுஞ்சங்கச்சுருளுமென்னெஞ்சினுள்ளே
தெரித்திட்டவாதில்லைச்சிற்றம்பலத்துத்திருநடனே. (நிகூ)

நடஞ்செய்சிற்றம்பலத்தான்முனிவென்செய்யுங்காமனன்று
கொடுஞ்சினத்தீவிழித்தாற்குக்குளிர்ந்தனன்விற்கொடும்பூண்
விடுஞ்சினத்தானவர்வெந்திலர்வெய்தெனவெங்கதத்தை
யொடுங்கியகாலனந்நாணின்றுதையுணவிட்டனனே. (கூ0)

விட்டங்கொளிமணிப்பூண்டிகழ்வன்மதன்மெய்யுரைக்கி
லிட்டங்கரியனல்லானல்லனம்பலத்தெம்பரன்மேற்
கட்டங்கியகணையெய்தலுந்தன்னைப்பொன்னார்முடிமேற்
புட்டங்கினான்மகனுமென்றுபார்க்கபொடிந்தனனே. (௬௧)

பொடியேர்தருமேனியனாகியபூசல்புகவடிக்கே
கடிசேர்கணைகுளிப்பக்கண்டுகோயிற்சருவியில்லா
வடியேபடவமையுங்கணையென்றவரகுணன்றன்
முடியேதருகழலம்பலத்தாடிதன்மொய்கழலே. (௬௨)

கழலும்பசுபாசராமிமையோர்தங்கழல்பணிந்திட்
டழலுமிருக்குந்தருக்குடையோரிடப்பால்வலப்பாற்
றழலுந்தபருகமும்பிடித்தாடிசிற்றம்பலத்தைச்
சுழலுமொருகாலிருகால்வரவல்லதோன்றல்களே. (௬௩)

தோன்றலைவெண்மதிதாங்கியைத்துள்ளியமாலயற்குத்
தான்றலைபாதங்கள்சார்வரியோன்றன்னைச்சார்ந்தவர்க்குத்
தேன்றலையான்பாலதுகலந்தாலன்னசீரனைச்சீர்
வான்றலைநாதனைக்காண்பதென்றோதில்லைமன்றிடையே. (௬௪)

மன்றங்கமர்திருச்சிற்றம்பலவவடவனத்து
மின்றங்கிடைக்குந்நிநாடகமாடக்கொல்வெண்டரங்கந்
துன்றங்கிளர்கங்கையானைசுடுசினத்தீயரவக்
கன்றங்கடைசடைமேலடையாவிட்டகைதவமே. (௬௫)

தவனைத்தவத்தவர்க்கன்பனைத்தன்னடியெற்குதவுஞ்
சிவனைச்சிவக்கத்திரிபுரத்தைச்சிவந்தானைச்செய்ய
வவனைத்தவளத்திருநீறனைப்பெருநீர்கரந்த
பவனைப்பணியுமினும்பண்டைவல்வினைபற்றறவே. (௬௬)

பற்றறமுப்புரம்வெந்ததுபைம்பொழிற்றில்லைதன்னுட்
செற்றருமாமணிக்கோயிலினின்றதுதேவர்கணஞ்
சுற்றருநின்புகழேத்தித்திரிவதுசூழ்சடையோய்
புற்றரவாட்டித்திரியுமதுவொருபுல்லனவே. (௬௭)

புல்லறிவின்மற்றைத்தேவரும்பூம்புலியூருணின்ற
வல்லெறிமாமதிக்கண்ணியனைப்போலருளுவரே
கல்லெறிந்தானுந்தன்வாய்நீர்கதிர்முடிமேலுகுத்த
நல்லறிவாளனுமீளாவழிசென்றுநண்ணினரே. (௬௮)

நண்ணியதீவினைநாசஞ்செலுத்திநமனுலகத்
தெண்ணினைநீக்கியிமையோருலகத்திருக்கலுற்றீர்
பெண்ணினொர்பாகத்தன்சிற்றம்பலத்துப்பெருநடனைக்
கண்ணிணையார்தரக்கண்டுகையாரத்தொழுமின்களே. (௬௯)

கைச்செல்வமெய்திடலாமென்றுபின் சென்றுகண்குழித்தல்.
பொய்ச்செல்வர்செய்திடும் புன்மைகட்கேயென்றும் பொன்ற
லில்லா, வச்செல்வமெய்திட வேண்டுதியேதில்லை யம்பலத்து,
ளிச்செல்வன்பாதங்கருதிரந்தேனுன்னையென்னெஞ்சமே. (௭௰)

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பி

அருளிச்செய்த

# திருத்தொண்டர்திருவந்தாதி.



பொன்னிவடகரைசேர்நாரையூரிற்புழைக்கைமுக
மன்னனறுபத்துமூவர்பதிதேமரபுசெயல்
பன்னவத்தொண்டத்தொகைவகைபல்குமந்தாதிதனைச்
சொன்னமறைக்குலநம்பிபொற்பாதத்துணைதுணையே.

## தில்லைவாழந்தணர்.

செப்பத்தகுபுகழ்த்தில்லைப்பதியிற்செழுமறையோ
ரொப்பப்புவனங்கண்மூன்றினுமும்பரூரெரிக்க
உப்பர்க்கமுதத்திருநடர்க்கந்திப்பிறையணிந்த
துப்பர்க்குரிமைத்தொழில்புரிவோர்தமைச்சொல்லுதுமே. (௧)

## திருநீலகண்டக்குயவநாயனர்.

சொல்லச்சிவன்றிருவாணைதன்றூமொழிதோணசையை
யொல்லைத்துறந்துருமூத்ததற்பின்னுமைகோனருளால்
வில்லைப்புரைநுதலாளொடிளமைபெற்றின்பமிக்கான்
றில்லைந்திருநீலகண்டக்குயவனாஞ்செய்தவனே. (௨)

## இயற்பகைநாயனர்.

செய்தவர்வேண்டியதியாதுங்கொடுப்பச்சிவன்றவனுக்
கைதவம்பேசிநின்காதலியையீதருகென்றலுமே
மைதிகழ்சண்ணிடைவீழ்ந்தவன்வாயர்தபெரும்புகழ்வந்
தெய்திடகாவிரிப்பூம்பட்டினத்துளியற்பகையே. (௩)

## இளையான்குடிமாறநாயனர்.

இயலாவிடைச்சென்றமாதவற்கின்னமுதாவிதைத்த
வயலார்முளைவித்துவாரிமனையலக்கால்வறுத்துச்
செயலார்பயிர்விழுத்திங்கறியாக்குமவன்செழுநீர்க்
கயலாரிளையான்குடியுடைமாறனெங்கற்பகமே. (௪)

## மெய்ப்பொருணயனர்.

சற்றநன்மெய்த்தவன்போலொருபொய்த்தவன்காயசினத்தாற்
செற்றவன்றன்னையவனைச்செறப்புகலுந்திருவாய
மற்றவன்றத்தாநமரேயெனச்சொல்லிவானுலகம்
பெற்றவன்சேதிபன்மெய்ப்பொருளாமென்றுபேசுவரே. (௫)

## விறன்மிண்டநாயனார்.

பேசும்பெருமையவ்வாரூரனையும்பிரானவனு
மீசன்றனையும்புறகுதட்டென்றவனீசனுக்கே
நேசனெனக்கும்பிரான்மனைக்கேபுகநீடுதென்றல்
வீசும்பொழிற்றிருச்செங்குன்றமேயவிறன்மிண்டனே. (௬)

## அமர்நீதிநாயனார்.

மீண்டும்பொழிற்பழையாறையமர்நீதிவெண்பொடியின்
முண்டந்தரித்தபிராற்குநல்லூரின்முன்கோவணநேர்
கொண்டிங்கருளெனவாதன்பெருஞ்செல்வமுந்தனையுந்தன்
றண்டமதிநுதலாளையுமீர்ந்ததொழிலினனே. (எ)

## சுந்தரமூர்த்திநாயனார்.

தொழுதும்வணங்கியுமாலயன்றேடருஞ்சோதிசென்றாங்
கெழுதுந்தமிழ்ப்பழவாவணங்காட்டியெனக்குன்குடி
முழுதுமடிமைவந்தாட்செயெனப்பெற்றவன்முரறே
ழெழுகுமலரினற்றுரெம்பிரானம்பிஆரூரனே. (அ)

## எறிபத்தநாயனார்.

ஊர்மதின்மூன்றட்டவுத்தமற்கென்றேருயர்தவத்தோன்
றார்மலர்கொய்யாவருபவன்றண்டின்மலர்பறித்த
வூர்மலைமேற்கொளும்பாகருடறுணியாக்குமவ
னேர்மலிமாமதில்சூழ்கருவூரிலெறிபத்தனே. (௯)

## ஏனாதிநாதநாயனார்.

பத்தனையேனாதிநாதனைப்பார்நீடெயினைதன்னு
ளத்தனைத்தன்னோடமர்மலைந்தானெற்றிநீறுகண்டு
கைத்தனிவாள்வீடொழிந்தவன்கண்டிப்பநின்றருளு
நித்தனையீழக்குலதீபனென்பரிந்நீணிலத்தே. (௧௦)

## கண்ணப்பநாயனார்.

நிலத்திற்றிகழ்திருக்காளத்தியார்திருநெற்றியின்மே
னலத்திற்பொழிதருகண்ணிற்குருதிகண்டுண்ணடுங்கி
வலத்திற்கடுங்கணையாற்றன்மலர்க்கண்ணிடந்தப்பினான்
குலத்திற்கிராதனங்கண்ணப்பனாமென்றுகூறுவரே. (கக)

## குங்குலியக்கலயநாயனார்.

ஏய்ந்தகயிறுதன்கண்டத்திற்பூட்டியெழிற்பனந்தாட்
சாய்ந்தசிவனிலைத்தானென்பர்காதலிதாலிகொடுத்
தாய்ந்தநற்குங்குலியங்கொண்டனற்புகைகாலனைமுன்
காய்ந்தவரற்கிட்டதென்கடவூரிற்கலயனையே. (கஉ)

## மானக்கஞ்சாறநாயனார்.

கலசமுலைக்கன்னிகாதற்புதல்விகமழ்குழலை
நலசெய்தவத்தவன்பஞ்சவடிக்கிவைநல்கெனலு
மலசுமெனக்கருதாதவள்கூர்தலரிந்தளித்தான்
மலைசெய்மதிற்கஞ்சைமானக்கஞ்சாறனெனும்வள்ளலே. (கங)

## அரிவாட்டாயநாயனார்.

வள்ளற்பிராற்கமுதேந்திவருவோனுகலுமிங்கே
வெள்ளச்சடையாயமுதுசெய்யாவிடிலென்றலையைத்
தள்ளத்தகுமென்றுவாட்பூட்டியதடங்கையினன்கா
ணள்ளற்பழனக்கணமங்கலத்தரிவாட்டாயனே. (கச)

## ஆனாயநாயனார்.

தாயவன்யாவுக்குந்தாழ்சடைமேற்றனித்திங்கள்வைத்த
தூயவன்பாதந்தொடர்ந்துதொல்சீர்துளையாற்பரவும்
வேயவன்மேன்மழநாட்டுவிரிபுனன்மங்கலக்கோ
னாயவனானையனென்னையுவந்தாண்டருளினனே. (கரு)

## சுந்தரமூர்த்திநாயனார்.

அருட்டுறையத்தற்கடிமைப்பட்டேனினியல்லனென்னும்
பொருட்டுறையாவதென்னேயென்னவல்லவன்பூங்குவளை
யிருட்டுறைநீர்வயனாவற்பதிக்கும்பிரானடைந்தோர்
மருட்டுறைநீக்கிநல்வான்வழிகாட்டிடவல்லவனே. (கசு)

## மூர்த்திநாயனார்.

அவந்திரிகுண்டமணாவதின்மாள்வனென்றன்றாலவாய்ச்
சிவன்றிருமேனிக்குச்செஞ்சந்தனமாச்செழுமுழங்கை [னூர்
யுவந்தொளிர்பாறையிற்றேய்த்துக்கொண்ட வொண்மூர்த்திதன்
நிவந்தபொன்மாடமதுராபுரியென்னுநீள்பதியே. (கஎ)

## முருகநாயனார்.

பதிகந்திகழ்தருபஞ்சாக்கரம்பயினாவினன்சீர்
மதியஞ்சடையாற்கலர்தொட்டணிபவன்யான்மகிழ்ந்து
துதியங்கழற்சண்பைநாதற்குத்தோழன்வன்றொண்டனம்பொன்
னதிகம்பெறும்புகலூர்முருகன்னெனுமந்தணனே. (கஅ)

## உருத்திரபசுபதிநாயனார்.

அந்தாழ்புனறன்னிலல்லும்பகலுநின்றாதரத்தா
லுந்தாதவன்பொடுருத்திரஞ்சொல்லிக்கருத்தமைந்த
பைந்தாருருத்ரபசுபதிதன்னற்பதிவயற்கே
நந்தார்திருத்தலையூரென்றுரைப்பரிந்நானிலத்தே. (ககூ)

## திருநாளைப்போவார்நாயனார்.

நாவார்புகழ்த்தில்லையம்பலத்தானருள்பெற்றுநாளைப்
போவானவனும்புறத்திருத்தொண்டன்றன்புன்புலைபோய்
மூவாயிரவர்கைகூப்பமுனியாயவன்பதிதான்
மாவார்பொழிறிகழாதனூரென்பரிம்மண்டலத்தே. (உ0)

## திருக்குறிப்புத்தொண்டநாயனார்.

மண்டும்புனற்சடையான்றமர்தூசெற்றிவாட்டும்வகை
விண்டுமழைமுகில்வீடாதொழியின்யான்வீவனென்று
மூண்டம்படர்பாறைமுட்டுமெழிலார்திருக்குறிப்புத்
தொண்டன்குலங்கச்சியேகாலியர்தங்கடொல்குலமே. (௨௧)

## சண்டேசுரநாயனார்.

குலமேறியசேய்ஞலூரிற்குரிசில்குரைகடல்சூழ்
தல்மேறியவிறற்சண்டிகண்டீர்தந்தைதாளிரண்டும்
வலமேறியமழுவாலெறிந்தீசன்மணிமுடிமே
னலமேறியபால்சொரிந்தலர்சூட்டியநன்னிதியே. (௨௨)

## சுந்தரமூர்த்திநாயனார்.

நிதியார்துருத்திதென்வேள்விக்குடியாய்நினைமறந்த
மதியேற்கறிகுறிவைத்தபுகர்பின்னைமாற்றிடென்று
துதியாவருள்சொன்னவாறறிவாரிடைப்பெற்றவன்கா
ணதியார்புனல்வயனாவலர்கோனென்னுநற்றவனே. (௨௩)

## திருநாவுக்கரசுநாயனார்.

நற்றவனல்லூர்ச்சிவன்றிருப்பாதந்தன்சென்னிவைக்கப்
பெற்றவன்மற்றிப்பிறப்பறவீரட்டர்பெய்கழற்கு
ளுற்றவனுற்றவிடமடையாரிடவொள்ளமுதாத்
துற்றவனாமூரினாவுக்கரசெனுந்தூமணியே. (௨௪)

மணியினைமாமறைக்காட்டுமருந்தினைவண்மொழியாற்
றிணியனநீள்கதவந்திறப்பித்தனதெண்கடலிற்
பிணியனகன்மிதப்பித்தனசைவப்பெருநெறிக்கே
யணியனநாவுக்கரையர்பிரான்றனருந்தமிழே. (௨௫)

## குலச்சிறைநாயனார்.

அருந்தமிழாகரன்வாதிலமணைக்கழுநுதிமே
லிருந்தமிழ்நாட்டிடையேற்றுவித்தோனெழிற்சங்கம்வைத்த

பெருந்தமிழ்மீனவன்றன்னதிகாரிபிரசமல்கு
குருந்தவிழ்சாரன்மணமேற்குடிமன்குலச்சிறையே. (௨௬)

## பெருமிழலைக்குறும்பநாயனார்.

சிறைநன்புனற்றிருநாவலூராளிசெழுங்கயிலைக்
கிறைநன்கழலுளையெய்துமிவனருள்போற்றவின்றே
பிறைநன்முடியன்னடியடைவேனென்றுடல்பிரிந்தா
னறைநன்மலர்த்தார்மிழலைக்குறும்பனெனுநம்பியே. (௨௭)

## காரைக்காலம்மையார்.

நம்பன்றிருமலைநான்மிதியேனென்றுதாளிரண்டு
மும்பர்மிசைத்தலையானடந்தேறவுமைநகலுஞ்
செம்பொன்னுருவனென்னம்மையெனப்பெற்றவள்செழுந்தேன்
கொம்பினுகுகாரைக்காலினின்மேயகுலதனமே. (௨௮)

## அப்பூதியடிகணாயனார்.

தனையாவதுதிருநாவுக்கரசின்சரணமென்று
மனையார்புனற்பந்தர்வாழ்த்திவைத்தாங்கவன்வண்டமிழ்க்கே
யினமாத்தனதுபெயரிடப்பெற்றவனெங்கள்பிரா
னனமார்வயற்றிங்களூரினில்வேதியனப்பூதியே. (௨௯)

## திருநீலநக்கநாயனார்.

பூதிப்புயத்தர்புயத்திற்சிலந்திபுகலுமஞ்சி
யூதித்துமிந்தமனைவியைநீப்பவுப்பாலவெல்லாம்
பேதித்தெழுந்தனகாணென்றபிஞ்ஞகன்காட்டுமவ
னீதித்திகழ்சாத்தைநீலநக்கன்னெனும்வேதியனே. (௩௦)

## நமிநந்தியடிகணாயனார்.

வேதமறிக்கரத்தாரூராற்குவிளக்குநெய்யைத்
தீதுசெறியமண்கையரட்டாவிடத்தெண்புனலா
லேதமுறுகவருகரென்றன்றுவிளக்கெரித்தா
னாதனெழிலேமப்பேறூரதிபனமிநந்தியே. (௩௧)

## சுந்தரமூர்த்திநாயனார்.

நந்திக்கு நம்பெருமாற்கு நல்லாரூரிறையவற்குப்
பந்திப்பரியன செந்தமிழ்பாடிப்பட்டர்புனலிற்
சிந்திப்பரியனசேவடிபெற்றவன்சேவடியே
வந்திப்பவன்பெயர்வன்றொண்டனென்பரிவ்வையகத்தே (௯௨)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

வையமகிழயாம்வாழவமணர்வலிதொலைய
வையன்பிரமபுரத்தரற்கம்மென்குதலைச்செவ்வாய்ப்
பையமிழற்றும்பருவத்துப்பாடப்பருப்பதத்தின்
றையலருள்பெற்றனனென்பர்ஞானசம்பந்தனையே. (௯௩)

பந்தார்விரலியர்வேள்செங்கட்சோழன்முருகனல்ல
சந்தாரகலத்துநீலநக்கன்பெயர்தான்மொழிந்து
சொந்தார்சடையர்பதிகத்திலிட்டடியேன்கொடுத்த
வந்தாதிகொண்டபிரானருட்காழியர்கொற்றவனே. (௯௪)

## ஏயர்கோன்கலிக்காமநாயனார்.

கொற்றத்திறலெந்தைதந்தைதன்றந்தையெங்கூட்டமெல்லாந்
தெற்றச்சடையாட்கினதடியோந்திகழ்வன்றொண்டனே
மற்றிப்பிணிதவிர்ப்பானென்றுடைவாளுருவியந்நோய்
செற்றுத்தவிர்கலிக்காமன்குடியேயர்சீர்க்குடியே. (௯௫)

## திருமூலநாயனார்.

குடிமன்னுசாத்தனூர்க்கோச்குலமேய்ப்போன்குரம்பைபுக்கு
முடிமன்னுகூனற்பிறையாளன்றன்னைமுழுத்தமிழின்
படிமன்னுவேதத்தின்சொற்படியேபரவிட்டெனுச்சி
யடிமன்னவைத்தபிரான்மூலனாகின்றவங்கணனே. (௯௬)

## தண்டியடிகணாயனார்.

கண்ணார்மணியொன்றுமின்றிக்கயிறுபிடித்தரற்குத்
தண்ணார்புனற்றடந்தொட்டலுந்தன்னைநகுமமணர்

கண்ணுங்கிழப்பவமணர்கலக்கங்கண்டம்மலர்க்கண்
விண்ணுயகனிடைப்பெற்றவனூர்விறற்றண்டியே. (௩௭)

## மூர்க்கநாயனர்.

தண்டலைசூழ்திருவேற்காட்டேர்மன்னன்றகுகவற்றூற் [ண்
கொண்டவல்லாயம்வன்சூதரைவென்றுமுன்கொண்டபொரு
ளுண்டநன்னீற்றனடியவர்க்கீபவன்மூர்க்கனென்பர்
நண்டலைநீரொண்குடந்தையின்மேவுநற்சூதனையே. (௩அ)

## சோமாசிமாறநாயனர்.

சூதப்பொழிலம்பரந்தணன்சோமாசிமாறனென்பான்
வேதப்பொருளஞ்செழுத்தும்விளம்பியல்லான்மொழியா
னீதிப்பரன்மன்னுநித்தநியமன்பரவையென்னு
மாதுக்குக்காந்தன்வன்ரெண்டன்றனக்குமகிழ்துணையே. (௩௯)

## சுந்தரமூர்த்திநாயனர்.

துணையுமளவுமில்லாதவன்றன்னருளேதுணையாக்
கணையுங்கதிர்நெடுவேலுங்கறுத்தகயலிணையும்
பிணையுநிகர்த்தகட்சங்கிலிபேரமைத்தோளிரண்டு
மணையுமவன்றிருவாரூரனுகின்றவற்புதனே. (௪௦)

## சாக்கியநாயனர்.

தகடனவாடையன்சாக்கியன்மாக்கற்றடவரையின்
மகடனந்தாக்கக்குழைந்ததிண்டோளர்வண்கம்பர்செம்பொன்
றிகழ்தருமேனியிற்செங்கலெறிந்துசிவபுரத்துப்
புகழ்தரப்புக்கவனூர்சங்கமங்கைபுவனியிலே. (௪௧)

## சிறப்புலிநாயனர்.

புவனியிற்பூதியுஞ்சாதனமும்பொலிவார்ந்துவந்த
தவநியமற்குச்சிறப்புச்செய்தத்துவகாரணனு
மவனியிற்கீர்த்தித்தென்னாக்கூரதிபனருமறையோன்
சிவனியமந்தலைநின்றதொல்சீர்நஞ்சிறப்புலியே. (௪௨)

## சிறுத்தொண்டநாயனார்.

புலியினதளுடைப்புண்ணியற்கின்னமுதாத்தனதோ
ரொலியின்சதங்கைக்குதலைப்புதல்வனுடறணித்துக்
கலியின்வலிகெடுத்தோங்கும்புகழ்ச்சிறுத்தொண்டன்கண்டீர்
மலியும்பொழிலொண்செங்காட்டங்குடியவர்மன்னவனே. ()

## சேரமான்பெருமாணாயனார்.

மன்னர்பிரானெதிர்வண்ணானுடலுவருதிநீருர்
தன்னர்பிரான்றமர்போலவருதலுந்தான்வணங்க
வென்னர்பிரானடிவண்ணானெனவடிச்சேரனென்னுந்
தென்னர்பிரான்கழறிற்றறிவானெனுஞ்சேரலனே. (௪௪)

சேரற்குத்தென்னவலர்பெருமாற்குச்சிவனளித்த
வீரக்கடகரிமுன்புதன்பந்தியிவுளிவைத்த
வீரற்குவென்றிச்சருப்புவில்வீரனைவெற்றிகொண்ட
சூரற்கெனதுள்ளநன்றுசெய்தாயின்றுதொண்டுபட்டே. (௪௫)

## கணநாதநாயனார்.

தொண்டரையாக்கியவரவர்க்கேற்றதொழில்கள்செய்வித்
தண்டர்தஞ்சோனக்கணத்துக்குநாயகம்பெற்றவன்காண்
கொண்டல்கொண்டேறியமின்னுக்குக்கோலமடல்கடொறுங்
கண்டல்வெண்சோறளிக்குங்கடற்காழிக்கணநாதனே. (௪௬)

## கூற்றுவநாயனார்.

நாதன்திருவடியேமுடியாகக்கவித்துநல்ல
போதங்கருத்திற்பொறித்தமையாலதுகைகொடுப்ப
வோதந்தழுவியஞாலமெல்லாமொருகோலின்வைத்தான்
கோதைநெடுவேற்களப்பாளனாகியகூற்றுவனே. (௪௭)

## சுந்தரமூர்த்திநாயனார்.

கூற்றுக்கெவனோபுகறிருவாரூரன்பொன்முடிமே
லேற்றுத்தொடையலுமின்னடைக்காயுமிடுதருமக்

கோற்றொத்துகூனனுங்கூன்போய்க்குருடனுங்கண்பெற்றமை
சாற்றித்திரியும்பழமொழிமாமித்தரணியிலே. (சஅ)

## பொய்யடிமையில்லாதபுலவர்.

தரணியிற்பொய்ம்மையிலாத்தமிழ்ச்சங்கமதிற்கபிலர்
பரணர்நக்கீரர்முதனாற்பத்தொன்பதுபல்புலவோ
ரருணமக்கியுந்திருவாலவாயரன்சேவடிக்கே
பொருளமைத்தின்பக்கவிபலபாடும்புலவர்களே. (சக)

## புகழ்ச்சோழநாயனார்.

புலமன்னியமன்னைச்சிங்களநாடுபொடிபடுத்த
குலமன்னியபுகழ்க்கோகனநாதன்குலமுதலோ
னலமன்னியபுகழ்ச்சோழனதென்பர்நகுசுடர்வாள்
வலமன்னியவெறிபத்தனுக்கீந்ததொர்வண்புகழே. (ருo)

## நரசிங்கமுனையரையநாயனார்.

புகழும்படியெம்பரமேதவர்க்குநற்பொன்னிடுவோ
னிகழும்படியோர்தவன்மடவார்புனைசோலமெங்கு
நிகழும்படிகண்டவனுக்கிரட்டிபொன்னிட்டவனீ
டிகழுமுடிநரசிங்கமுனையரசன்றிறமே. (ருக)

## அதிபத்தநாயனார்.

திறமமர்மீன்படுக்கும்பொழுதாங்கொருமீன்சிவற்கென்
றுறவமர்மாகடற்கேவிடுவோனொருநாட்கனக
நிறமமர்மீன்படநின்மலற்கென்றுவிட்டோன்கமலம்
புறமமர்நாகையதிபத்தனெனும்பொய்யிலியே. (ருஉ)

## கலிக்கம்பநாயனார்.

பொய்யைக்கடிந்துநம்புண்ணியர்க்காட்படுத்தன்னடியான்
சைவத்திருவுருவாய்வரத்தானவன்றுள்கழுவ
வையத்தவர்முன்புவெள்கிநீர்வாராவிடமனைவி
கையைத்தடிந்தவன்பெண்ணாகடத்துக்கலிக்கம்பனே. (ருங)

## கலியநாயனார்.

சம்பக்கரிக்குஞ்சிலந்திக்குநல்கியகண்ணுதலோ
னும்பர்க்குநாதற்கொளிவிளக்கேற்றற்குடலிலனைக்
கும்பத்தயிலம்விற்றுஞ்செக்குழன்றுங்கொள்கூலியினு
னம்பற்கெரித்தகலியொற்றிமாநகர்ச்சக்கிரியே. (௫௪)

## சத்திநாயனார்.

கிரிவில்லவர்தம்மடியரைத்தன்முன்புகிழ்மைசொன்ன
திருவில்லவரையந்நாவரிவோன்றிருந்தாரைவெல்லும்
வரிவில்லவன்வயற்செங்கழுநீரின்மருவுதென்ற
றெருவில்விரைகமழுந்தென்வரிஞ்சைத்திகழ்சத்தியே. (௫௫)

## ஐயடிகள்காடவர்கோனயனார்.

சத்தித்தடக்கைக்குமரனற்றாதைதன்றனமெல்லா
முத்திப்பதமொரோரோர்வெண்பாமொழிந்துமுடியரசா
மத்திற்குமும்மைமநன்றளரற்காயையமேற்றலென்னும்
பத்திக்கடலையடிகளாகின்றநம்பல்லவனே. (௫௬)

## சுந்தரமூர்த்திநாயனார்.

பல்லவைசெங்கதிரோனைப்பறித்தவன்பாதம்புகழ்
சொல்லவன்றென்புகலூரரன்பாற்றுய்யசெம்பொன்கொள்ள
வல்லவனாட்டியத்தான்குடிமாணிக்கவண்ணனுக்கு
நல்லவன்றன்பதிநாவலூராகின்றநன்னகரே. (௫௭)

## கணம்புல்லநாயனார்.

நன்னகராயவிருக்குவேளூர்தனினல்குரவாய்ப்
பொன்னகராயநற்றில்லைபுகுந்துபுலீச்சரத்து
மன்னவராயவரற்குநற்புல்லால்விளக்கெரித்தான்
கன்னவிற்றோளொந்தைதந்தைபிரானெங்கணம்புல்லனே. (௫௮)

## காரிநாயனார்.

புல்லனவாகாவகையுலகத்துப்புணர்ந்தனவுஞ்
சொல்லினவுந்நயமாக்கிச்சுடர்பொற்குவடுதனி
வில்லனைவாழ்த்திவிளங்குங்கயிலைபுக்கானென்பராற்
கல்லனமாமதில்சூழ்கடவூரினிற்காரியையே. (ருக)

## நெடுமாறநாயனார்.

கார்த்தண்முகிற்கைக்கடற்காழியர்பெருமாற்கெதிரா
யார்த்தவமணரழிந்ததுகண்டுமற்றாங்கவரைக்
கூர்த்தகழுவினுதிவைத்தபஞ்சவனென்றுரைக்கும்
வார்த்தையதுபண்டுநெல்வேலியில்வென்றமாறனுக்கே. (சு0)

## வாயிலார்நாயனார்.

மாறாவருளரன்றன்னைமனவாலயத்திருத்தி
யாறாவறிவாமொளிவிளக்கேற்றியகமலர்வாம்
வீறாமலரளித்தன்பெனுமெய்யமிர்தங்கொடுத்தான்
வீறார்மயிலையுள்வாயிலானென்றுவிளம்புவரே. (சுக)

## முனையடுவார்நாயனார்.

என்றுவிளம்புவர்நீரேதிபன்முனையடுவோ
னென்றுமமருளழிந்தவர்க்காக்கூலியேற்றெறிந்து
வென்றுபெருஞ்செல்வமெல்லாங்கனகநன்மேருவென்னுங்
குன்றுவளைத்தசிலையான்றமர்க்குக்கொடுத்தனனே. (சுஉ)

## சுந்தரமூர்த்திநாயனார்.

கொடுத்தான்முதலைகொள்பிள்ளைக்குயிரன்றுபுக்கொளியூர்த்
தொடுத்தான்மதுரகவியவிநாசியைவேடர்சுற்றம்
படுத்தான்றிருமுருகன்பூண்டியினிற்பராபரத்தேன்
மடுத்தானவனென்பர்வன்றொண்டனின்றமாதவனே. (சுஙு)

## கழற்சிங்கநாயனார்.

மாதவத்தோர்தங்கள்வைப்பினுக்காரூர்மணிக்குவைத்த
போதினைத்தான்மோந்ததேவிதன் மூக்கையரியப்பொற்கை
காதிவைத்தன்றேவரிவதென்றுங்கவள்கைதடிந்தா
ளுதமொய்த்தார்வண்டுகிண்டுபைங்கோதைக்கழற்சிங்கனே. ()

## இடங்கழிநாயனார்.

சிங்கத்துருவனைச்செற்றவன்சிற்றம்பலமுகடு
கொங்கிற்கனகமணிந்தவாதித்தன்குலமுதலோன்
றிங்கட்சடையர்தமரதென்செல்வமெனப்பறைபோக்
கெங்கட்கிறைவனிருக்குவேளூர்மன்னிடங்கழியே. (௬௫)

## செருத்துணைநாயனார்.

சுழிநீள்கடனஞ்சயின்றார்க்கிருந்தகடிமலரை
மொழிநீள்புகழ்க்கழற்சிங்கன்றன்றேவிமுன்மோத்தலுமே
யெழினீள்குமிழ்மலர்மூக்கரிந்தானென்றியம்புவராற்
செழுநீர்மருகனன்னாட்டமர்தஞ்சைச்செருத்துணையே. (௬௬)

## புகழ்த்துணைநாயனார்.

செருவிலிபுத்தூர்ப்புகழ்த்துணைவையஞ்சிறுவிலைத்தா
வுருவலிகெட்டுணவின்றியுமைகோனைமஞ்சனஞ்செய்
தருவதோர்போதுகைசோர்ந்துகலசம்விழத்தரியா
தருவரைவில்லியருளுநிதியதுபெற்றனனே. (௬௭)

## கோட்புலிநாயனார்.

பெற்றமுயர்த்தோன்விரையாக்கலிபிழைத்தோர்தமது
சுற்றமறுக்குந்தொழிற்றிருநாட்டியத்தான்குடிக்கோன்
குற்றமறுக்குநங்கோட்புலிநாவற்குரிசிலருள்
பெற்றவருட்கடலென்றுலகேத்தும்பெருந்தகையே. (௬௮)

## சுந்தரமூர்த்திநாயனார்.

தகுமாட்டிபசினோன்வீடவேறூல்போனசங்கிலிபாற்
புகுமணக்காதலினாலொற்றியூருறைபுண்ணியன்றன்
மிகுமலர்ப்பாதம்பணிந்தருளாலிவ்வியனுலக
நகும்வழக்கோனன்மையாப்புணர்ந்தானாவலூரரசே. (௬௯)

## பத்தராய்ப்பணிவார்கள்.

அரசினையாரூரமரர்பிரானையடிபணிந்திட்
டுரைசெய்தவாய்தடுமாறியுரோமபுளகம்வந்து
கரசரணாதியவயவங்கம்பித்துக்கண்ணருவி
சொரிதருமங்கத்தினோர்பத்தரென்றுதொகுத்தவரே. (௭௦)

## பரமனையேபாடுவார்.

தொகுத்தவடமொழிதென்மொழியாதொன்றுதோன்றியதே
மிகுத்தவியலிசைவல்லவகையில்விண்டோயுநெற்றி
வகுத்தமதிற்றில்லையம்பலத்தான்மலர்ப்பாதங்கண்மே
லுகுத்தமனத்தொடும்பாடவல்லோரென்பருத்தமரே. (௭௧)

## சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்.

உத்தமத்தானத்தறம்பொருளின்பமொடியெறிந்து
வித்தகத்தானத்தொருவழிக்கொண்டுவிளங்கச்சென்னி
மத்தம்வைத்தான்றிருப்பாதகமலமலரிணைக்கீழ்ச்
சித்தம்வைத்தாரென்பர்வீடுபேறெய்தியசெல்வர்களே. (௭௨)

## திருவாரூர்ப்பிறந்தார்கள்.

செல்வர்திகழ்திருவாரூர்மதில்வட்டத்துட்பிறந்தார்
செல்வன்றிருக்கணத்துள்ளவரேயதனாற்றிகழச்
செல்வம்பெருகுதென்னாரூர்ப்பிறந்தவர்சேவடியே
செல்வநெறியுறுவார்க்கணித்தாயசெழுநெறியே. (௭௩)

## முப்போழுதுந்திருமேனிதீண்டுவோர்.

நெறிவார்சடையரைத்தீண்டிமுப்போதுநீடாகமத்தி
னெறியால்வணங்கியர்ச்சிப்பவர்நம்மையுமாண்டமரர்க்
கிறையாய்முக்கண்ணுமெண்டோளுந்தரித்தீறில்செல்வத்தொடு
முறைவார்சிவபெருமாற்குறைவாயவுலகினிலே. (எச)

## முழுநீறுபூசியமுனிவர்.

உலகுகலங்கினுமூழிதிரியினுமுள்ளொருகால்
விலகுதலில்லாவிதியதுபெற்றநல்வித்தகர்கா
ணலகில்பெருங்குணத்தாரூரமர்ந்தவரனடிக்கீ
ழிலகுவெண்ணீறுதம்மேனிக்கணியுமிறைவர்களே. (எரு)

## அப்பாலுமடிச்சார்ந்தார்.

வருக்கமடைத்துநன்னாவலூர்மன்னவன்வண்டமிழாற்
பெருக்குமதுரத்தொகையிற்பிறைசூடிபெய்கழற்கே
யொருக்குமனத்தொடப்பாலடிச்சார்ந்தவரென்றுலகிற்
றெரிக்குமவர்சிவன்பல்கணத்தோர்நஞ்செழுந்தவரே. (எசு)

## சுந்தரமூர்த்திநாயனார்.

செழுநீர்வயன்முதுகுன்றினிற்செந்தமிழ்பாடிவெய்ய
மழுநீடக்கையனீந்தபொன்னாங்குக்கொள்ளாதுவந்தப்
பொழிநீடருதிருவாரூரில்வாசியும்பொன்னுங்கொண்டோன்
செழுநீள்புகழ்த்திருவாரூரனென்றுநாங்கேட்பதுவே. (எஎ)

## பூசலார்நாயனார்.

பதுமநற்போதன்னபாதத்தரற்கொருகோயிலையான்
கதுமெனச்செய்குவதென்றுகொலாமென்றுகண்டுயிலா
சதுமனத்தேயெல்லிதோறுநினைந்தருள்பெற்றதென்பர்
புதுமணத்தென்றலுலாநின்றவூர்தனிற்பூசலையே. (எஅ)

## மங்கையர்க்கரசியார்.

பூசலயிற்றென்னனார்க்கனலாகப்பொறாமையினால்
வாசமலர்க்குழற்பாண்டிமாதேவியாமானிகண்டீர்
தேசம்விளங்கத்தமிழாகரர்க்கறிவித்தவரா
னாசம்விளைத்தாளருகர்தருக்குத்தென்னாட்டகத்தே. (எக)

## நேசநாயனார்.

நாட்டமிட்டன்றரிவந்திப்பவெல்படைநல்கினர்தந்
தாட்டரிக்கப்பெற்றவனென்பர்சைவத்தவரரையிற்
கூட்டுமக்கப்படங்கோவணநெய்துகொடுத்துநன்மை
யீட்டுமக்காம்பீலிச்சாலியநேசனையிம்மையிலே. (அ0)

## கோச்செங்கட்சோழநாயனார்.

மைவைத்தகண்டனெறியன்றிமற்றோர்நெறிகருதாத்
தெய்வக்குடிச்சோழன்முன்புசிலந்தியாய்ப்பந்தர்செய்து
சைவத்துருவெய்திவந்துதரணிநீடாலயங்கள்
செய்வித்தவன்றிருக்கோச்செங்கணானெனுஞ்செம்பியனே. ()

செம்பொனணிந்துசிற்றம்பலத்தைச்சிவலோகமெய்தி
நம்பன்கழற்கீழிருந்தோன்குலமுதலென்பர்நல்ல
வம்புமலர்த்தில்லையீசனைச்சூழமறைவளர்த்தா
னிம்பநறுந்தொங்கற்கோச்செங்கணானெனுநித்தனையே. (அஉ)

## திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்.

தனையொப்பருமெருக்கத்தம்புலியூர்த்தகும்புகழோ
னினையொப்பருந்திருநீலகண்டப்பெரும்பாணனைநீள்
சினையொப்பலர்பொழிற்சண்பையர்கோன்செந்தமிழொடிசை
புனையப்பரனருள்பெற்றவனென்பரிப்பூதலத்தே. (அங)

## சடையநாயனார்.

தலம்விளங்குந்திருநாவலூர்தன்னிற்சடையனென்னுங்
குலம்விளங்கும்புகழோனையுரைப்பர்குவலயத்தி

னலம்விளங்கும்படிநாம்விளங்கும்படிநற்றவத்தின்
பலம்விளங்கும்படியாரூரனை முன்பயந்தமையே. (அச)

## இசைஞானியார்.

பயந்தாள்கறவுடைச்செங்கண்வெள்ளேப்பொள்ளநீள் பனைக்கை
கயந்தானுகைத்தநற்காளையையென்றுங்கபாலங்கைக்கொண் [க்
டயந்தான்புகுமரனூரர்ப்புனிதவரன்றிருத்தா
ணயர்தாடனதுள்ளத்தென்றுமுரைப்பதுஞானியையே. (அரு)

## சுந்தரமூர்த்திநாஞர்.

ஞானவாரூரரைச்சேரரையல்லதுநாமறியோ
மானவவாக்கையொடும்புக்கவரைவளரொளிப்பூண்
வானவராலுமருவற்கரியவடகயிலைக்
கோனவன்கோயிற்பெருந்தவத்தோர்தங்கள்கூட்டத்திலே. ()

## திருத்தொண்டத்தொகையிலுள்ள கூட்டவடியார்கள் தனியடியார்கள்

கூட்டமொன்பானொடாறுபத்துமூன்றுதனிப்பெயரா
வீட்டும்பெருந்தவத்தோரெழுபத்திரண்டாம்வினையை
வாட்டுந்தவத்திருத்தொண்டத்தொகைபதினொன்றின்வகைப்
பாட்டுந்திகழ்திருநாவலூராளிபணித்தனனே. (அஎ)

## திருதோண்டத் தோகைப்பதிக்கக் கவிகளின் முதற்குறிப்பு.

பணித்தநற்றொண்டத்தொகைமுதறில்லையிலைமலிந்த
வணித்திகழ்மும்மைதிருநின்றவம்பறுவார்கொண்டசீ
ரிணைத்தநற்பொய்யடிமைகறைக்கண்டன்கடல்சூழ்ந்தபின்
மணித்திகழ்சொற்பத்தர்மன்னியசீர்மறைநாவனொடே. (அஅ)

## நூற்பயன்.

ஓடிடும்பஞ்சேந்திரியமொடுக்கியென் றூழ்வினைகள்
வாடிடும்வண்ணநின்றெத்தவஞ்செய்தனன்வானினுள்ளோர்
சூடிடுஞ்சீர்த்திருப்பாதத்தர்தொண்டக்தொகையினுள்ள
சேடர்தஞ்செல்வப்பெரும்புகழந்தாதிசெப்பிடவே. (அக)

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பி

அருளிச்செய்த

# ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி.



பார்மண்டலத்தினிற்பன்னிருபேரொடுமன்னிநின்ற
நீர்மண்டலப்படப்பைப்பிரமாபுரநீறணிந்த
கார்மண்டலக்கண்டத்தெண்டடந்தோளன்கருணைபெற்ற
தார்மண்டலமணிசம்பந்தன்மேவியதண்பதியே. (க)

பதிகப்பெருவழிகாட்டப்பருப்பதக்கோன்பயந்த
மதியத்திருநுதல்பங்கனருள்பெறவைத்தவெங்க
ணிதியைப்பிரமாபுரநகர்மன்னனையென்னுடைய
கதியைக்கருதவல்லோரமராவதிகாப்பவரே. (உ)

காப்பயில்காழிக்கவுணியர்தீபற்கென்காரணமா
மாப்பழிவாராவகையிருப்பேனென்னமாரனென்னே
பூப்பயில்வாளிகளஞ்சுமென்னெஞ்சரங்கப்புகுந்த
வேப்பயில்வார்சிலைகால்வளையாநிற்குமீண்டிரவே (ங)

இரவும்பகலுநின்பாதத்தலரென்வழிமுழுதும்
பரவும்பரிசேயருளுகண்டாயிந்தப்பாரகத்தே
விரவும்பரமதகோளரியேகுடவெள்வளைக
டரளஞ்சொரியுங்கடல்புடைசூழ்ந்ததராய்மன்னனே. (௪)

மன்னியயோகச்சுவையொளியூறோசைநாற்றமென்றிப்
பன்னியவைந்தின்பதங்கடந்தோர்க்குந்தொடர்வரிய
பொன்னியல்பாடகக்கிங்கிணிப்பாதநிழல்புகுவோர்
துன்னியகாவமர்சண்பையர்நாதற்குத்தொண்டர்களே. (௫)

தொண்டினஞ்சூழச்சுரிகுழலார்தம்மனந்தொடர
வண்டினஞ்சூழவருமிவன்போலுமயிலுகுத்த
கண்டினஞ்சூழ்ந்தவளைபிரம்போர்கழுவாவுடலம்
விண்டினஞ்சூழக்கழுவினவாக்கியவித்தகனே. (௬)

வித்தகம்பேசிநம்வேணுத்தலைவளைவாணிகர்த்து
முத்தகங்காட்டிமுறுவனல்லார்தமனமணைய
வுப்த்தகம்போந்திருந்துள்ளவுமில்லாதனவுமுறு
புத்தகம்போலுழுதுபுலைப்பாணன்புணர்க்கின்றதே. (௭)

புணர்ந்தநன்மேகச்சிறுநுண்டுளியிற்சிறகொதுக்கி
யுணர்ந்தனர்போலவிருந்தனையாலுலகம்பரசுங்
குணந்திகழ்ஞானசம்பந்தன்கொடிமதிற்கொச்சையின்வாய்
மணந்தவர்போயினரோசொல்லுவாழிமடக்குருகே. (௮)

குருந்தலர்முல்லையங்கோவலரேற்றின்கொலைமருப்பா
லருந்திறலாகத்துழுதசெஞ்சேற்றருகாசனிதன்
பெருந்திறமாமதிற்சண்பைநகரன்னபேரமைத்தோட்
டிருந்திழையார்வம் முரசே. (௯)

முரசங்கறையமுன்றோரணநீடமுழுநிதியின்
பரிசங்கொணர்வானமைகின்றனர்பலர்பார்த்தினிநீ
யரிசங்கணைதலென்றுமுன்கருதருகாசனிதன்
சுரிசங்கணைவயற்றந்தநகரன்னதூமொழிக்கே. (௧௰)

மொழிவதுசைவசிகாமணிமூரித்தடவரைத்தோ
டொழுவதுமற்றவன்றாமலர்ப்பாதங்கடாமங்கமழ்ந்
செழுவதுகூந்தலம்பூந்தாயவரையினியாதுசொலோ
மொழிவதுசேரி மாதர்முறுவலித்தே. (கக)

வலிகெழுகுண்டர்க்குவைகைக்கரையன்றுவான்கொடுத்த
கலிகெழுதிண்டோட்கவுணியர்தீபன்கடலுடுத்த
வொலிதருநீர்வையகத்தையுரையிட்டதொத்ததிரு
மலிதருவார்பணியாமடமாதினைவாட்டுவதே. (கஉ)

வாட்டுவர்தத்தந்துயரைவன்சேழலின்பின்புசென்ற
வேட்டுவர்கோலத்துமேலசதலைவனைவெல்விரதனொற்
றோட்டியபல்காதனிவனென்றுநாதனைத்தேர்ந்துசூழ்விசும்பிற்
காட்டியகன்றின்கழற்றிருப்பாவைகற்றவரே. (கங)

அவர்சென்றணுகுவர்மீள்வழிங்கன்னையருகர்நம்மைத்
தவர்கின்றகண்டமிழ்ச்சைவசிகாமணிசண்பையென்னப்
பவர்வென்றநீள்கொடிகோபுரம்பல்கதிரோன்பரியைக்
கவர்வென்றநூலத்தொருங்கின்றுதோன்றுங்கடிநகரே. (கச)

நகரங்கெடப்பண்டுதிண்டோர்மிசைநின்றுநான்மறைகள்
பகரங்கழலவனைப்பதிஞருயிரப்பதிக
மகரங்குளார்கடல்வையந்துயரங்கெடவாய்மொழிந்த
நிகரங்கிலிகலிக்காழிப்பிரானென்பர்நீணிலத்தே. (கரு)

நிலமேறியமருப்பிற்றிருபாலுநிலம்படைத்த
குலமேறியமலர்க்கோகனதத்தயனுங்கொழிக்குருந்
சலமேறியமுடிதாள்சண்டிலர்தந்தைகாணவன்று
நலமேறியபுகழ்ச்சம்பந்தன்காட்டியநாதனையே. (கசா)

நாதனணிபள்ளிசூழ்நகர்கானகமாக்கியஃதே
போதின்மலிவயலாக்கியகோனமர்பொற்புகலி
யோதநெடுங்கடல்வாருங்கயலோவிலைக்குளது
காதினளவுமிளிர்கயலோசொல்லுகாரிகையே. (கஎ)

கைம்மையினானின்கழல்பரவாதுகண்டார்க்கிவனோர்
வன்மையனேயென்னும்வண்ணநடித்துவிழுப்பொருளோ
டிம்மையில்யானெய்துமின்பங்கருதித்திரிதருமத்
தன்மையினேற்குமருளுதியோசொல்லுசம்பந்தனே. (கஅ)

பந்தாரணிவிரற்பங்கயக்கொங்கைப்பவளச்செவ்வாய்க்
கொந்தார்நறுங்குழற்கோமளவல்லியைக்கூறருஞ்சீர்
நந்தாவிளக்கினைக்கண்டதுநானெப்பொழுதுமுன்னுஞ்
சந்தாரகலத்தருகாசனிதன்றடவரையே. (ககூ)

வரைகொண்டபாமதிற்சண்பைத்தலைவனைவாழ்த்தலர்போ
னிரைகொண்டுவானோர்கடைந்ததினஞ்சநிகழக்கொலா
நுரைகொண்டுமெய்ப்பரத்துள்ளஞ்சுழலநொந்தோரிரவுந்
திரைகொண்டலமருமிவ்வகன்ஞாலஞ்செறிகடலே. (உ0)

கடலன்னபொய்ம்மைகள்செய்யினும்வெய்யகடுநரகத்
திடநமனேவுதற்கெவ்விடத்தானிருஞ்செந்தமிழாற்
றிடமன்னுமாமதிற்சண்பைத்தலைவன்செந்தாமரையின்
வடமன்னுநீண்முடியானடிப்போதவைவாழ்த்தினமே. (உக)

வாழ்த்துவதெம்பரமேயாருமர்த்தத்துவையமுப்பீ
ராழ்த்தியகாலத்துமாழாததுவரன்சேவடியே
யேத்தியஞானசம்பந்தற்கிடமிசைத்தும்பிகொம்பர்க்
காத்திகழ்கேதகம்போதகமீனுங்கழுமலமே. (உஉ)

மலர்பயில்வாட்கண்ணிகேள்கண்ணிநீண்முடிவண்கமலப
பலர்பயில்கீர்த்திக்கவுணியர்தீபன்பகைவரென்னத்
தலைபயில்பூம்புனங்கொய்திடுமேகணியார்புலம்ப
வலர்பயிலாமுன்பறித்தனமாகிலரும்பினையே. (உங)

அரும்பினவன்பில்லையர்ச்சனையில்லையரனெறியே
விரும்பினமாந்தர்க்குமெய்ப்பணிசெய்கிலம்பொய்க்கலை
விரும்பினவுள்ளத்தினேற்கெங்ஙனேவந்துநேர்பட்டதாற
கரும்பனநீள்வயல்சூழ்காழிநாதன்கழலடியே. (உச)

அடியாலலர்மிதித்தாலரத்தம்பில்கமிர்தமின்றிக்
கொடியானெடும்பின்னடந்ததெவ்வாறலர்கோகனதக்
கடியார்நறுங்கண்ணிஞானசம்பந்தன்கருதலர்சேர்
வெடியாவிடுவெம்பரற்சுறுநாறுவியன்சுரத்தே. (உ௫)

சுரபுரத்தார்தந்துயருக்கிரங்கிச்சுரர்கடங்கள்
பரபுரத்தார்தந்துயர்கண்டருளும்பரமன்மன்னு
மரபுரத்தானடியெய்துவனென்பதவனடிசேர்
சிரபுரத்தானடியாரடியேனென்னுந்திண்ணனவே. (உ௬)

திண்ணனவார்சென்றநாட்டிடையில்லைகொறீந்தமிழோர்
கண்ணெனவோங்குங்கவுணியர்தீபன்கைபோற்பொழிந்து
விண்ணினவாய்முல்லைமெல்லரும்பீனமற்றியாமெலிய
வெண்ணினநாள்வழுவாதிரைத்தோடியெழுமுகிலே. (உ௭)

எழுவான்மதியால்வெதுப்புண்டலமந்தெழுந்துவிம்மித்
தொழுவாடனக்கின்றருளுங்கொலாந்தொழுநீரவைகைக்
குழுவாயெதிர்ந்தவுறிகைப்பறிதலைக்குண்டர்தங்கள்
கழுவாவுடலங்கழுவினவாக்கியகற்பகமே. (உ௮)

கற்பாநறவமணிகொழித்துந்துமலைச்சிலம்பா
நற்பாமொழியெழின்ஞானசம்பந்தன்புறவமன்ன
விற்பாறுதலிதன்மென்முலையின்னிளஞ்செவ்விகண்டிட்
டிற்பாவிடும்வண்ணமெண்ணுகின்றனம்மவெம்மனையே. (உ௯)

எம்மனையாயெந்தையாயென்னையாண்டென்றுயர்தவிர்த்த
செம்மலர்நீண்முடிஞானசம்பந்தன்புறவமன்னீர்
வெம்முனைவேலென்னவென்னமிளிர்ந்துவெளுத்தரிபோன்
றம்மனவோவல்லவோவந்தெனுள்ளத்தொளிர்வனவே. (௩௦)

ஒளிறுமணிப்பணிநாட்டுமுலகத்துமும்பருள்ளும்
வெளிறுபடச்சிலநிற்பதுண்டேமிண்டிமீனுகளு
மளறுவயற்சண்பைநாதனமுதப்பதிகமென்னுங்
களிறுவிடப்புகுமேற்றெண்டர்பாநிற்கவிதைகளே. (௩௧)

கவிகுத்தருவனகண்ணுக்கினியனகேட்கிலின்பஞ்
செவிகுத்தருவனசிந்தைக்குரியனபைந்தரள
நவிக்கட்சிறுமியர்முற்றின்முகந்துதஞ்சிற்றிலெனுங்
குவிக்கத்திரைபரக்குங்கொச்சைநாதன்குரைகழலே. (௩௨)

கழல்கின்றவைங்கணையந்தியுமன்றிலுங்கால்பரப்பிட்
டுழல்கின்றதென்றலும்வந்திங்கடர்ப்பவன்றுயிழைக்காற்
சுழல்கின்றநஞ்சந்தணித்தவன்றன்னைத்தொடர்ந்துபின்போ
யுழல்கின்றநெஞ்சமிங்கென்னோவினியின்றுறுகின்றதே. (௩௩)

உறுகின்றவன்பினொடொத்தியதாளமுமுள்ளுருகிப்
பெறுகின்றவின்பும்பிறைநுதன்முண்டமுங்கண்டவரைத்
தெறுகின்றவாறென்னசெய்தவமோவந்தென்சிந்தையுள்ளே
றுறுகின்றபாதன்கழுமலம்போலுந்துடியிடைக்கே. (௩௪)

இடையுமெழுதாதொழியலுமாமினவண்டுகளின்
புடையுமெழுதிலும்பூங்குழலொக்குமப்பொன்னனையா
ணடையுநகையுந்தமிழாகரன்றன்புகலிநற்றே
னடையுமொழியுமெழுதிடிற்சாலவதிசயமே. (௩௫)

மேனாட்டமரர்தொழவிருப்பாரும்வினைப்பயன்க
டானாட்டருநரகிற்றளர்வாருந்தமிழர்தங்கள்
கோனாட்டருகர்குழாம்வென்றகொச்சையர்கோன்கமலப்
பூநாட்டடிபணிந்தாருமல்லாதபுலையருமே. (௩௬)

புலையடித்தொண்டனைப்பூசுரனாக்கிப்பொருகயற்கண்
மலைமடப்பாவைக்குமாடமாடுமணியையென்றன்
றலையிடைப்பாதனைக்கற்றுங்குரைத்தசம்பந்தனென்று [லே.
முலையிடைப்பொன்கொண்டு சங்கிழந்தாளென்றன்மொய்குழ

குழலியலின்கவிஞானசம்பந்தன்குரைகழல்போற்
கழலியல்பாதம்பணிந்தேனுனையுங்கதிரவனே
தழலியல்வெம்மைதணித்தருணீதணியாதவெம்மை
யழலியல்கானடந்தாள்வினையேன்பெற்றவாரணங்கே. (௩௮)

அணங்கமர்யாழ்முரித்தான்பனைபெண்பனையாக்கியமண்
கணம்பகழுவேற்றிக்கடுவிடந்தீர்த்தறக்கதவடைத்துப்
பிணம்பகலைநீறெதிரோடஞ்செலுத்தினவெண்பிறையோ
டணங்கியமாடச்சிரபுரத்தான்றனிருந்தமிழே. (௩௯)

இருந்தண்புகலிகோலக்காவெழிலாவடுதுறைசீர்
பொருந்துமரத்துறைபோனகந்தாளநன்பொன்சிவிகை
திருந்திடவொத்தமுச்சிசெயவேறவரனளித்த
பெருந்தகைசீரினைபெம்பரமோநின்றுபேசுவதே. (௪௦)

பேசுந்தகையதன்றேயின்றுமன்றுந்தமிழ்விரசன்
றேசமுழுதுமழைமறந்தூண்கெடச்செந்தழற்கை
ஈசன்றிருவருளாலெழில்வீழிமிழலையின்வாய்க்
காசின்மழைபொழிந்தானென்றிஞ்ஞாலங்கவின்பெறவே. (௪௧)

பெறுவதுநிச்சயமஞ்சனெஞ்சேபிரமாபுரத்து
மறுவறுபொற்கழன்ஞானசம்பந்தனைவாழ்த்துதலால்
வெறியுறுகொன்றைமறியுறுசெங்கைவிடையெடுத்த
பொறியுறுபொற்சொடியெம்பெருமானமர்பொன்னுலகே. ( )

பொன்னூர்மதில்சூழ்புகலிக்கரசையருகர்தங்க
டென்னூட்டரணட்டசிங்கத்தினையெஞ்சிவனிவனென
றந்நாள்குதலைத்திருவாயமொழிகளருளிச்செய்த
வென்றனையைப்பணிவார்க்கிலைகாண்கயமாலயமே. (௪௩)

பாலையொப்பாகும்பிறைமுன்புநின்றுமணிகுறுக்கி
வேலையைப்பாடனைந்தாங்கெழின்மன்மதன்விற்குனித்த
சோலையெப்போதும்பிடிப்பன்வடுப்படுசொக்கினஞ்சூழ்
சோலையைக்காழித்தலைவன்மலரின்றுசூடிடினே. (௪௪)

சூடுநற்றார்த்தமிழாகரன்றன்பொற்சுடர்வரைத்தோள்
கூடுதற்கேசற்றகொம்பினைநீயுங்கொடும்பகைநின்
றூடுதற்கேயத்தனைக்குனையேநின்னையாடரவம்
வாட்டக்காருமறுவும்படுகின்றவாண்மதியே. (௪௫)

மதிக்கத்தகுநுதன்மாதொடுமெய்கண்மலையில்வைகித்
துதிக்கத்தகுசண்பைநாதன்சுருதிசடங்குழவோர்
மிதிக்கக்கமலமுகிழ்த்தண்டேனுண்டுமிண்டிவரால்
குதிக்கக்குருகிரியுங்கொச்சைநாடுகுறுகுமினே. (௪௬)

குறுமனமுன்கல்லாத்தமிழாகரன்கொச்சையன்ன
நறுமலர்மென்குழலாயஞ்சலெம்மூர்நகுமதிசென்
றுறுமனையொண்சுவரோவியக்கிள்ளைக்குநும்பதியிற்
சிறுமிகள்சென்றிருந்தங்கையைநீட்டுவாசேயிழையே. (௪௭)

இழைவளராகத்துஞானசம்பந்தனிருஞ்சருதிக்
கழைவளர்குன்றுகடத்துங்காண்பீர்கடைசியர்நீண்
முழைவளர்நண்டுபடத்தடஞ்சாலிமுத்துக்கிளைக்கு
மழைவளர்நீள்குடுமிப்பொழில்சூழ்ந்தவளவயலே. (௪௮)

வயலார்மருகற்பதிதன்னில்வாளரவாற்கடியுண்
டயலாவிழுந்தவவனுக்கிரங்கியறிவழிந்த
கயலார்கருங்கண்ணிதன்றுயர்நீர்த்தகருணைவெள்ளப்
புயலார்தருகையினனென்னத்தோன்றிடும்புண்ணியமே. (௪௯)

புண்ணியநாடுபுகுவதற்காகப்புலனடக்கி
யெண்ணியசெய்தொழினிற்பதெல்லாருமின்றியானெனக்கு
நண்ணியசெயதொழின்ஞானசம்பந்தனைநந்தமர்சீர்க்
கண்ணியன்மாடக்கழுமலத்தானைக்கருதுவதே. (௫0)

கருதர்த்தவவருளீந்தருண்ஞானசம்பந்தன்சண்பை
யிரதக்கிளிமொழிமாதேகலங்கலிவருடலம்
பொருதக்கழுகிரையாக்குவனுந்தமர்போர்ப்படையேன்
மருதச்சினையிற்பொதும்பருளேறிமறைகுவனே. (௫௧)

மறைமுழங்குங்குழலார்கலிகாட்டவயற்கடைஞர்
பறைமுழங்கும்புகலித்தமிழாகரன்பற்றலர்போற்
றுறைமுழங்குங்கரிசீறிமடங்கல்சுடர்ப்பளிங்கி
னறைமுழங்கும்வழிநீவரிற்சாலவரும்பழியே. (௫௨)

பழிக்கேதருகின்றதின்றிப்பிறைபல்கதிர்விழுந்த
வழிக்கேதிகழ்தருசெக்கரைக்கொச்சைவயவரென்னு
மொழிக்கேவிரும்பிமுளரிக்கலமருமோவியர்தங்
கிழிக்கேதருமுருவத்திவள்வாட்டிடக்கின்கின்றதே. (௫௩)

கிளரிக்குன்றத்தரவமுமிழ்ந்தகிளர்மணியின்
வாளரிக்கும்வைகைமாண்டனரென்பர்வயற்புகலித்
தாளரிக்கும்மரியானருள்பெற்றபரசமய
கோளரிக்குந்நிகராத்தமிழ்நாட்டுள்ளகுண்டர்களே. (௫௪)

குண்டகழ்சூழ்தருகொச்சைத்தலைவன்றன்குன்றகஞ்சேர்
வண்டகமென்மலர்வில்லியன்னீர்வரிவிற்புருவக்
கண்டகவாளிபடப்புடைவீழ்செங்கலங்கலொடும்
புண்டகக்கேழல்புகுந்ததுண்டோநுங்கள்பூம்புனத்தே. (௫௫)

புனத்தெழுகைம்மதக்குன்றமராயங்கொர்புண்கலையாய்
வனத்தெழுசந்தனப்பைந்தழையாய்வந்துவந்தடியேன்
மனத்தெழுபொற்கழன்ஞானசம்பந்தன்வண்கொச்சையன்னாள்
கனத்தெழுகொங்கைகளாயல்குலாய்த்திவர்கட்டுரையே. (௫௬)

கட்டதுவேகொண்டுகள்ளூண்டுநுங்கைகளாற்சுணங்கை
யிட்டதுவேயன்றியெட்டனைத்தானிவளுள்ளுறுநோய்
விட்டதுவேயன்றிவெங்குருநாதன்றன்பங்கயத்தின்
மட்டவிழ்தார்கொண்டுசூட்டுமின்பேதைமகிழ்வுறவே. (௫௭)

உறவும்பொருளுமொண்போகமுங்கல்வியுங்கல்வியுற்ற
துறவுந்துறவிப்பயனுமெனக்குச்சுழிந்தபுனற்
புறவும்பொழிலும்பொழில்சூழ்பொதும்புந்ததும்பவண்டி
னறவும்பொழிலெழிற்காழியர்கோன்திருநாமங்களே. (௫௮)

நாமுகந்தேத்தியஞானசம்பந்தனைநண்ணலர்போ
லேமுகவெஞ்சரஞ்சிந்திவல்லிருஞ்சியிடிபடுக்கத்
தீமுகந்தோன்றிகடோன்றத்தளவமுகையரும்பக்
காமுகம்பூமுகங்காட்டிநின்முர்த்தனகாரினமே. (௫௯)

காரங்கணைபொழிற்காழிக்கவுணியர்தீபனல்லூர்ச்
சீரங்கணைநற்பெருமணந்தன்னிற்சிவபுரத்து
வாரங்கணைகொங்கைமாதொடும்புக்குறும்போதுவந்தா
ராரங்கொழிந்தனர்பெற்றதல்லாலவ்வரும்பதமே. (௬0)

அரும்பதமாக்குமடியரொடஞ்சலித்தார்க்கரிய
பெரும்பதமெய்தலுற்றீர்வந்திறைஞ்சுமின்பேரரவம்
வரும்பதநான்மறைக்காழித்தலைவன்மலர்க்கமலந்
தரும்பதஞானசம்பந்தனென்றுணைதன்றாளிணையே. (௬௧)

தாளின்சரணந்தருஞ்சண்பைநாதன்றரியலர்போற்
கீளின்மலங்கவிலங்கேபுகுந்திடுங்கெண்டைகளும்
வாளுந்தொலையமதர்த்திருகாதினளவும்வந்து
மீளுங்கருங்கண்ணிமின்புரியாவைத்தமென்னகையே. (௬௨)

நகுகின்றமுல்லைநண்ணாரெரிகண்டத்தவர்கவர்ந்த
மிகுகின்றநன்னிதிகாட்டினகொன்றைவிரவலரூர்
புகுகின்றதீயெனப்பூத்தனதோன்றிபுறவமன்கைத்
தகுகின்றகோடல்களன்பரின்றெய்துவர்கார்மயிலே. (௬௩)

மயிலேந்தியவள்ளறன்னையளிப்பமதிபுணர்ந்த
வெயிலேந்தியசண்பைநாதனுலகத்தெதிர்ப்பவர்யார்
குயிலேந்தியபொழிற்கொங்கேந்தியகொம்பினம்புதழீஇ
யயிலேந்தியமலர்கண்டுளையவந்தவண்ணலுக்கே. (௬௪)

அண்ணன்மணிவளைத்தோளருகாசனிசண்பையன்ன
பெண்ணினமிர்தநல்லாள்குழனாற்றம்பெடையொடும்பூஞ்
சுண்ணந்துதைந்தவண்டேகண்டதுண்டுகொறாங்கொலிநீர்த்
தண்ணம்பொழிலெழிற்காசினிபூத்தமென்றாதுகளே. (௬௫)

தாதுகற்றேய்த்தநஞ்சன்னசியார்சடலம்படுத்துத்
தூதையிற்சிக்கங்கரஞ்சேர்த்துவாளாதுலுக்குகின்றீர்
போதியிற்புத்தர்கள்வம்மின்புகலியர்கோனன்னநாட்
காதியிட்டேற்றுங்கழுத்திறம்பாடிக்களித்திடவே. (௬௬)

களியுறுதேன்றார்க்கவுணியர்தீபன் கருதலர்போல்
வெளியுறுஞாலம்பகலிழந்தால்விரையார்கமலத்
தளியுறுமென்மலர்த்தாதனைந்தாழியமைப்பவருந்
துளியுறுவாடையிதாமடமானைத்துவள்விப்பதே. (௬௭)

தேறும்புனற்றில்லைச்சிற்றம்பலத்துச்சிறந்துவந்துள்
ஊறுமமிர்தைப்பருகிட்டெழுவதொருட்களிப்புக்
கூறும்வழிபொழிதந்தெனைவாழ்வித்தவன்கொழுந்தே
றூறுமலங்கற்றமிழாகரனென்னுநன்னிதியே. (௬௮)

நிதியுறுவாரறனின்பம்வீடெய்துவரென்னவேதந்
நதியுறுநீள்வயற்காழியர்கோனைத்தொழாரினைய
நதியுறுநீர்தெளித்தஞ்சலெனவண்ணலன்றேவெறு
மதியுறுவாணுதல்பாதம்பணிந்தனண்மன்னனையே. (௬௯)

மன்னங்கனைசெந்தமிழாகரன்வெற்பில்வந்தொருவ
ரன்னங்களஞ்சன்மினென்றடர்வேழத்திடைவிலங்கிப்
பொன்னங்கலைசாவகையெடுத்தாற்கிவள்பூணழுந்தி
யின்னந்தழும்புளவாம்பெரும்பாலுமவ்வேந்தலுக்கே. (௭௦)

ஏந்துமுலகுறுவீரெழினீலநக்கற்குமின்பப்
பூந்தண்புகலூர்முருகற்குந்தோழனைப்போகமார்பைக்
காந்துங்கனலிற்குளிர்படுத்துக்கடற்கூடலின்வாய
வேந்தின்றுயர்தவிர்த்தானையெப்போதும்விரும்புமினே. (௭௧)

விரும்பும்புதல்வனைமெய்யரிந்தாக்கியவின்னமிர்த
மரும்பும்புனற்சடையாயுண்டருளென்றடிபணிந்த
இரும்பின்சுடர்க்களிற்றான்சிறுத்தொண்டனையேத்துதிரேற்
சுரும்பின்மலர்த்தமிழாகரன்பாதத்தொடர்வெளிதே. (௭௨)

எளிவந்தவாவெழிற்பூவரைஞாண்மணித்தார்சழுங்கத்
துளிவந்தகண்பிசைந்தேங்கலுமெங்களரன்றனையாங்
கிளிவந்தசொல்லிபொற்கிண்ணத்தின்ஞானவமிர்தளித்த
வளிவந்தபூங்குஞ்சியின்சொற்சிறுக்கன்றனாருளே. (௭௩)

அருளுந்தமிழாகரனின்னலங்கறந்தென்பெயர்ச்
சுருளுங்குழலியற்கிந்நிலையேமுன்புதூங்குகரத்
துருளுங்களிற்றினொடோட்டருவானையருளியன்றே
மருளின்மொழிமடவாள்பெயரென்கண்வருவிப்பதே. (எச)

வருவாருருவின்வழிவழிவைத்தவனமருந்துந்
திருவாரிருந்தசெழுநகர்ச்செவ்வித்திருவடிக்கா
டருவான்றமிழாகரன்கரம்போற்சலம்வீசக்கண்டு
வெருவாவணங்கொண்டல்கண்மிண்டிவானத்துமின்னியவே. ()

மின்னார்குடுமிநெடுவெற்பகங்கொங்கில்வீழ்பனிநோய்
தன்னார்வழிகெட்டழிந்தமைசொல்லுவர்காணிறையே
மன்னார்பரிசனத்தோர்மேற்புகலுமெவர்க்குமிக்க
நன்னாவலர்பெருமானருகாசனிநல்கிடவே. (எசு)

நல்கென்றடியிணைபணியார்சண்பைநம்பெருமான்
பல்கும்பெரும்புகழ்பாடகில்லார்சிலர்பாழ்க்கிறைத்திட்
டொல்குமுடம்பினராய்வழிதேடிட்டிடறிமுட்டிப்
பில்குமிடமறியார்கெடுவாருறுபேய்த்தனமே. (எஎ)

தனமேதருபுகழ்ச்சைவசிகாமணிதன்னருள்போன்
மனமேபுகுந்தமடக்கொடியேமலர்மேலிருந்த
வனமேயமிர்தக்குமுதச்செவ்வாயுங்களாயமென்னு
மினமேபொலியவண்டாடெழிற்சோலையுளெய்துகவே. (எஅ)

உகட்டித்துமோட்டுவராலினமேதிமுலையுரிஞ்ச
வகட்டிற்சொரிபாறடநிறைகொச்சைவயத்தரசைத்
தகட்டிற்றிகழ்மணிப்பூண்டமிழாகரன்றன்னையல்லாற்
பகட்டிற்பொலியினும்வேண்டேனொருவரைப்பாடுதலே. (எகூ)

பாடியசெந்தமிழாற்பழங்காசுபரிசில்பெற்ற
நீடியசீர்த்திருஞானசம்பந்தனிறைபுகழா
னேடியபூந்திருநாவுக்கரசோடெழின்மிழலைக்
கூடியகூட்டத்தினாலுளதாய்த்திக்குவலயமே. (அ0)

வலயத்திணிதோண்மிசைமழுவேற்றிமணப்புறத்து
நிலையெத்தனைபொழுதோகண்டதூரனைநீதிகெட்டார்
குலையக்கழுவின்குழுக்கண்டவன்றிகழ்கொச்சையன்ன
சிலையொத்தவாணுதன்முன்போன்மலர்கதிருக்கண்களே. (அக)

கண்ணார்திருநுதலோன்கோலக்காவிற்கரநொடியாற்
பண்ணார்தரப்பாடுசண்பையர்கோன்பாணிநொந்திடுமென்
றெண்ணுவெழுத்தஞ்சுமிட்டபொற்றாளங்களீயக்கண்டு
மண்ணார்சிலர்சண்பைநாதனையேத்தார்வருந்துவதே. (அஉ)

வருந்துங்கொலாங்கழன்மண்மிசையேகிடினென்றுமென்றாந்
திருந்தும்புகழ்ச்சண்பைஞானசம்பந்தற்குச்சீர்மணிகள்
பொருந்துஞ்சிவிகைகொடுத்தனன்காண்புணரித்திகழ்நஞ்
சருந்தும்பிரானம்மரத்துறையேயவரும்பொருளே. (அங)

பொருளெனவென்னைத்தன்பொற்கழல்காட்டிப்புகுந்தெனக்கிங்
கருளியசீர்த்திருஞானசம்பந்தனருளிலர்போல்
வெருளினமானின்மென்னோக்கிவிட்டுவிழுநிதியின்
றிரளினையாபரித்தன்னன்றுசாலவென்சிந்தனைக்கே. (அச)

சிந்தையைத்தேனைத்திருவாவடுதுறையுட்டிகழு
மெந்தையைப்பாடலிசைத்துத்தொலையாநிதியமெய்தித்
தந்தையைத்தீத்தொழின்மூட்டியகோன்சரண்சார்விலரே
னிந்தையைப்பெற்றிழியாதிரநந்தேகரநீட்டுவரே. (அரு)

நீட்டுவரோதத்தொடேறியசங்கநெருமுளரித்
தோட்டுவெண்முத்தஞ்சொரிசண்பைநாதற்றொழாதவரில்
வேட்டுவர்வேட்டதண்ணீரினுக்குண்ணீருணக்குழித்த
காட்டுவரூறல்பருகுங்கொலாமெங்கனங்குழையே. (அசு)

குழைக்கின்றகொன்றைபொன்போலமலராநுங்கூட்டமெல்லா
மழைக்கின்றகொண்டலியம்பொன்னிலையகன்றார்வரவு
பிழைக்கின்றதுசொலென்றஞ்சியொண்சண்பைப்பிரான்புறவத்
திழைக்கின்றகூடன்முடியவெண்ணுதவிளங்கொடிக்கே. (அஎ)

கொடித்தேரவுணர்குழாமனலூட்டியகுன்றவில்லி
யடித்தேர்கருத்தினருகாசனியையணியிழையார்
முடித்தேர்சமலங்கவர்வான்முரிபுருவச்சிலையால்
வடித்தேர்நயனக்கணையிணைகோத்துவளைத்தனரே. (அஅ)

வளைபடுதண்கடற்கொச்சைவயவன்மலர்க்கழற்கே
வளைபடுநீண்முடிவார்புனலூரன்றனிரிலங்கு
வளைபடுகண்ணியர்தம்பொதுத்தம்பலநாறுமிந்த
வளைபடுகிங்கிணிக்காண்மைந்தன்வாயின்மணிமுத்தமே. (அகூ)

முத்தனவெண்ணகையார்மயன்மாற்றிமுறைவழுவா
தெத்தனைகாலநின்றேத்துமவரினுமென்பணிந்த
பித்தனையெங்கள்பிரானையணைவதெளிதுசண்ட
ரத்தனைஞானசம்பந்தனைப்பாதமடைந்தவர்க்கே. (கூ0)

அடைத்ததுமாமறைக்காடர்தங்கோயிற்கதவினைபன்
றுடைத்ததுபாணன்றன்யாழின்னொலியையுரகவிடந்
துடைத்ததுதோணிபுரத்துக்கிறைவன்சுடரொளிவாய்
படைத்ததுதண்மையைநள்ளாற்றரசுபணித்திடவே. (கூக)

பணிபடுநுண்ணிடைபாதம்பொருபகைதமென்று
தணிபடுமின்சொற்களாற்றவிர்த்தேற்குத்தழுலுமிழ்கான்
மணிபடுபொற்கழன்ஞானசம்பந்தனமருவலர்போற்
றணிபடுவேலன்னகண்ணியென்னேவந்துதோன்றியதே. (கூஉ)

தோன்றறன்னேடுடனேகியசுந்தரப்பூண்முலையை
யீன்றவரேயிந்தவேந்திழையாரவரிவ்வளவில்
வான்றவர்சூழுந்தமிழாகரன்றன்வடவரையே
போன்றபொன்மாடக்கழுமலநாடுபொருந்துவரே. (கூ௩)

பொருந்திடுஞானத்தமிழாகரன்பதிபொற்புரிசை
திருந்தியதோணிபுரத்துக்கிறைவன்றிருவருளாற்
கருந்தடநீரெழுகாலையிற்காகூகழுமலமென்
றிருந்திடவாமென்றுவானவராகியயங்கியதே. (கூச)

இயலாதனபலசிந்தையராயியலுங்கொலென்று
முயலாதனவேமுயன்றுவன்மோகச்சுழியழுந்திச்
செயலார்வரைமதிற்காழியர்கோன்றிருநாமங்களுக்
கயலாரெனப்பலகாலங்கள்போக்குவராதர்களே. (௯௫)

ஆதரவும்பயப்பும்மிவளெய்தினளென்றயலார்
மாதரவஞ்சொல்லியென்னைநகுவதுமாமறையி
னோதரவம்பொலிகாழித்தமிழாகரனொடென்றே
நீதரவம்படவன்னையென்னேபலசெப்புவதே. (௯௬)

செப்பியவென்னதவமுயன்றேனல்லசெந்தமிழா
லொப்புநடமாலைத்தமிழாகரனையுணர்வுடையோர்
கற்புடைவாயமொழியேத்தும்படிகதறிட்டிவர
மற்படுதொல்லைக்கடல்புடைசூழ்தருமண்ணிடையே. (௯௭)

மண்ணிற்றிகழ்சண்பைநாதனைவாதினில்வல்லமணைப்
பண்ணைக்கழுவினுநிவைத்தெம்பந்தவினையறுக்குங்
கண்ணைக்கதியைத்தமிழாகரனையெங்கற்பகத்தைத்
திண்ணற்றொடையற்கவுணியர்தீபனைச்சேர்ந்தனமே. (௯௮)

சேரும்புகழ்த்திருஞானசம்பந்தனையானுரைத்த
பேருந்தமிழ்ப்பாவிவைவல்லவர்பெற்றவின்புலகங்
காருந்திருமிடற்றுயருளாயென்றுகைதொழுவர்
நீருமலருங்கொளாநெடுமாலும்பிரமனுமே. (௯௯)

பிரமாபுரம்வெங்குருசண்பைதோணிபுகலிகொச்சை
சிரமார்புரநற்புறவந்தராய்காழிவேணுபுரம்
வரமார்பொழிற்றிருஞானசம்பந்தன்பதிக்குமிக்க
பரமார்கழுமலம்பன்னிருநாமமிப்பாரகத்தே. (௧00)

பாரகலத்துன்பங்கடந்தமரராற்பணியு
மேரகலம்பெற்றாலுமின்னாதாற்—காரகிலின்
றூமங்கமழ்மாடத்தோணிபுரத்தலைவ
னாமஞ்செவிக்கிசையாநாள்.

திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பி

அருளிச்செய்த

ஆளுடையபிள்ளையார்

# திருச்சண்பைவிருத்தம்.

பாலித்தெழிறங்குபார்முசமுய்யப்பறிதலையோர்
மாலுற்றழுந்தவவதரித்தோன்மணிநீர்க்கமலத்
தாலித்தலர்மிசையன்னநடப்பவணங்கிதென்றூச்
சாலித்தலைபணிசண்பையர்காவலன்சம்பந்தனே. (க)

பொங்குதங்குங்குஞ்சிகூடாப்பருவத்துக்குன்றவில்லி
பங்குதங்கும்மங்கைதன்னருள்பெற்றவன்பைம்புணரிப்
பொங்குவங்கப்புனல்சேர்த்தபுதுமணப்புன்னையின்கீழ்ச்
சங்குதங்கும்வயற்சண்பையர்காவலன்சம்பந்தனே. (உ)

குவளைக்கருங்கட்கொடியிடைதுன்பந்தவிரவன்று
துவளத்தொடுவிடந்தீர்த்ததமிழின்றொகைசெய்தவன்
திவளக்கொடிக்குன்றமாளிகைச்சூளிகைச்சென்னியின்வாய்த்
தவளப்பிறைதங்குசண்பையர்காவலன்சம்பந்தனே. (௩)

கள்ளம்பொழினனிபள்ளித்தடங்கடமாக்கியஃதே
வெள்ளம்பணிநெய்தலாக்கியவித்தகன்வெண்குருகு
புள்ளொண்டவளப்புரிசங்கொடாலக்கயலுகளத்
தள்ளந்தடம்புனற்சண்பைபர்காவலன்சம்பந்தனே. (௪)

ஆறதேறுஞ்சடையானருண்மேவவவனியர்க்கு
வீறதேறுந்தமிழால்வழிகண்டவன்மென்கிளிமாந்
தேறல்கோதித்தாறுசண்பகந்தாவிச்செழுங்கமுகின்
றூறதேறும்பொழிற்சண்பையர்காவலன்சம்பந்தனே. (௫)

அந்தமுந்தும்பிறவித்துயர்தீரவரனடிக்கே
பந்தமுந்தாநதமிழ்செய்தபராபரன்பைந்தடத்தேன்
வந்துமுந்திநந்தமுத்தங்கொடுப்பவயற்கயலே
சந்தமுந்தும்பொழிற்சண்பையர்காவலன்சம்பந்தனே. (௬)

புண்டலைக்குஞ்சரப்போர்வையர்கோயிற்புகவடைக்கு
பொண்டலைத்தண்டமிழ்க்குண்டாசனியும்பர்பம்பிமின்னுங்
கொண்டலைக்கண்டுவண்டாடப்பெடையொடுங்கொக்குறங்குந்
தண்டலைக்குண்டகழ்ச்சண்பையர்காவலன்சம்பந்தனே. (௭)

எண்டலைக்குந்தலைவன்கழல்சூடியெனுள்ளம்வெள்ளங்
கண்டலைப்பத்தன்கழறந்தவன்கதிர்முத்தநத்தம்
விண்டலைப்பத்தியிலோடும்விரவிமிளிர்பவளந்
தண்டலைக்குங்கடற்சண்பையர்காவலன்சம்பந்தனே. (௮)

ஆறுமண்டப்பண்டுசெஞ்சொனடாத்தியமண்முழுதும்
பாறுமண்டக்கண்டசைவசிகாமணிபைந்தடத்த
சேறுமண்டச்சங்குசெங்கயறேமாங்கனிசிதறிச்
சாறுமண்டும்வயற்சண்பையர்காவலன்சம்பந்தனே. (௯)

விடந்திளைக்கும்மரவல்குன்மென்கூந்தல்பெருமணத்தின்
வடந்திளைக்குங்கொங்கைபுல்கியமன்மதன்வண்கதலிக்
கடந்திளைத்துக்கழுநீர்புல்கியொல்கிக்கருப்புரிஞ்சித்
தடந்திளைக்கும்புனற்சண்பையர்காவலன்சம்பந்தனே. (௧௦)

பாலித்தகொங்குகுவளைசள்ளம்பொழில்கீழ்ப்பரந்து
வாலிப்பவாறதேறுங்கழனிச்சண்பையந்தமுந்து
மேலிட்டபுண்டலைக்குஞ்சரத்தெண்டலைக்குந்தலைவன்
கோலிட்டவாறுவிடந்திளைக்கும்மரவல்குலையே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பி

அருளிச்செய்த

# ஆளுடையபிள்ளையார்

# திருமும்மணிக்கோவை.



## ஆசிரியப்பா.

நிலங்கட்கொழுந்தொடுபொங்கரவுதிர்க்கும
கங்கைப்பேரியாற்றுக்கடுவரக்கலுழியி
னிழியின்செம்பொனிருகரைசிதறிப
பதலெருக்குமலர்த்துமபுரிபுன்சடையோன்
றிருவருள்பெற்றவிருபிறப்பாளன்
முத்தீவேள்விநான்மறைவளர
வைவேள்வயர்ந்தவறுதொழிலாள
னேழிசையரசையெண்டிசையறியத்
தண்டப்படுத்தண்டமிழ்விரகன
காழிநாடன்கவுணியர்தலைவன்
பாமழைநோக்கிமலைமகள்புதல்வன
திருவாதிடபாடலவிரும்பினாக்கலைஞ
கடுந்துயருட்புகக்கைவிளிக்கும்மிக
நெடும்பிறவிக்கடனீந்துவதற்கே. (௧)

## வெண்பா.

ஆரியோடுநான்முகத்தோனாதிசுரர்க்கெல்லாந்
தெரியாமைசெந்தழலாய்நின்ற—வொருவன்சீ
தன்றலையின்மேற்றரித்தசம்பந்தன்றாளிணைக
ளென்றலையின்மேலிருக்கவென்று. (௨)

## கட்டளைக்கலித்துறை.

என்றுமடியவருள்ளத்திருப்பன விவ்வுலகோர்
நன்றுமலர்கொடுதூவித்துதிப்பன நல்லசங்கத்
தொன்றும்புலவர்கள்யாப்புக்குரியன வொண்கலியைப்
பொன்றுங்கவுணியன்சைவசிகாமணி பொன்னடியே. (௧)

## ஆசிரியப்பா.

அடுசினக்கடகரியதுபடவுரித்த
படர்சடைக்கடவுடன்றிருவருளதனாற்பிறந்தது
கழுமலமென்னுங்கடிநகரதுவே வளர்ந்தது
தேங்கமழ்வாவிச்சிலம்பரையன்பெறு
பூங்குழன்மாதிடுபோனகமுண்டே பெற்றது
குழகனைப்பாடிக்கோலக்காப்புக்
கழகுடைச்செம்பொற்றாளமவையேதிர்த்தது
நாதமர்மருகற்சடையனைப்பாடிப்
பேதுறுபெண்ணின்கணவனைவிடமேயடைத்த
தரைசோடிசையாவணிமறைக்காட்டுக்
குரைசேர்குடுமிக்கொழுமணிக்கதவேயறிற்
றத்தியுமாவுக்கவிரவரத்துறை
முத்தின்சிவிகைமுன்றூட்பெற்றேபாடிற்
றருமறையோத்தூராண்டனையத்தனைப்
பெருநிறமெய்தும்பெண்பனையாவேகொண்டது
பூவிடுமதுவிற்பொறிவண்டுழலு
மாவடுதுறையிற்பொன்னாயிரமேகண்ட
துறியொடுபீலியொருகையிற்கொள்ளும்
பறிதலைச்சமணைப்பல்கழுமிசையேற்றத்த
தவிழ்ச்சுவையேயறிந்தரனடிபரவுந்
தமிழ்ச்சுவையறியாத்தம்பங்களையேநினைக்க
தள்ளற்பழனக்கொள்ளம்பூது
ரிக்கரையோடமக்கரைச்செலவேயிக்கவ

ரூனசம்பந்தமறுத்துயக்கொளவல
ஞானசம்பந்தனிஞ்ஞாலத்திடையே. (௪)

## வெண்பா.

நிலத்துக்குமேலாறுநீடுலகத்துச்சித்
தலத்துக்குமேலேதானென்பர்—சொலத்தக்க
சுத்தர்கள்சேர்காழிச்சுரன் ஞானசம்பந்தன்
பத்தர்கள்போய்வாழும்பதி. (௫)

## கட்டளைக்கலித்துறை.

பதிகம்பலபாடிநீடியபிள்ளைபரசுதரற்
கதிகம்மனுக்கனமணர்க்குக்காலனவதரித்த
மதியந்தவழ்மாடமாளிகைக்காழியென்றும்வணங்கா
ரொதியம்பணைபோல்விழுவரந்தோசிலவூமர்களே. (௬)

## ஆசிரியப்பா.

கவளமாளிகைத்திவளுமியானையின்
கவுட்டலைக்கும்பத்
தும்பர்ப்பதணத்தம்புதந்திளைக்கும்
பெருவளந்தழீஇத்திருவளர்புகலி
விளங்கப்பிறந்தவளங்கொள்சம்பந்தன்
கருதியஞ்செவ்விச்சுருதியஞ்சிலம்பிற
ரேமருநினைவளர்காமருபுனத்து
மும்மதஞ்சொரியும்வெம்முகக்கைம்மா
மூரிமருப்பிற்சீரியமுத்துக்
கொடுஞ்சிலைவளைத்தேகொடுஞ்சரந்துரந்து
முற்படவந்தமுயன்றங்குதவிசெட
வெற்பனுக்கலது
சுணங்கணிமென்முலைச்சுரிகுழன்மாதினை
மணஞ்செயமதிப்பதுநமக்குவன்பழியே. (௭)

## வெண்பா.

பழிபொன்றுமோராதேடாயிடுக்கிவாளா
கழியுமேமண்ணகயர்தம்மை—யழியஅ
ராநகரங்காச்செற்ருன சுரும்பாறறும்பாத
ரைதாரப்போயநெஞ்சேநினை. (அ)

## கட்டளைக்கலித்துறை.

வினையாதரவெய்திமேகலைநெக்குவளைசரிவா
டனையாயவென்றின்றருளுதியேயடஞ்சாலிவாயற்
கனையாவருமேதிகன்றுக்கிரங்கித்தன்கால்வழிபா
லனையாவருங்காழிமேவியசீர்ஞானசம்பந்தனே. (௯)

## ஆசிரியப்பா.

தனமலிகமலத்திருவெனுஞ்செல்வி
விருப்பொடுதிளைக்கும்வியாவின்பத்
தாடகமாடநீடுதென்புகலிக்
காமருகவினூர்கவுணியர்தலைவ
பொற்பமர்தோளநற்றமிழ்விரக
மலைமகள்புதல்வகலைபயினுவநின்ருது
பொங்கொளிமார்பிற்றங்கியதிருநீ
றகரித்திறைஞ்சியபேதையர்கையில்
வெள்வளைவாங்கிச்செம்பொன்கொடுத்தலிற்
பிள்ளையாவதுதெரிந்ததுபிறர்க்கே. (௧௦)

## வெண்பா.

பிறவியெனும்பொல்லாப்பெருங்கடலைநீந்தத்
துறவியெனுந்தோற்றோணிகண்டீர்—நிறையுலகிற்
பொன்மாலைமார்பன்புனற்காழிச்சம்பந்தன்
றன்மாலைஞானத்தமிழ். (௧௧)

## கட்டளைக்கலித்துறை.

ஞானத்திரளையிலேயுண்டனையென்றுநாடறியச்
சோணந்தருகுழலார்சொல்லிடாமுன் சுரும்புசட்டுப்
பாணந்தருபங்கயத்தார்கொடுபடைச்சால்வழியே
கூனந்தருள்வயல்சூழ்காழிமேவிய கொற்றவனே. (௧௨)

## ஆசிரியப்பா.

அவனிதலநெரியவெதிரெதிர்மலைஇச்
சொரிமதக்களிற்றுமத்தகம்போழ்ந்து
செஞ்சேறுடிச்செல்வனவரியேயெஞ்சாப்
படவரவுச்சிப்பருமணிபிதுங்கப்
பிடரிடைப்பாய்வனபேழ்வாய்ப்புலியேயிடையிடைச்
செறியிருளுருவச்சேண்விசும்பதனிற்
பொறியெனவிழுவனபொங்கொளிமின்னே
யுறுசினவரையாலுந்தியகவழிக்
கரையாலுழல்வனகரடியின்சணனேநிரையார்
பொருகடலுதைந்தசுரிமுகச்சங்கு
செங்கயல்கிழித்தபங்கயமலரின்
செம்மடனிறையவெண்முத்துதிர்க்கும்
பழனக்கழனிக்கழுமலநாடன்
வைகையிலமணரைவாதுசெய்தறுத்த
சைவசிகாமணிசம்பந்தன்வெற்பிற்
சிறுநுடையவடன்பெருமுலைபுணர்வா
னெறியினில்வரலொழிநீமலையோனே. (௧௩)

## வெண்பா.

மலைத்தலங்கண்மீதேறிமாதவங்கள்செய்து
முலைத்தலங்கணித்தாலுமெய்ப்பர்—கலைத்தலைவன்
சம்பந்தற்காளாய்த்தடங்காழிகைகூப்பித்
தம்பந்தர்தீராததாம். (௧௪)

## கட்டளைக்கலித்துறை.

தாமரைமாதவிசேறியநான்முகன்றன்பதிபோற்
காமருசீர்வளர்காழிநன்னாடன்கவித்திறத்து
நாமருமாதவர்போலழகீந்துநல்விவில்லிபின்னே
நீர்மருவாதசுரத்தெங்ஙனேகுமெனேரிழையே. (௧௫)

## ஆசிரியப்பா.

இழைகெழுமென்முலையிதழிமென்மலர்கொய்த்
தழைவரவொசித்ததடம்பொழிலிதுவேகாமர்
சுனைகுடைந்தேறித்துகிலதுபுனையநின்
றெனையுங்கண்டுவெள்கிடமிதுவேதினைதொறும்
பாய்கிளியிரியப்பையவந்தேறி
யாயவென்றிருக்குமணிப்பரணிதுவேயீதே
யின்புறுசிறுசொல்லவைபலவியற்றி
யன்புசெய்தென்னையாட்கொளுமிடமேபொன்புரை
தடமலர்க்கமலக்குடுமியிலிருந்து
நற்றொழில்புரியுநான்முகனாட்டைப்
புற்கடைகழீஇப்பொங்குசராவத்து
நெய்த்துடுப்பெடுத்தழுத்தீப்புகையா
னொடுமறைக்குஞ்சேடுறுகாழி
யெண்டிசைநிறைந்ததண்டமிழ்விரக
னலங்கலந்தோங்கும்விலங்கலின்மாட்டுப்
பூம்புனமதனிற்காம்பனதோளி
பஞ்சிற்றிருந்தடிநோவப்போயெனை
வஞ்சித்திருந்தமணியறையிதுவே. (௧௬)

## வெண்பா.

வேழங்களெய்பவர்க்குவில்லாவதிக்கால
மாழங்கடன்முத்தம்வந்தலைக்கு—நீள்வயல்சூழ்

வாய்ந்ததிவண்மாடமதிற்காழிக்கோன்சிலம்பிற்
சாய்ந்ததுவண்டழையோதான். (௧௭)

## கட்டளைக்கலித்துறை.

தழைக்கின்றசீர்மிகுஞானசம்பந்தன்றடமலைவா
யழைக்கின்றமஞ்ஞைக்கலந்தனகோடலம்பெய்திடுவா
னிழைக்கின்றதந்தரத்திந்திரசாபநின்னெண்ணமொன்றும்
பிழைக்கின்றதில்லைநற்றேர்வந்துதோன்றிற்றுப்பெய்வளையே.()

## ஆசிரியப்பா.

வளைகான்மந்திமாமரப்பொந்தில்
விளைதேனுண்டுவேணுவின்றுணியாற்
பாறையிற்றுயில்பனைக்கைவேழத்தை
யுர்தியெழுப்புமந்தண்சிலம்பவஃதிங்
கென்னையரிங்குவருவர்பலரே
யன்னைகாணிலலர்தூற்றும்மேபொன்னோர்
சிறுபார்கரந்தவிளிகுரற்கிங்கிணி
சேவடிபுல்லிச்சில்குரலியற்றி
யமுதுண்செவ்வாயருவிதூங்கத்
தாளம்பிரியாத்தடக்கையசைத்துச்
சிறுகூத்தியற்றிச்சிவனருள்பெற்ற
நற்றமிழ்விரகன்பற்றலர்போல
விடுங்கியமனத்தொடுமொடுங்கியசென்று
பரிதியுங்குடகடற்பாய்ந்தனன்
கருதிநிற்பதுபிழைகங்குலிப்புனத்தே. (௧௯)

## வெண்பா.

தேம்புனமேயுன்னைத்திரிந்துதொழுகின்றேன்
வாம்புகழ்சேர்சம்பந்தன்மாற்றலர்போற்—றேம்பி
யழுதகன்றாளென்றுதணிமலையர்வந்தாற்
றெழுதகன்றாளென்றுநீசொல்லு. (௨௰)

## கட்டளைக்கலித்துறை.

சொற்செறிநீள்கவிசெய்தன்றுவைகையிற்றொல்லமணர்
ற்செறியாவண்ணங்காத்தசம்பந்தன்பயில்சிலம்பிற்
எற்செறிவார்சுனைநீர்குடைந்தாடுங்கனங்குழையை
பற்செறியாவணங்காத்திலைவாழியிரும்புனமே. (௨௧)

## ஆசிரியப்பா.

புனலறவறந்தபுன்முளிசுரத்துச்
சினமலிவேடர்செஞ்சரமுரீஇப்
படுகலைக்குளம்பின்முடுகுநாற்றத்
தாடுமரவினைகடிநியப்
பாடுதகையின்பஞ்சுரங்கேட்டுக்
கள்ளியங்கவட்டிடைப்பள்ளிகொள்ளும்
பொறிவரிப்புறவேயுறவலைகாணீநறைகமழ்
தேம்புனல்வாவித்திருக்கழுமலத்துப்
பையரவசைத்ததெய்வநாயகன்
றன்னருள்பெற்றபொன்னணிக்குன்ற
மானசம்பந்தமண்மிசைத்துறந்த
ஞானசம்பந்தனைநயவார்கிளைபோல்
வினையேனிருக்குமனைபிரியாத
வஞ்சிமருங்குலஞ்சொற்கிள்ளை
யேதிலன்பின்செலவிலக்காதொழிந்தனை
யாதலிற்புறவேயுறவலைநீயே. (௨௨)

## வெண்பா.

அலைகடலின்மீதோடியர்றுளையர்வீசும்
வலைகடலில்வந்தேறுசங்க—மலர்கடலை
வெண்முத்தவிழ்வயல்சூழ்வீங்குபுனற்காழியே
யொண்முத்தமிழ்பயந்தானூர். (௨௩)

## கட்டளைக்கலித்துறை.

ஊரும்பசும்புரவித்தேரொளித்ததொளிவிசும்பிற்
கூருமிருளொடுகோழிகண்டுஞ்சாகொடுவினையேற்
காருமுணர்ந்திலர்ஞானசம்பந்தனந்தாமரையின்
றாருந்தருகிலனெங்ஙனம்யான்சங்குதாங்குவதே. (௨௪)

## ஆசிரியப்பா.

தேமலிகமலப்பூமலிபடப்பைத்
தலைமுகடேறியிளவெயிற்காயுங்
கவடிச்சிறுகாற்கர்க்கடகத்தைச்
சுவடிச்சியங்குஞ்சூனரிமுறுகைக்
துன்னியெழுந்துசெந்நென்மோதுங்
காழிநாட்டுக்கவுணியர்குலத்தை
வாழத்தோன்றியவண்டமிழ்விரகன்
றெண்டிரைக்கடல்வாய்க்
காண்டகுசெவ்விக்களிறுகளுகுத்த
முட்டைமுன்கவரும்பெட்டையங்குருகே
வாடையடிப்பவைகறைப்போதிற்
றனிநீபோந்துபனிநீரொழுகக்
கூசிக்குளிர்ந்துபேசாதிருந்து
மேனிவெளுத்தகாரணமுரையா
யிங்குத்தணந்தெய்திநுமரு
மின்னனம்வந்திலரோசொல்லிளங்குருகே. (௨௫)

## வெண்பா.

துருகும்பணிலமுங்கூனந்துஞ்சேலும்
பெருகும்வயற்காழிப்பிள்ளை—யருகந்தர்
முன்கலங்கநட்டமுடைகெழுமியாலின்னம்
புன்கலங்கல்வைகைப்புனல். (௨௬)

## கட்டளைக்கலித்துறை.

புனமாமயில்சாயல்கண்டுமுன்போகாகிளிபிரியா
வினமான்விழியொக்குமென்றுவிட்டேகாவிருநிலத்துக்
கனமாமதிற்காழிஞானசம்பந்தன்கடன்மலைவாய்த்
தினைமாதிவள்காக்கவெங்கேவிளையுஞ்செழுங்கதிரே. (௨எ)

## ஆசிரியப்பா.

கதிர்மதிநுழையும்படர்சடைமகுடத்
தொருத்தியைக்கரந்தவிருத்தனைப்பாடி
முத்தின்சிவிகைமுன்னாட்பெற்ற
வத்தன்காழிநாட்டுறையணங்கோமொய்த்தெழு
தாமரையல்லித்தவிசிடைவளர்ந்த
காமருசெல்வக்கனங்குழையவளோமீமருத்
தருவளர்விசும்பிற்றவநெறிகலக்கு
முருவளர்கொங்கையுருப்பசிதானோ
வாருணக்கொம்போமதனன்கொடியோ
வாரணியத்துளருந்தெய்வமதுவோ
வண்டமர்குழலுங்கெண்டையங்கண்ணும்
வஞ்சிமருங்குங்கிஞ்சுகவாயு
மேந்திளமுலையுங்காந்தளங்கையு
மோவியர்தங்களொண்மதிகாட்டும்
வட்டிகைப்பலகைவான்றுகிலிகையா
லியக்குதற்கரியதோருருவுகண்டென்னை
மயக்கவந்துதித்ததோர்வடிவிதுதானே. (௨அ)

## வெண்பா.

வடிக்கண்ணியாளையிவ்வான்சுரத்தினூடே
கடிக்கண்ணியானோடுங்கண்டோம்—வடிக்கண்ணி
மாம்பொழில்சேர்வைகையமண்மலைந்தான்வண்காழிப்
பூம்பொழிலேசேர்ந்திருப்பார்புக்கு. (௨௯)

## கட்டளைக்கலித்துறை.

குருந்துந்தரளமும்போல்வண்ணவெண்ணகைக்கொய்மலராள்
பொருந்துந்திரள்புயத்தண்ணல்சம்பந்தன்பொற்றாமரைக்கா
னருந்துந்திரள்கொங்கைமங்கையைவாட்டினைவானகத்தே
திருந்துந்திரண்முகின்முந்திவந்தேறுதிங்கட்கொழுந்தே. (௩௦)

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பி

அருளிச்செய்த

# ஆளுடையபிள்ளையார் திருவுலாமாலை.



திருந்தியசீர்ச்செந்தாமரைத்தடத்துச்சென்றோ
ரிருந்தணிளமேதிபாயப்—பொருந்திய
புள்ளிரியப்பொங்குகயல்வெருவப்பூங்குவளைக்
கள்ளிரியச்செங்கழுநீர்கால்சிதையத்—துள்ளிக்
குருகிரியக்கூனிறவம்பாயக்களிறு
முருகுவிரிபொய்கையின்கண்மூழ்க—வெருவுற்ற
கோட்டகத்துப்பாய்வாளைகண்டலவன்கூசிப்போய்த்
தோட்டகத்தசெந்நெற்றுறையடையச்—சேட்டகத்த
காவிமுகமலரக்கார்நீலங்கண்படுப்ப
வாவிக்கணெய்தலலமர—மேவிய
வன்னந்துயிலிழப்பவஞ்சிறைசேர்வண்டினங்க
ளின்னுந்துணையிழப்பச்சூழ்கிடங்கின்—மன்னிய
வள்ளைநகைகாட்டவண்குமுதம்வாய்காட்டத்
தெள்ளுபுனற்பங்கயங்கடேன்காட்ட—மெள்ள
நிலவுமலரணையினின்றிழிந்தசங்க

மிலருகதிர்நித்திலங்களினை—வுலவிய
மல்லைப்பழனத்துவார்பிரசமீதழிய
வொல்லைவரம்பிடறியோடிப்போயப்—புல்லிய
பாசடையச்செங்நெற்படரொளியாற்பல்கதிரோன்
றேசடையவோங்குசெறுவுகளு—மாசிலிரு
நித்திலத்தின்சாயுநிகழ்மரகதத்தோலுந்
தொத்தொளிசெம்பொற்றொழிறபரிய—மொய்த்த
பவளத்தின்செய்வியும்பாங்கணையவோங்கித்
திவளக்கொடிமருங்கிற்சேர்த்தித்—துவளாமைப்
பட்டாடைகொண்டுடுத்துப்பைந்தோடிலங்குகுழை
யிட்டமைந்தகண்ணாறிளங்கமுகும்—விட்டொளிசேர்
கண்களழல்சிதறிக்காய சினத்துவாய்மதத்துந்
தண்டலையினீழற்றறியணைந்து—கொண்ட
கொலைபுரியாநீர்மையவாய்க்கொம்புவளைத்தேந்தி
மலையுமரவடிவங்கொண்டாங்—கிலைநெருங்கு
குநத்திரளுந்தொகுகனிகளானிவந்த
மேதகுசீர்த்தெங்கின்வியன்பொழிலும்—போதாற்
றினமொருங்குசெவ்வியவாயின்றேன்றதும்பு
கனிநெருங்குதிண்கதலிக்காடு—நனிவிளங்கு
நாற்றத்தாலெண்டிசையும்வந்துநலஞ்சிறப்ப
வூற்றுமடுத்தவுயர்பலவு—மாற்றமரு
மஞ்சமெழில்வனமுமாதுளையின்வார்பொழிலு
மிஞ்சியிளங்கரிவினீட்டமு—மஞ்சாத
கூழைக்கமுகுங்குளிர்பாடலத்தெழிலும்
வாய்ந்தசீர்ச்சண்பகத்தின்வண்காடு—மேந்தெழிலார்
மாதவியும்புன்னையுமன்னுமலர்க்குரவுஞ்
சேதகையுமெங்குஞ்செறிந்து—போதி
னிளந்தென்றல்வந்தசைப்பவெண்டிசையும்வாசம்
வளர்ந்துன்றுவார்பொழிலின்மாடே—கிளர்ந்தெங்கு
மாலையொலியுமரிவார்குரலொலியுஞ்

சோலைக்கிளிமிழற்றுஞ்சொல்லொலியு—மாலு
மறுபதங்களார்ப்பொலியுமான்றபொலிவெய்தி
யுறுதிரைநீர்வேலையொலியப—வெறிகமழு
நாதாவனத்திடல்புகற்றவந்தோர்சாரவிடமு
மந்தமிலச்சிராரழகினொ—முந்திப்
புகழ்வாருநதன்மையதாயபபூதலத்துளோங்கி
ரிழமிடங்குநஞ்சூழ்டப்பதேரே—நிகழ
முளைநிரைத்துமூரிச்சிறைவருத்துமொயத்த
புரகப்தின்பாம்புரிசூழ்போல—வளர
விருமபதணஞ்சேரவிருத்தியெழிலுஞ்சின்
பெருங்கலையவட்டாலையிட்டுப்—பொருந்தியசீர்த்
தோமரமுந்தொலைப்பொறியீசிய நதிரமுங்
கமரமுமெப்பிழையுங்கைகலந்து—மீமருவும்
வெங்கதிரோன்றேர்விலக்குமிக்குயர்ந்தமேருபோன்
றங்கனகத்திஞ்சியணிபெறறுப்—பொங்கொளிசேர்
பாளிகையுமன்னியசீர்மண்டபமுமொண்டலத்து
குளிகையுந்துற்றெழுந்தகெற்றிகளும்—வாளொளிய
நாடகசாலையு நன்பொறகபோதகஞ்சேர்
பீடமைத்தமாடத்தின பெற்றியும்—கேடி
லுருவுபெறவகுத்தவம்பலமுமோங்கு
தெருவுவகுத்தசெயகுன்று—மருவினிய
சித்திரக்காவுஞ்செழும்பொழிலும்வாவிகளு
நித்திலஞ்சேர்நீடுநிலைக்களமு—மெத்திசையுந்
துன்னியெழில்சிறப்பச்சோதிமலர்மடந்தை
மன்னிமகிழந்துறையும்வாய்மைத்தாயப்—பொன்னு
மரகதமுநித்திலமுமாமணியும்பேணி
யிரவலர்கட்கெப்போதுமீந்துங்—கரவாது
கற்பகமுங்காருமெனக்கற்றவர்க்கு நற்றவர்க்குந்
தப்பாக்கொடைவளர்க்குஞ்சாயாத—செப்பத்தாற்
பொய்ம்மைகடிந்துபுகழ்புரிந்துபூதலத்து

மெய்ம்மைதலைசிறந்துமேதக்கு—முண்மை
மறைபயில்வார்மன்னுவியாகரணக்கேள்வித்
துறைபயில்வார்தொன்னூல்பயில்வார்—முறைமையினா
லாகமங்கள்கேட்பாரருங்கலைநூலாதரித்துப்
போகமொடுங்காப்பொருடுய்ப்பார்—சோகமின்றி
நீதிநிலையுணர்வார்நீணிலத்துளைம்புலனுங்
காதல்விடுதவங்கள்காமுறுவா—ராதி
யருங்கலைநூலோதுவாராதரித்துவென்றிக்
கருங்கலியைநீங்கக்கனல்வகுப்பா—ரொருங்கிருந்து
காமநூல்கேட்பார்கலைஞானங்காதலிப்பா
ரோமநூலோதுவாருந்தரிப்பார்—பூமன்னு
நான்முகனேயன்னசீர்நானூற்றுவர்மறையோர்
தாமன்னிவாழுந்தகைமைத்தாய்—நாமன்னு
மாரணங்குமற்றையருந்ததியும்போன்மடவா
ரோரணங்குமாடத்தினிருந்து—சீரணங்கு
வீணைபயிற்றுவார்யாழ்பயில்வார்மேவியசீர்ப்
பாணம்பயில்வார்பயனுறுவார்—பேணியசீர்ப்
பூவைக்குப்பாட்டுரைப்பார்பொற்கிளிக்குச்சொற்பயில்வா
பாவைக்குப்பொன்புனைந்துபண்புறுவா—ராயெங்கு
மங்கையர்கள்கூட்டமுமன்னுசிறார்குழுவும்
பொங்குலகமெல்லாம்பொலிவடையத்—தங்கிய
வேதவொலியும்விழாவொலியுமெல்லியலார்
கீதவொலியுங்கிளர்ந்தோங்கு—மாதரார்
பாவையொலியும்பறையொலியும்பல்சனங்கள்
மேவுமொலியும்வியனகரங்—காவலர்கள்
பம்பைத்துடியொலியும்பௌவப்படையொலியுங்
கம்பக்களிற்றொலியுங்கைகலந்து—நம்பிய
கார்முழக்குமற்றைக்கடன்முழக்கும்போற்கலந்த
சீர்முழக்கமெங்குஞ்செவிடுபடப்—பார்விளங்கு
செல்வநிறைந்தவூர்சீரிற்றிகழ்ந்தவூர்

மல்குமலர்மடந்தைமன்னுமூர்—சொல்லினிய
ஞாலத்துமிக்கவூர்நானூற்றுவர்களூர்
வேலொத்தகண்ணார்விளங்குமூ—ராலித்து
மன்னிருகால்வேலைவளர்வெள்ளத்தும்பரொடும்
பன்னிருகானீரின்மிதந்தவூர்—மன்னும்
பிரமனூர்வேணுபுரம்பேரொலிநீர்ச்சண்பை
யரன்மன்னுதண்காழியம்பொற்—சிரபுரம்
பூந்தராய்கொச்சைவயம்வெங்குருப்பொங்குபுனல்
வாய்ந்தநற்றோணிபுரமறையோ—ரேய்ந்த
புகலிசழுமலம்பூம்புறவமென்றிப்
பகர்கின்றபண்பிற்றதாகித்—திகழ்கின்ற
மல்லைச்செழுநகரமன்னவும்வல்லமணை
ரொல்லைக்கழுவிலுலக்கவு—மெல்லையிலா
மாதவத்தோர்வாழவும்வையகத்தோருய்யவு
மேதக்கவானோர்வியப்பவு—மாதியாம்
வென்றிக்கலிகெடவும்வேதத்தொலிமிசவு
மொன்றிச்சிவனடியாரோங்கவுந்—துன்றிய
பன்னுதமிழ்ப்பதினாறாயிரநற்பனுவன்
மன்னுபுவியவர்க்குவாய்ப்பவு—முன்னிய
சிந்தனையாற்சீரார்கவுணியர்க்கோர்சேயென்ன
வந்தங்கவதரித்தவள்ளலை—யந்தமில்சீர்
ஞானச்சுடர்விளக்கைநற்றவத்தோர்கற்பகத்தை
மானமறையவற்றின்வான்பொருளை—யானசீர்த்
தத்துவனைநித்தனைச்சைவத்தவரரசை
வித்தகத்தாலோங்குவிடலையை—முத்தமிழின்
செஞ்சொற்பொருள்பயந்தசிங்கத்தைத்தெவ்வருயி
ரஞ்சத்திகழ்ந்தவடலேற்றை—யெஞ்சாமை
யாதிச்சிவனருளாலம்பொன்செய்வட்டிலிற்
கோதிலமிர்தநுகர்குஞ்சரத்தைத்—தீதறுசீர்க்
காலத்தொகுதியுநான்மறையின்காரணமு

மூலப்பொருளுமுழுதுணர்ந்த—சீலத்
திருஞானசம்பந்தனென்றுலகஞ்சேர்ந்த
வொருநாமத்தானுயர்ந்தகோவை—வருபெருநீர்ப்
பொன்னிவளநாடனைப்பூம்புகலிநாயகனை
மன்னர்தொழுதிறைஞ்சுமாமணியை—முன்னை
நிலவுமுருகற்குநீலநக்கற்குந்
தொலைவில்புகழ்ச்சிறுத்தொண்டற்குங்—குலவிய
தோழமையாய்த்தொல்லைப்பிறப்பறுத்தசுந்தரனை
மாழையொண்கண்மாதர்மதனனைச்—சூழொளிய
கோதைவேற்றென்னன்றன்கூடற்குலநகரில்
வாதிலமணர்வலிதொலையக்—காதலாற்
புண்கெழுவுசெம்புனலாறோடப்பொருதவரை
வண்கழுவிற்றைத்தமறையோனை—யொண்கெழுவு
ஞாலத்தினரறியமன்னுநணிபள்ளியது
பாலைதனைநெய்தலாக்கியுங்—காலத்து
நீரெதிர்ந்துசென்றுநெருப்பிற்குளிர்படைத்தும்
பாரெதிர்ந்தபல்விடங்கடீர்த்துமுன்—னேரெழுந்த
யாழைமுரித்துமிருங்கதவந்தானடைத்துஞ்
சூழ்புனலின்மேலோடத்தொழில்புரிந்துந்—தாழ்பொழில்சூழ்
கொங்கிற்பனிநோய்பரிசனத்தைத்தீர்ப்பித்துந்
துங்கப்புரிசைதொகுமிழலை—யங்கதனி
னித்தன்செழுங்காசுகொண்டுநிகழ்நெல்வாயின்
முத்தின்சிவிகைமுதல்கொண்டு—மத்தகுசீர்
மாயிருஞாலத்துமன்னுவடுதுறைபுக்
காயிரஞ்செம்பொனதுகொண்டு—மாய்வரிய
மாண்புதிகழும்பெருமான்மன்னுதிருவோத்தூரி
லாண்பனைகள்பெண்பனைகளாக்கியும்—பாண்பரிசிற்
கைப்பாணியொத்திக்காழிக்கோலக்காவிற்பொற்
சப்பாணிகொண்டுதராதலத்து—வெப்பொழுது
நீக்கரியவின்பத்திராகமிருக்குக்குற

ணைக்கரியபாசுரம்பல்பந்தோடு—மாக்கரிய
யாழ்முரிசக்கரமாற்றிரடிமுக்காலும்
பாழிமையாற்பாரகந்தோர்தாமுய்ய—வூழி
யுரைப்பமரும்பல்புகழாலோங்கவுமைகோனைத்
திருப்பதிகம்பாடவல்லசேயை—விருப்போடு
நண்ணுபுகழ்மறையோர்நாற்பத்தெண்ணாயிரவ
ரெண்ணின்முனிவரரீட்டத்துப்—பண்ணமரு
மோலக்கத்துள்ளிருப்பவொண்கோயில்வாயில்கட
கோலக்கடைகுறுகிக்கும்பிட்டாங்—காலும்
புகலிவளநகருட்பூசுரர்புக்காங்
ககலிற்புகழ்பரவியேத்திப்—புகலிசேர்
வீதியெழுந்தருளவேண்டுமெனவிண்ணப்ப
மாதரத்தாற்செயயவர்க்கருளி—நீதியார்
கேதகையுஞ்சண்பகமுநேர்கிடத்திக்கூந்தாமுக
மாதவியின்போதைமருங்கணைத்துக்—கோதி
லிருவேலிதன்னையிடையிருத்தியீண்டு
மருவோடுமல்லிகையைவைத்தாங்—கருகே
கருமுகையைக்கைகலக்கவைத்துக்கழுநீர்ப
பெருகுபிளவிடையேபெய்து—முருகியலும்
புன்னாகந்தன்னைப்புணரவிருவாச்சி
தன்னையலேமுல்லைதலையெடுப்ப—மன்னிய
வண்செருந்திவாய்நெகிழ்ப்பமௌவலலர்படைப்ப
தண்செருந்துமாடேதலையிறக்க—வொண்கமலத்
தாதுடுத்தகண்ணியாற்றண்ணறுங்குஞ்சிமேற்
போதடுத்தகோலம்புனைவித்துக்—காதிற்
கனவயிரகுண்டலங்கள்சேர்த்திக்கழுத்தி
னினமணியினாரமிலகப்—புனைகனகத்
தொத்தடுத்தபூஞ்சுரிகைச்சோதிசேர்தாளிம்பம
வைத்துமணிக்கண்டிகைபூண்டு—முத்தடுத்த
கேயூரந்தோண்மேற்கிடத்திக்கிளர்பொன்னின்

வாய்மைபெறுநூல்வலந்திகழ—வேயுந்
தமனியத்தின்றாழ்வடமுந்தண்டரளக்கோப்புஞ்
சிமையவரைமார்பிற்சேர்த்தி—யமைவுற்ற
வெண்ணீற்றின்றிண்கனபமட்டித்துமேவுதொழி
லொண்ணூற்கலிங்கமுடல்புனைந்து—திண்ணோக்கிற்
காற்றுருமோகுன்றோகடலோவடனுருமோ
கூற்றுருவோவென்னக்கொதித்தெழுந்து—சீற்றத்
தழல்விழித்துநின்றெதிர்ந்துதாலவட்டம்வீசிப்
புழைதடக்கைகொண்டெறிந்துபொங்கி—மழைமதத்தாற்
புத்தகடதடத்துப்போகமிகப்பொலிந்த
காத்திரத்ததாகிக்கலித்தெங்கும்—சோத்த
கொடிநிகளம்போக்கிமிர்கொண்டெழுந்துகோபித்
திடுவண்ணையிட்டுக்கலித்து—முடுகி
நெடுநிலத்தைத்தாழக்கிநின்றுநிகர்நீத்
திடிபெயரத்தாளர்திலுப்பி—யடிசினத்தாற்
கன்றுமுகம்பருங்கைக்கையெடுத்தாராய்ந்து
வென்றிமருப்புருவவெய்துயிர்த்—தொன்றிய
கூடமரணழித்துக்கோபுரங்களைக்குத்தி
நீடுபொழிலைநிகரழித்—தோடிப்
பணைப்பாகரைப்பரிந்துகுத்திப்பறித்து
நிணைப்பாகைநீள்விசும்பின்வீசி—யணைப்பரிய
வோடைக்கருங்களிற்றையொண்பரிக்காரர்கடா
மடனையக்கொண்டுவருதலுமே—கூடி
நயந்துகுரற்கொடுத்துநட்பளித்துச்சென்று
வியந்தனுகிவேட்டந்தணித்தாங்—குயர்ந்த
வுடற்றாயவாசிதனைப்பற்றிமேல்கொண்டாங்
கடற்கூடர்சந்தியனுகி—யடுத்த
பயில்பலவும்பேசிப்படுபுரசைநீக்கி
யயர்வுகெடவணைத்துத்தட்டி—யுயர்தரு
தண்டுபேரோசையின்கட்டாள்கோத்துச்சீர்ச்சிறுத்

தொண்டர்பிறகணையத்தோன்றுதலு—மெண்டிசையும்
பல்சனமுமாவும்படையும்புடைகிளர
வொல்லொலியாலோங்குகடல்கிளர—மல்லற்
பரித்தூரங்கொட்டப்படுபணிலமார்ப்பக்
கருத்தோடிசைகவிஞர்பாட—விரித்த
குடைபலவுஞ்சாமரையுந்தொங்கல்களுங்கூடிப்
புடைபரந்துபொக்கம்படைப்பக்—கடைபடு
வீதியணுகுதலும்வெள்வளையாருண்மகிழ்ந்து
காதல்பெருகிக்கலர்தெங்குஞ்—சோதிசே
ராடரங்கின்மேலுமணிமாளிகைகளிலுஞ்
சேடரங்குநீண்மறுகுந்தெற்றியிலும்—பீடுடைய
பேரிளம்பெண்ணீறாகப்பேதைமுதலாக
வாரிளங்கொங்கைமடநல்லார்—சீர்விளங்கப்
பேணுஞ்சிலம்பும்பிறங்கொளிசேராரமும்
பூணும்புலம்பப்புறப்பட்டுச்—சேண்மறுகிற்
காண்டகையவென்றிக்கருவரைமேல்வெண்மதிபோ
லீண்டுகுடையினெழிலிழற்கீழ்க்—காண்டலுமே
கைதொழுவார்நின்றுகலைசரிவார்மால்கொண்டு [ருப்
மெய்தளர்வார்வெள்வளைகள்போய்வீழ்வார்—வெய்துயிர்த்
பூம்பயலைகொள்வார்புணர்முலைகள்பொன்பயப்பார்
காம்பனையமென்றோட்கவின்கழிவார்—தாம்பயந்து
வென்றிவேற்சேயன்னவேனில்வேட்கோவென்ன
வன்றென்னவாமென்னவையுற்றுச்—சென்றணுகிக்
காழிக்குலமதலையென்றுதங்கைசோர்ந்து
வாழிவளைசரியநின்றயர்வார்—பாழிமையா
லுள்ளநிலைதளர்ந்தவொண்ணுதலார்வெல்களிற்றை
மெள்ளநடவென்றுவேண்டுவார்—கள்ளலங்க
ஞராமையன்றிபுந்தையனல்லார்முகத்தைப்
பாராமைசாலப்பயனென்பார்—நேராக
வென்னையேநோக்கினானேந்திழையீரிப்பொழுது

நன்மைநமக்குண்டெனநயப்பார்—கைம்மையா
லொண்கலையுநாணுமுடைதுகிலுந்தோற்றவர்கள்
வண்கமலத்தார்வலிந்துகோடுமெனப்—பண்பின்
வடிக்கண்மலர்வாளிவார்புருவம்வின்மேற்
றொடுத்ததரந்தொண்டைதுடிப்பப்—பொடித்தமுலைக்
காமக்கருங்குழலார்காதற்கவுணியன்பாற்
பூசற்கமைந்துபுறப்படுவார்—வாசச்
செழுமலர்த்தாரின்றெனக்குநல்காதேசீரார்
கழுமலத்தார்கோவேசழல்க—டொழுவார்க
ணங்கோல்வளையிழக்கப்போவதுநின்னுடைய
செங்கோன்மையோவென்றுசெப்புவார்—நங்கைமீ
ரின்றிவனல்குமேயென்பெருங்குன்றத்தி
லென்றமணர்கூட்டத்தையாசழித்துப்—பொன்ற
வுரைகெழுவுசெந்தமிழ்ப்பாவொன்றினால்வென்றி
நரைகழுமேலுய்த்தானைநேர்ந்து—விரைமலர்த்தார்
பெற்றிடலாமென்றிருந்தநம்மிலும்பேதையர்கண்
மற்றுளரோவென்றுவகுத்துரைப்பார்—மற்றிவனை
பெண்ணிரக்கமன்றேபிறைநுதலீர்மாசுணத்தி
னெண்ணுகடுவிடத்தாருட்சென்று—விண்ணுற்ற
வாருயிரைமீட்டன்றவளையணிமருக
லூரறியவைத்ததெனவுரைப்பார்—பேரிடரா
லேசுவார்தாமுற்றவேசறவைத்தோழியர்முன்
பேசுவார்நின்றுதம்பீடழிவா—ராசையா
னைவார்நலனழிவார்நாணோடுபூணிழப்பார்
மெய்வாடுவார்வெகுள்வார்வெய்துயிர்ப்பார்—தையலார்
பூந்துகிலைப்பூமாலையென்றணிவார்பூவினைமுன்
சாந்தமெனமெய்யிற்றைவருவார்—வாய்ந்த
கிளியென்றுபாவைக்குச்சொற்பயில்வார்பந்தை
யொளிமேகலையென்றுடுப்பா—ரளிமேவு

பூங்குழலார்மையலாய்க்கைதொழமுன்போதந்தா
னோங்கொலிசேர்வீதியுலா.

திருச்சிற்றம்பலம்.

—ooo—

திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பி

அருளிச்செய்த

# ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்.



## ஒருபோகு கோச்சகக்கலிப்பா.

அலையார்ந்தகடலுலகத்தருந்திசைதோறங்கங்கே
நிலையார்ந்தபலபதிகநெறிமனிதர்க்கினிதியற்றி
யீங்கருளியெம்போல்வார்க்கிடர்கெடுத்தல்காரணமா
வோங்குபுகழ்ச்சண்பையெனுமொண்பதியுளுதித்தனையே

செஞ்சடைவெண்மதியணிந்தசிவனெந்தைதிருவருளாற்
வஞ்சியனநுண்ணிடையாண்மலையரையன்மடப்பாவை
நற்கண்ணியளவிறந்தஞானத்தையமிர்தாக்கிப்
பொற்கிண்ணத்தருள்புரிந்தபோனகமுன்னுகர்ந்தனையே

தோடணிகாதினனென்றுந்தொல்லமரர்க்கெஞ்ஞான்றுந்
தேடரியபராபரனைச்செழுமறையினகன்பொருளை
யந்திச்செம்மேனியனையடையாளம்பலசொல்லி
யுந்தைக்குக்காணவரனுவனுமென்றுரைத்தனையே

[இவைமூன்றும் நான்கடித்தாழிசை.

வளரொலிதமிழிசைவடகலைமறைவல
முளரிநன்மலரணிதருதிருமுடியினை

கடல்படுவிடமடைகறைமணிமிடறுடை
யடல்கரியுரியனையறிவுடையளவினை
[இவையிரண்டும் அராகம்.]

கரும்பினுமிக்கினியபுகழ்க்கண்ணுதல்விண்ணவனடிமேற்
பரம்பவிரும்புவியவர்க்குப்பத்திமையைவிளைத்தனையே

பன்மறையோர்செய்தொழிலும்பரமசிவாகமவிதியு
நன்மறையின்விதிமுழுதும்மொழிவின்றிநவின்றனையே
[இவையிரண்டும் இரண்டடித்தாழிசை.]

அணிதவத்தவர்களுக்கதிகவித்தகனுநீ
துணிமனத்தருளுடைத்தவநெறிக்கமிர்தநீ
சமணரைக்கழுநுதிக்கணைவுறுத்தவனுநீ
தமிழ்நலத்தொகையினிற்றகுசுவைப்பனுவனீ
[இவைநான்கும் நாற்சீரோரடியம்போதரங்கம்.]

மறையவர்க்கொருவனீ
மருவலர்க்குருமுநீ
நிறைகுணத்தொருவனீ
நிகரிலுத்தமனுநீ
[இவைநான்கும் முச்சீரோரடியம்போதரங்கம்.]

அரியைநீ
யெளியைநீ
யறவனீ
துறவனீ
பெரியைநீ
யுரியைநீ
பிள்ளைநீ
வள்ளனீ
[இவையெட்டும் இருசீரோரடியம்போதரங்கம்.]

எனவாங்கு [இது தனிச்சொல்.]

சுருந்தமிழ்விரகநிற்பரசுதுர்திருந்திய
நிரைச்செழுமாளிகைநிலைதொறுநிலைதொறு
முரைச்சதுர்மறையிளேங்கியவொலிசேர்
சீர்கெழுதழனித்திருமுகம்பொலிவுடைத்
தார்கெழுதண்டலைத்தண்பணைதழீஇக்
கற்றொருபுரிசைக்காழியர்நாத
நற்றொருகீர்த்திஞானசம்பந்த
நின்பெருங்கருணையைநீதியி
னன்புடையடியவர்க்கருளுவோயெனவே. [இது சுரிதகம்.]

## வெண்பா.

எனவேயிடரசலுமின்பமேயெய்து
நனவேயரனருளைநாடும்—புனலேய
செங்கமலத்தண்டார்த்திருஞானசம்பந்தன்
கொங்கமலத்தண்காழிக்கோ. (௨)

## கட்டளைக்கலித்துறை.

கோலப்புலமணிசுந்தரமாளிகைக்குந்தளவா
ரேலப்பொழிலணிசண்பையர்கோனையிருங்கடல்சூழ்
ஞாலத்தணிபுகழ்ஞானசம்பந்தனைநற்றமிழே
போலப்பலபுன்கவிகொண்டுசேவடிபோற்றுவனே. (௩)

## எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

போற்றுவாரிடர்பாற்றியபுனிதன்
பொழில்சுலாவியபுகலியர்பெருமா
னேற்றவார்புகழ்ஞானசம்பந்த
னெம்பிரானிருஞ்சுருதியங்கிரிவாய்ச்
சேற்றுவார்புனங்காவல்புரிந்தென்
சிந்தைகொள்வதுஞ்செய்தொழிலானுன்

மாற்றநீரெமக்கின்றுரைசெய்தால்
வாசியோகுறமாதுநவிலீரே. (௪)

## எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நலமலிதரும்புவனிநிறைசெய்புகழின்பநனி
பனிமதியணைந்தபொழில்சூழ்
பொலமதிலிரும்புகலியதிபதிவிதம்பெருகு
புனிதகுணனெந்தமிறைவன்
பலமலிதருந்தமிழின்வடகலைவிடங்கன்மிகு
பரசமயவென்றியரிதன்
சலமலிதருங்கமலசரணிணைவனென்றனது
தகுவினைகள்பொன்றும்வகையே. (௫)

## பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வகைதருமுத்தமிழாகரன்மறைபயிறிப்பியவாசகன்
வலகலைவித்தகன்வானவின்மதியணைபொற்குலவுமாளிகை
திகைதிகைமட்டலர்வார்பொழிறிகழ்புகலிக்கரசாகிய
திருவளர்விப்பிரசிகாமணிசெழுமலயத்தமிழ்சேசரி
மிகமதவெற்றிகொள்வாரணமிடைவருடைக்குலம்யாளிகள்
விரவிருளிற்றனிநீணெறிவினைதுயர்பொய்த்துளவேமணி
நகையெழிலிற்குறமாதுனதருமைநினைக்கிலணீயிய
ணசையின்முழுப்பழியாதன்முனணுகலினிக்கிரிவாணனே. ( )

## பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வாணிலவும்புனலும்பயில்செஞ்சடைவண்கருணைகரனை
மலைமாதுமையொடுமிவனுவானெனமுன்னாளுரைசெய்தவன்
சேணிலவும்புகழ்மாளிகைநீடியதென்புகலிக்கரசைத்
திருவாளனையெழிலருசாசனிதனைமருவாதவர்கிளைபோ
னாணிலவும்பழியோகருதாதயலானொருகாளையுட
னசைதீர்நிலைகொலைபுரிவேடுவர்பயிறருகானதர்வெயிலிற்

கேணிலவுங்கிளிபாவையொடாயமும்யாயெனையும்மொழியக்
கிறியாலெனதொருமகள்போயுறுதுயர்கெடுவேனறிகிலனே.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அறிவாகியின்பஞ்செய்தமிழ்வாதில்வென்றந்த
வமணனவன்குண்டர்கழுவேறமுன்கண்ட
செறிமாடவண்சண்பைநகராளியென்றந்தை
திருஞானசம்பந்தனணிநீடுதிண்குன்றி
னெறியாலமண்டின்றிமுனைநாள்சினங்கொண்டு
நிறைவார்புனந்தின்றுமகண்மேல்வருந்துங்க
வெறியார்மதந்தங்குகதவாரணங்கொன்ற
வெருளாதநஞ்சிர்கைவிறலானுளன்பண்டே. (அ)

பதின்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பண்டமுறுசெய்தநுமைமங்கையருண்மேவுசிவஞானம்
பைந்தராளநன்சிவிகைசெம்பொனணிநீடுசிறதாளங்
கொண்டதரனும்பர்பரனெங்கள்பெருமானருள்படைத்துக்
கொடுத்ததமிழைத்தவகுலத்தவர்களுக்குலகிலின்பங்
கண்டதருகந்தர்குலமொன்றிமுழுதுங்கழுவிலேறக்
கறுத்ததுவினைப்பயன்மனத்திலிறைகாதலதுவன்றி
விண்டுறவும்வஞ்சகரைமஞ்சணவுகின்றமணிமாட
வேணுபுரநாதன்மிகுவேதியர்சிகாமணிபிரானே. (௯)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பிரானைமெய்த்திருஞானசம்பந்தனைமறையவர்பெருமானைக் [திக்
குராமலர்ப்பொழிற்சொச்சையர்நாதனைக்குரைகழலிணைவாழ்த்
தராதலத்தினிலவனருணினைவொடுதளர்வுறுதமியேனுக்
கிராவினைக்கொடுவந்ததிவ்வந்திமற்றினிவிடிவறியேனே. (௧௦)

பதினொன்குசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஏனமுகத்தவபுத்தரையிந்திரசித்துமணம்புணர்வுற்று
னீழவஞர்சொரிதொட்டியினங்களை வெட்டியசித்தனர்பட்டர்

தானமிரக்கிறசிதைமடுப்பதுசாதிகுடத்தொடுகண்டீர்
சக்கிரவர்த்திகள்சிக்கரமட்டுவார்தத்துவமிப்பரிசுண்டே
யானபுகழ்ப்பயில்விப்ரசிகாமணியத்தகுமைப்புரையுங்கா [ஞே
ரார்பொழினீடியசண்பையர்காவலன்வண்களியே னெளியே
சோனகனுக்குமெனக்குமெனத்தரையம்மனைசூலதுகொண்டா
டும்புருவாலியையவென்றுநிலத்திடைநின்றுதுலுக்குகிருரே. ( )

## அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆர்மலிபுகலிநாதனருளெனவிரவில்வந்தென்
வார்முலைப்பலைதிரமணந்தவர்தணர்துபோன
தேரதரழியலும்மைச்செய்பிழையெம்மதில்லை
சார்திரைபுரளபோதிக்கரைபொருங்கடலினீரே. (௧௨)

## கலிவிருத்தம்.

கடன்மேவுபுவியேறுகவிநீரர்பெருமான்
றடமாடுமிகுகாழிதருபேதையருளாமற்
றிடமாகிலணிநீறுசெழுமேனிமுழுதாடி
மடலேறியெழில்வீதிவருகாதலொழியேனே. (௧௩)

## எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஒழியாதின்புறுபொழில்சூழ்சண்பைம
ணுயர்பார்துன்றியதகுஞானன்புக
ழெழிலாருங்கவுணியர்தீபன்றிக
ழிணையார்செங்கரனிகழ்வான்விண்குயின்
பொழியாநின்றனதுளிதார்கொன்றைகள்
புலமேறுன்றினகலைமானொன்றின
டழிமேல்கொண்டதுறுமர்தேரன்பொடு
மருகேவந்ததுவதுகாண்மங்கையே. (௧௪)

## அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மங்கையிடத்தரனைக்கவிநீரெதிரோடமதித்தருள்செய்
தங்குபுகழ்ச்சதுர்மாமறைநாவளர்சைவசிகாமணிதன்

றுங்கமதிற்பிரமாபுரமேவியசூழ்பொழிினின்றெளிர்மென்
கொங்கையுடைக்கொடியேரிடையாள்குடி கொண்டனளெம்ம
[னமே.

## எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மனங்கொண்டுநிறைகொண்டுகலையுங்கொண்டு
மணிநிறமுமிவள்செங்கைவளையுங்கொண்ட
தனங்கொண்டபெருஞ்செல்வந்திகழுங்கீர்த்திச்
சண்பையர்கோன்றிருஞானசம்பந்தற்கு
நனங்கொண்டுமெய்கொண்டுபயலைகொண்டே
நன்னுதலாளயர்கின்றாணுவேநின்று
மினங்கொண்டுநகைகொண்டுமடவீர்வாளா
வென்செயநீரலர்தூற்றியெழுகின்றீரே. (௧௬)

## இதுவுமது. வேறு.

எழுகுலவெற்பிவைமிடறிலடக்குவ
னெறிகடலிற்புனல்குளறிவயிற்றினின்
முழுதுமொளித்திரவியையிநிலத்திடை
முடிகுவனிப்பொழுதிவையலவிச்சைகள்
சமுமலநற்பதியதிபதமிழ்க்கடல்
கவுணியநற்குலதிலகனிணைக்கழ
றொழுதுவழுத்தியபிறரொருவர்க்குறு
துயர்வருவிப்பனிதரியதொர்விச்சையே. (௧௭)

## எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சயமிகுத்தருகரைமுருக்கியதமிழ்பயிற்றியநாவன்
வியலியற்றிருமருகலிற்கொடுவிடமழித்தருள்போதன்
கயலுடைப்புனல்வயல்வளத்தருகழுமலப்பதிநாத
னியலுடைக்கழறொழநினைப்பவரிருவினைத்துயர்போமே. (௧௮)

## எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மேதகுந்திசம்பூகநாகசண்பகசூத
வேரிவண்டறைசோலையாலைதுன்றியகாழி
நாதனந்தணர்சோனெஞானவண்புகழாளி
ஞானசுந்தரன்மேவுதார்நினைந்தயர்வேனை
நீதியன்றனபேசும்யாயுமிர்ந்துவும்வாச
நீடுதென்றலும்வீணையோசையுங்கரைசேர
மோதுதெண்டிரைசேவல்சேருமன்றிலும்வேயு
மூடுதண்பனிவாடைகூடிவன்பகையாமே. (௧௯)

## இதுவுமது. வேறு.

வன்பகையாமக்குண்டறைவென்றேய்
மாமலர்வாளிப்பொருமதவேளைத்
தன்பகையாகச்சிந்தையுணையுந்
தையலையுய்யக்கொண்டருள்செய்யாய்
நின்புகழ்பாடிக்கண்பனிசோரா
நின்றெழின்ஞானவென்றகநெக்கிட்
டன்பகலாமெய்ச்சிந்தையரின்பா
வம்பொழின்மாடச்சண்பையர்கோவே. (௨௰)

## இதுவுமது. வேறு.

கோயின்றிருமுகமீதொடுவருதூதுவனீர
குளிர்பைம்பொழில்வளநாடெழினிதியம்பரிசம்மீ
மாவீரியரிவர்தங்கையென்மகுடன்றிறமபணா
மறவெங்குலமறிகின்றிலன்பழியச்சதவரசன்
பாவேறியமதுரத்தமிழ்விரகன்புகலியர்மன்
பயில்வண்புகழருகாசனிபணியன்றெனினமர்சா
டுவேரியைமடுமின்றுடியடிமின்படையெழுமின்
ஒருதுசேனையுமவனும்படமலையும்பரிசினியே. (௨௧)

## எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இனியின்றொழிமினிவ்வெறியும்மறியடு
தொழிலும்மிடுகுரவையுமெல்லா
நனிசிறந்ததினிவண்மிகவன்புறுவதொர்
நசையுண்டதுநரைமுதுபெண்டீர்
புனிதன்புகலியாதிபன்புலைதமிழ்
விரகன்புயமுறுமரவிந்தம்
பனிமென்குழலியையணிமின்றுயரொடு
மயலுங்கெடுவதுசரதம்மே. (உஉ)

## எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சரதமணமலிபரிசம்வருவன
தளர்வில்புகலியாதிபனதிதரு
வரதனணிதமிழ்விரகன்மிகுபுகழ்
மருவுசுருதிநன்மலையினமர்தரு
விரதமுடையைநினிடையினவண்மனம்
விரைசெய்குழலியையணைவதரிதென
விரதமழிதரவருதன்முனமினி
யெளியதொருவகைகருதுமலையனே. (உ௩)

## இதுவுமது வேறு.

அயனெடியமாலுமவரறிவரியதாணுவர
னருளினெறுநீடவனியிடர்முழுதுபோயகல
வயலணிதென்வீழிமிழலையினிலவுகாசின்மலி
மழைபொழியுமானகுணமதுரன்மதிதோய்கனக
செயநிலவுமாடமதில்புடைதழுவுவாசமலி
செறிபொழில்சுலாவிவளர்சிரபுரசுரேசன்முதிர்
பயனிலவுஞானதமிழ்விரகன்மறைஞானமுணர்
பரமகுருநாதன்மிகுபரசமயகோளரியே. (உ௪)

## இதுவுமது. வேறு.

அரியாருங்கிரிநெறியெங்ஙனநீர்வந்தீ
ரழகிதினிப்பயமில்லையந்திக்கப்பாற்
றெரியாபுன்சிறுநெறிகளெந்தம்வாழ்விச்
சிறுகுடியின்றிரவிங்கேசிரமந்தீர்ந்திச்
சுரியார்மென்குழலியொடும்விடியச்சென்று
தொகுபுகழ்சேர்திருஞானசம்பந்தன்றன
வரியாரும்பொழிலுமெழின்மதிலுந்தோற்றும்
வயற்புகலிப்பதியினிதுமருவலாமே. (௨௫)

## ஈற்றடிமிக்குவந்த நான்கடிக்கலித்தாழிசை.

ஆமாண்பொன் கூட்டகத்தவஞ்சொலிளம்பைங்கிளியே
பாமாலையாழ்முரியப்பாணழியப்பண்டருள்செய்
மாமானசுந்தரன்வண்சம்பந்தமாமுனிவெங்
கோமான்றன்புகழொருகாலின்புறநீகூறுயே
கொச்சையர்கோன்றன்புகழ்யானினபுறநீகூறுயே. (௨௬)

## எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கூறதாகமெய்யடிமைதானெனையுடையகொச்சையரதிபதி
வீறதார்தமிழ்விரகன்மேதகுபுகழிஞனிவன்மிகுவனச்
சேறதார்தருதிரள்சுனைக்கணசெழுமுலைக்குரியவர்சினந்
தேறுதானிறதழுவிஞறெனவிடிகொண்மாமுரசதிருமே. (௨௭)

## அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சதுரன்புகலியரதிபன்கூர்
தவசுந்தரகவுணியர்தஞ்சீர்
முதல்வன்புகலியரதிபன்றுண்
முறைவந்தடையலர்நகரம்போ
லெதிர்வந்தனர்விறல்கெடவெம்போ
ரெரிவெங்கணைசொரிபுரிமின்கா

ரதிர்கின்றன விதுபருவஞ்சே
ரலர்தம்பதிமதிலிடிமின்னே. (உ௮)

## எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மின்னுமாகத்தெழிலியுஞ்சேர்
மிகுபொன்மாடப்புகலிநாதன்
றன்னுஞானத்தெம்பிரான்மெய்த்
தொகைசெய்பாடற்பதிகமன்னுள்
பொன்னுமாநற்றரளமுந்தன்
பொருகயற்கண்டனநிறைத்தா
ளின்னுமேகிப்பொருள்படைப்பா
னெங்ஙனேநானெண்ணுமாறே. (உ௯)

## பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மாறிலாதபொடிநீறேறுகோலவடிவும்
வம்புபம்புகுழலுந்துங்ககொங்கையிணையு
மூறியேறுபதிகத்தோதைநேசனுகர்வு
மொத்துநித்துநடையுஞ்சித்தபத்திமிகையும்
வீறதேறும்வயல்சூழ்காழிஞானபெருமான்
வென்றிதுன்றுகழலிறைஞ்சினின்றபணியுந்
தேறல்போலுமொழியுஞ்சேல்கள்போலும்விழியுஞ்
சிந்தைகொண்டபரிசுநன்றிமங்கைதவமே. (௩0)

## அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கைதவத்தாலென்னிடைக்கு
நீவந்ததறியேனோகலதிப்பாண
மெய்தவத்தாருயிரனைய
மிகுசைவசிகாமணியைவேணுக்கோனைச்
செய்தவத்தால்விதிவாய்த்த
செழுமலையாரவனுடையசெம்பொற்றிண்டோ

ளெய்தவத்தால்விளிவெனக்கென்
யாதுக்குநீபலபொய்யிசைக்கின்றுயே. (௩௧)

## எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இசையைமுகந்தெழுமிடறுமிதிங்கிவ
ளிடுகரணங்களினியல்பும்வளம்பொலி
திசைதிசைதுன்றியபொழில்சுலவுந்திகழ்
சிரபுரமன்றருதமிழ்விரகன்பல
நசைமிகுவண்புகழ்பயிலுமதங்கித
னளிர்முலைசெங்கயல்விழிநகைகண்டபின்
வசைதருமென்குலமவைமுழுதுங்கொள
மதிவளர்சிந்தனையயல்வருகின்றதே. (௩௨)

## இதுவுமது. வேறு.

வருகின்றனனென்றனதுள்ளமுநின்
வசமேநிறுவிக்குறைகொண்டுதணித்
தருகும்புனல்வெஞ்சுரம்யானமரும்
மதுநீயிறையுன்னிளையாதெனின்முன்
கருகும்புயல்சேர்மதில்வண்புகலிக்
கவிஞன்பயில்செந்தமிழாகரன்மெய்ப்
பெருகுந்திருவாரருள்பேணலர்போற்
பிழைசெய்தனைவந்ததர்பெண்கொடியே. (௩௩)

## இதுவுமது. வேறு.

கொடிநீடுவிடையுடையபெருமானையடிபரவு
குணமேதைகவுணியர்கள்குலதீபசுபசரித
னடியேனதிடர்முழுதுமறவீசுதமிழ்விரக
னணியானபுகலிநகரனையானகனைகடலின்
முடிநீடுபெருவலைகொடலையூடுபுகுவனுமர்
முறையேவுபணிபுரிவனணிதோணிபுனைவனவை

படிடாருநிகரரியவரியாருமதர்நயனி
பணைவார்மென்முலைநளையர்மடமாதுனருள்பெறினே. ()

## இதுவுமது. வேறு.

பெறுபயன்மிகப்புவியுளருளுவனபிற்றைமுறை
பெருநெறியளிப்பனபல்பிறவியையொழிச்சுவன
வுறுதுயரழிப்பனமுறுமைதிருவருட்பெருக
வுடையனநதிப்புனலினெதிர்பஃறியுயத்தனபு
னறுமுறுகுரைச்சமணீனநிரைகழுநிறுத்தியன
நனிகதவடைத்தனதுனருவிடமகற்றியன
துறுபொழின்மதிற்புறவமுறுபதிமனுப்பரிய
தொழில்பலமிகுத்ததமிழவிரகனகவித்தொகையே. (௩௯)

## பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தொகுவார்பொழில்சுற்றியவான்மதிதோயுமதிற்கனமார்
தொலையாததிருப்பொழின்மாளிகைமாடநெருங்கியசீ
மிகுகாழிமன்முத்தமிழாகரன்மேதகுபொற்புனைதார்
விரையார்கமலக்கழலேதுணையாகநினைப்பவர்தா
மகராதரநித்திலநீர்நிலையார்புவியுத்தமராய
வரலொறுபிழைப்பினிறுழியிலக்கிதமா
தருவாழ்வுநிலைத்தெழிலசேரறமானபயிற்றுவர்மா
சதுராலவினைசெற்றதன்மேலனுகார்பிறவிகடலே. (௩௰)

## நேரிசையாசிரியப்பா.

கருமங்கேண்மதிகருமங்கேண்மதி
தருமதிப்பாணகருமங்கேண்மதி
நிரம்பியபாடனின்கண்ணேடு
மரும்பசிநலியவலக்கணுற்றிளைத்துக்
காந்தியவுதரக்கனறழைத்தெழுதலிற்
றேய்ந்துடல்வற்றிச்சின்னரம்பெழுந்தே
யிறுகுபுசுள்ளியியற்றியகுரம்பை

யுறுசெறுத்தனையவுருவுகொண்டுள்வளை இ
பின்னிசைநல்லியாழ்சுமந்தன்ன
மன்னியவளநகர்மனைக்கடைதோறுஞ்
சென்றுழிச்சென்றுழிச்சில்பலிபெறுது
நின்றுழிநிலாவுவன்றுயர்போயொழிந்
தின்புற்றிருந்திடுவெய்யதுமதுநுன
துள்ளத்துள்ளதாயின்மதுமலர்
வண்டறைசோலைவளவயலகவ
கொண்டிறற்சேண்மீனுலாவுகுண்டக
ழுயர்தருவரையினியறருபதணத்துக்
கதிநுதிக்கமுக்கடைமிடைதருவேலிக்
கனகப்பருமுரட்கணையக்கபாட
வியலைக்கோபுரவிளங்கெழில்வாயி
னெகிழ்ச்சியில்வகுத்துத்திகழ்ச்சிபிலொங்கு
மஞ்சணையிஞ்சிவண்கொடிமிடைந்த
செஞ்சுடர்க்கனகத்திகழ்சிலம்பனைய
மாளிகையோளிச்சூளிகைவளாகத்
தணிவுடைப்பலபடமணிதுடைத்தழுத்திய
நலவொளிபரந்துநயந்திகழ்ந்திர
வில்லொளிபலபலவிசும்பிடைக்காட்ட
மன்னியசெல்வத்துத்துன்னியபெருமைச்
செம்மலர்மாதுசேர்ந்திறைபிரியாக்
கழுமலநாதன்கவுணியர்குலபதி
தண்டமிழ்விரகன்சைவசிகாமணி
பண்டிதரின்பன்பரசமயகோளரி
தென்புனைதமிழ்கொண்டிரங்கியென்னுளத்
தன்பினையருளியவாண்டகைதன்புகழ்
குறைவறுத்துள்கிநிறைகடைகுறுகி
நாபொலிநல்லிசைபாட
மாபெருஞ்செல்வமன்னுதிநீயே. (௧௭)

### வஞ்சித்துறை.

நீதியினிறைபுகழ்
மேதருபுகலிமன்
மாதமிழ்விரகனை
யோதுவதுறுதியே. (௩௮)

### எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உறுதிமுலைதாழவெனையிகழுநீதி
யுனதுமனமாரமுழுதுமதாக
வறுதிபெறுமாதர்பெயரருகருணு
மழகிதினியானுனருள்புனைவதாவ
பெறுதியிலைவநீயெனடிபணிதன்மேவு
பெருமைகெடநீடுபெடிஞெழிபொன்மாட
நறைகமழுவாசவளர்பொழில்சுலாவு
நணிபுகலிநாததமிழ்விரகநீயே. (௩௯)

### ஆசிரியத்துறை.

நீமதித்துன்னிநினையேன்மடநெஞ்சமே
சாமதிக்கார்பொழிற்காழி
நாமதிக்கும்புகழ்ஞானசம்பந்தனொண்
பூமதிக்குங்கழல்போற்றே. (௪0)

### கட்டளைக்கலிப்பா.

போற்றிசெய்தரன்பொற்கழல்பூண்டதே
புந்தியானுந்தம்பொற்சழல்பூண்டதே
மாற்றியிட்டதுவல்விடவாதையே
மன்னுசுண்டரைவென்றதுவாதையே
யாற்றெதிர்ப்புனலுற்றதந்தோணியே
யானதன்பதியாவதந்தோணியே
நாற்றிசைக்கவிஞானசம்பந்தனே
நல்லநாமமுஞானசம்பந்தனே. (௪௧)

## கைக்கிளைமருட்பா.

அம்புந்துகண்ணிமைக்குமானநுதல்வியர்க்கும்
வம்புந்துகோதைமலர்வாடுஞ்—சம்பந்தன்
காமருகழுமலமனையா
ளாமிவளணங்கலளடிநிலத்தனவே. (சஉ)

## பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தனமுந்துகிலுஞ்சாலிக்குவையுங்கோலக்கனமாடச்
சண்பைத்திகழ்மாமறையோன்றவமெய்க்குலதீபன்
கனவண்கொடைநீடருகாசனிதன்கமலக்கழல்பாடிக்
கண்டார்நிறையக்கொள்ளப்பசியைக்கருதாதெம்பாண
புனைதண்டமிழின்னிசையார்புகலிக்கரசைப்புகழ்பாடிப்
புலையச்சேரிக்காளைபுகுந்தாலென்சொற்புதிதாக்கிச்
சினவெங்கதமாக்களிறொன்றிந்தச்சேரிக்கொடுவந்தார்
சேரிக்குடிலுமிழந்தாரிதனைச்செய்வததியாரே. (சங)

## இன்னிசைவெண்பா.

யாரேயெம்போலவருளுடையாரின்கமலத்
தாரேயுஞ்சென்னித்தமிழ்விரகன்—சீரேயுங்
கொச்சைவயன்றன்குரைகழற்கேமெச்சி
யடிமைசெயப்பெற்றேனறிந்து. (சச)

## பதின்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அறிதருநுண்பொருள்சேர்பதிகம்மரன்கழன்மே
லணிதருசுந்தரமலிதமிழ்விரகன்பிறைதோய்
செறிதருபைம்பொழின்மாளிகைசுலவுந்திகழ்சீர்த்
திருவளர்சண்பையின்மாடலைகடலொண்கழிசே
ரெறிதிரைவந்தெழுமீனிரைநுகர்கின்றிலைபோ
யினமுமடைந்திலைகூரிடரோடிருந்தனையா

லுறுதுயர்சிந்தையினூடுதவினரெந்தமர்போ
லுமருமகன்றனரோவிதுவுரைவண்குருகே. (௪௫)

## கலிவிருத்தம்.

குருகணிமணிமுன்கைக்கொடியுநல்விறலவனு
மருகணைகுவரப்பாலரிதினிவழிமீண்மின்
றருகெழுமுகில்வண்கைத்தகுதமிழ்விரகன்றன்
கருகெழுபொழின்மாடக்கழுமலவளநாடே. (௪௬)

## இதுவுமது. வேறு.

நாடேறும்புகழ்ஞானசம்பந்தன்வண்
சேடேறுங்கொச்சைநேர்வளஞ்செய்தனை
மாடேறுந்தையல்வாடமலர்ந்தனை
கோடேறுங்கொடியாய்கொல்லைமுல்லையே. (௪௭)

## எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முல்லைநகையுமைதன்மன்னுதிருவருளை
முந்தியுறுபெரியசெந்தண்முனிவன்மிகு
நல்லபொழில்சுலவுதொல்லையணிபுகலி
நாதன்மறைமுதல்வன்வேதமலையதனில்
வில்லையிலர்கணையுமில்லைபகழியுறு
வேழமிரலைகலைகேழல்வினவுறுவர்
சொல்லையிலர்விரகரல்லர்தழைகொணர்வர்
தோழியிவரொருவராவவழிதர்வரே. (௪௮)

## வஞ்சித்துறை.

வழிதருபிறவியினுறு
தொழிலமர்துயர்கெடுமிகு
பொழிலணிதருபுகலிம
னெழிலிணையடியிறைமினே. (௪௯)

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பி

அருளிச்செய்த

# ஆளுடையபிள்ளையார் திருத்தொகை.

பூவார்திருநுதன்மேற்பொற்சுட்டியிட்டொளிரக்
கோவாக்குதலைசிலம்புரற்ற—வோவா
தழுவான்பசித்தானென்றங்கிறைவன்காட்டத்
தொழுவான்றுயர்தீர்க்குந்தோகை—வழுவாமே
முப்பத்திரண்டறமுஞ்செய்தாண்முதிராத
செப்பொத்தகொங்கைத்திருநுதலி—யப்ப
னருளாலேயூட்டுதலுமப்பொழுதேஞானத்
திரளாகிமுன்னின்றசெம்ம—லிருடீர்ந்த
காழிமுதல்வன்கவுணியர்தம்போரேறு
ஊழிமுதல்வனுவனென்று—காட்டவலான்
வீழிமிழலைப்படிக்காசுகொண்டபிரான்
பாழியமணைக்கழுவேற்றினான்யாணர்
யாழைமுரித்தானெரிவாயினம்பதிக
மாழியுலகத்தழியாமற்காட்டினா
னேழிசைவித்தகன்வர்தேனோரும்வானோருந்
தாழுஞ்சரணச்சதங்கைப்பருவத்தே
பாலையுநெய்தலும்பாடவலான்—சோலைத்
திருவாவடுதுறையிற்செம்பொற்கிழியொன்
றருளாலேபெற்றருளுமையன்—றெருளாத
தென்னவனாடெல்லார்திருநீறுபாலித்த
மன்னன்மருகல்விடந்தீர்த்தபிரான்—பின்னைத்தென்
கோலக்காவிற்றாளம்பெற்றிக்குவலயத்தின்
மாலக்காலத்தேமாற்றினான்—ஞாலத்து
முத்தின்சிவிகையரன்கொடுப்பமுன்னின்று

தித்தித்தபாடல்செவிக்களித்தா—னித்திலங்கண்
மாடத்தொளிருமறைக்காட்டிறைகதவைப்
பாடியடைப்பித்தபண்புடையா—னீடுந்
திருவோத்தூராண்பனையைப்பெண்பனையாகென்னும்
பெருவார்த்தைதானுடையபிள்ளை—மருவினிய
கொள்ளம்பூதூர்க்குழகனுவந்துகொடுப்ப
வுள்ளமேகோலாகவூன்றினான்—வள்ளன்
மழவன்சிறுமதலைவான்பெருநோய்தீர்த்த
குழகன்குலமறையோர்கோமா—னிலவிய
வைகையாற்றேடிட்டுவான்றெதிரோட்டுஞ்
செய்கையான்மிக்கசெயலுடையான்—வெய்யவிட
மேவியிறந்தவயில்வேற்கண்மடமகளை
வாவென்றழைப்பித்திம்மண்ணுலகில்வாழ்வித்த
சீர்நின்றசெம்மைச்செயலுடையா—னேர்வந்த
புத்தன்றலையைப்புவிமேற்புரள்வித்த
வித்தகப்பாடல்விளம்பினான்—மொய்த்தொளிசேர்
கொங்கைச்சுரன்றன்கோமானைத்தான்செய்த
பச்சைப்பதிகத்துடன்பதினாறாயிரம்பா
வித்துப்பொருளைவிளைக்கவல்லபெருமான்
முத்திப்பசவமுதல்வன்றிருவடியை
யத்திக்கும்பத்தரெதிராணைநமதென்னவலான்
கத்தித்திரிபிறவிச்சாகரத்துளாழாமே
பத்தித்தனித்தெப்பம்பார்வாழத்தந்தபிரான்
பத்திச்சிவமென்றுபாண்டிமாதேவியொடுங்
கொற்றக்கதிர்வேற்குலச்சிறையுங்கொண்டாடு
மற்றைப்பொழுதத்தமணரிடுவெந்தீயைப்
பற்றிச்சுடுகபோய்ப்பாண்டியனையென்னவல்லான்
வர்த்தமானீசர்கழல்வணங்கிவாழ்முருகன்
பத்தியையீசன்பதிசத்தேகாட்டினா
னத்தன்றிருநீலநக்கற்குமன்புடையான்

முத்தமொழிக்குதலைத்தூயவாய்நன்னுதலி
நித்திலப்பூண்முலைக்குநீண்டதடங்கண்ணினுக்குங்
கொத்தார்கருங்குழற்குங்கோலச்செங்கைம்மலர்க்கு
மத்தாமரையடிக்குமம்மென்குறங்கினுக்குஞ்
சித்திரப்பொற்காஞ்சிசெறிந்தபேரல்குலுக்கு
முத்தமிழ்நூலெல்லாமுழுதுணர்ந்தபிள்ளையார்க்
கொத்தமணமிதுவென்றேத்தித்தமர்களெல்லாஞ்
சித்தங்களிப்பத்திருமணஞ்செய்சாவணத்தே
யற்றைப்பொழுதத்துக்கண்டேனேநிற்கப்
பெற்றவர்களோடும்பெருமணம்போய்ப்புக்குத்த
னத்தனடியேயடைந்தானழகிதே.

**திருச்சிற்றம்பலம்.**

திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பி

அருளிச்செய்த

# திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை.



புலனொ டாடித் திரிமனத்தவர் பொறிசெய் காமத் துரிச டக்கிய - புனித நேசத் தொடுத மக்கையர் புணர்வி னாலுற்று வரசெ யக்குடர், சுலவு சூலைப் பிணிகெ டுத்தொளிர் சுடுவெ ணீறிட் டமண கற்றிய - துணிவி னான்முப் புரமெ ரித்தவர் கழலி லேபட் டிடுத வத்தின, ருலகின் மாயப் பிறவி யைத்தரு முணர்வி லாவப் பெரும யக்கினை - யொழிய வாய்மைக் கவிதை யிற்பல வுபரி பாகப்பொருள்ப ரப்பிய, வலகில் ஞானக் கடலி டைப்படு மகிழ்ந்த யோகச் சிவவொ ளிப்புக - வடிய ரேமுக் கருணை யைச்செயு மரைய தேவத் திருவ டிக்கணே. (௧)

திருநாவுக் கரசடி யவர்நாடற் கதிநிதி - தெளிதேனொத் தினியசொன் மடவா ரூர்ப்பசி முதல், வருவானத் தரிவையர் நடமாடிச் சிலசில - வசியாகச் சொலுமவை துகளாகக் கரு திமெய், யுருஞானத் திரண்மன முருகாநெக் கழுதுகண் ணுழ வாரப் படைகையி லுடையான்வைத் தனதமிழ், குருவாகக் கொடுசிவ னடிசூடத் திரிபவர் - குறுகார்புக் கிடர்படு குடர் யோனிக் குழியிலே. (௨)

குழிந்து சுழிபெறுநா பியின்கோண் மயிர்நிரையார் - குரு ம்பை முலையிடையே செலுந்தகைநன் மடவா, ரழிந்த பொ சியதிலே கிடந்திரவு பகனீ - யளைந்தயரு மதுநீ யழிந்திலை கொ ன்மனமே, கழிந்தகழிகிடோ னினங்கிதய நெகவே - கசிந்தி தய மெழுநா றரும்பதிக நிதியே, பொழிந்தருளு திருநா வி னெங்களர சினையே - புரிந்துநினை யிதுவே மருந்துபிறி தி லையே. (௩)

இலைமா டென்றிடர் பரியா ரிந்திர னேயொத் தறுகுறை வற்றூலு, நிலையா திச்செல்வ மெனவே கருதுவர் ஈசன் மக் கட லிடையிப்புக், கலையார் சென்றா னெறியா குங்கரை யண் ணைப் பெறுவர்கள் வண்ணத்திண், சிலைமாடந்திகழ் புகலூ ரூ ருறை திருநா வுக்கர சென்போரே. (௪)

என்பட் டிக்கட்டிய விந்தப்பைக் குரம்பையை - யிங்கிட் டிச் சுட்டபி னெங்குத்தைக் குச்செலுமிது, முன்பிட்டுச் சுட் டிய ருந்திக் கெத்திக் கென - மொய்ம்புற்றுக் கற்றறி வின்றி க்கெட் டுச்சில, வன்பட்டிப் பிட்டர்க டின்புற்றுப் புத்தியை - வஞ்சித்துக் கத்திவி முந்தெச்சுத் தட்டுவ, ரன்பர்க்குப் பற்றி லர் சென்றார்ச்சிக் கினறில ரந்தக்குக் கிக்கிரை சிந்தித் தப்பி த்தரே. (௫)

பித்தரசு பதையாத கொத்தைநிலை யுளதேவு - பெட்டியு ரை செயதுசோறு சுட்டியுழல் சமண்வாயர், கைத்தரசு பதை

யாத சித்தமொடு சிவ்பூசை - கற்றமதி யினனேனைசை யித்தரசு புகழ்ஞால, முத்திபெறு திருவாள னெற்றுணையின் மிதவாமல் - கற்றுணையில் வருபாதி, பத்தரசு வசைதீர வைத்ததனே தமிழ் மாலை - பற்பலவு மவையோத நற்பதிக நிதிதானே. (௬)

பதிகமே ழெழுநூறு பகருமா கவியோகி - பரசுநா வரசான பரமகா ரணவீச, னதிகைமா நகர்மேவி யருளினா லமண்மூட - ரவர்செய்வா தைகடஉரு மனகன்வார் கழல்சூடி, னிதியரா குவர்சீர்மை யுடையரா குவர்வாய்மை - நெறியரா குவர்பாவம் வெறியரா குவர்சால, மதியரா குவரீச னடியரா குவர்வான முடையரா குவர்பாரின் மனிதரா னவர்தாமே. (எ)

தாமரைநகு மகவிதழ் தருவன சாய்பெறுசிறு தளிரிணையனையன - சார்தருமடி யவரிடர் தடிவன தாயினுநல கருணையையுடையன, தூமதியினை யொருபது சொடுசெய்த சோதியின்மிகு கதிரினையுடையன - தூயனதவ முனிவர்க டொழுவன தோமறு குணநிலையின தலையின, வோமரசினை மறைகளின் முடிவுகளொலிடுபரி சொடுதொடர் வரியன-வோவறு முணர் வொடுசிவ வொளியனை யுறியசி வொடுகவி செய்தபுக, ழாமரசுய ரகநெகு மவருள ஞரரசதி கையினர னருளவ - ஞமரசுகொ ளரசெனை வழிமுழு தாளரசுத னடியிணை மலர்களே. (அ)

அடிநாயைச் சிவிகைத் தவிசேறித் திரிவித் தறியாவப் பசுதைச் சிறியோர்பாற் செறியுங், கொடியேனுக் கருளைத்திருநாவுக் கரசைக் குணமேருத் தனைவிட் டெனையாமொட் டகல்விற், பிடியாரப் பெறுதற் கரிதாகச் சொலுமப் பிணநூலைப் பெருகப் பொருளாகக் கருதுஞ், செடிகாயத் துறிகைச் சமண்மூடர்க் கிழவுற் றதுதேவர்க் கரிதச் சிவலோகக் கதியே. (௯)

சிவசம் பத்திடைத் தவஞ்செய்து திரியும் பத்தியிற் சிறந்தவர் - திலகன் கற்றசிட் டன்வெந்தொளிர் திகழும் பைம்பொடித் தவண்டணி, கவசம் புக்குவைத் தரன்சழல் கருதுஞ் சித்த

னிற் கவன்றிய - கரணங் கட்டுதற் கடுத்துள களகம் புக்கற கவந்திய, னவசம் புத்தியிற் கசிந்துகொ டழுகண் டத்துலைத் தளித்தன - னனகன் குற்ற மற்ற பண்டித னரசெங்கட்கோர் பற் றுவந்தறு, பவசங் கைப்பதைப் பரஞ்சுடர் படிறின் றித்த னைத் தொடர்ந்தவர்-பசுபந் தத்தினைப் பரிந்தடு பரிசொன் றப்ப ணிக்கு நன்றுமே. (௧௦)

நன்றுமாதரநாவினுக்கரைசடிகளினம்லவத்துயினல்லா
லொன்றுமாவதுகண்டிலமுபாயமற்றுள்ளனவேண்டோமா
லென்றுமாதியுமந்தமுமில்லதோரிகபரத்திடைப்பட்டுப் [டே.
பொன்றுவார்புகுஞ்சூழலிற்புகேம் புகிற்பொறியிலைம புலனே

திருச்சிற்றம்பலம்.



# பாட்டுமுதற்குறிப்பகராதி.



பாட்டுமுதற்குறிப்பகராதி முற்றிற்று.

